கோவையை
மீண்டும்
பிடிக்குமா பா.ஜ.க.?
—ஸ்பெஷல் ரிப்போர்ட்

# கல்கி

KALKI 29.8.99 ரூ. 4.50



## உற்சாக வெள்ளத்தில் உடன்பிறப்புகள்!

-கலைஞருடன் ஒரு பயணம்

# பில்ராத்
## மருத்துவமனை

**முதன்முதலில்**
அதிநவீன லேசர் கருவியுடன்
**லேப்ராஸ்கோப்பி**
**சிகிச்சை**



## வயிறு

சம்பந்தப்பட்ட அனைத்து
நோய்களுக்கும் ஓர் முழுமையான

## தீர்வு

- அல்சர்
- அபண்டிசைடிஸ்
- குடல் இறக்கம் (Hernia)
- பித்தப்பை கற்கள் (Gall Bladder Stones)
- கர்ப்பப்பை நோய்
- ஓவரியில் கட்டி எடுத்தல் (Ovarian Cyst Removal)
- குடும்பக் கட்டுப்பாடு சிகிச்சை

சிறப்பு அம்சங்கள்

- ரத்த இழப்பு இல்லை
- தழும்பு ஏற்படாது
- உடனே பழைய நிலைக்குத் திரும்பலாம்

♦♦♦

## அறுவை இல்லா
## மூல வியாதி
## சிகிச்சை

**சிறப்பு சிகிச்சை :**

- ❊ லேசர் சிகிச்சை
- ❊ கிரையோ சிகிச்சை
- ❊ கதிர் வீச்சு சிகிச்சை



**BILLROTH HOSPITAL**
24 HOURS SERVICE

43, லட்சுமி டாக்கீஸ் சாலை, செனாய் நகர், சென்னை-600030. போன் : 6440020 / 6441777.

# சூப்பர் பையன்!



சூப்பர் அப்பா, சூப்பர் பையன், சூப்பர் வண்டி என்று டெலிவிஷனில் வரும் மொபெட் விளம்பரம் பார்த்திருக்கிறீர்களா? அதிலே வரும் அப்பா (டெல்லி கணேஷ்), வண்டி இரண்டும் பிரபலம். அந்த சூப்பர் பையன் வெள்ளித் திரையில் அறிமுகமாகி றார், டைரக்டர் மணிரத்னத்தின் உபயத் தில். அவர் பெயர் ஹரி நாயர். பிறப்பில் கேரளர். படிப்பில் பெங்களூர். மலையாளம், கன்னடம், தமிழ், இந்தி, ஆங்கிலம் எல்லாம் தெரிகிறது.

சக்ரா கோல்டு டீ விளம்பரத்திலும், பாண்ட்ஸ் டால்கம் பவுடர் விளம்பரங்களில் தோன்றுவதும் கூட ஹரிதான்.

ஹரியின் தாத்தா ஒரு கவிஞர். அப்பா ஒரு ரைட்டர். பேரன் நடிக்கிறார். "ஆக கலைக் குடும்பம்தான்" என்றால், "நீங்கள் நினைப்பது போல, என் அப்பா இலக்கியவாதி இல்லை. சட்ட டாகுமென்ட்கள் எழுதுபவர்" என்கிறார்.

ஹரிக்கு, மேக்-அப் டெஸ்ட் தினத்தன்று பயங்கர டென்ஷன்.

காரணம், கூட மேக்-அப் டெஸ்டிற்கு வந்திருந்த டீவி. தொகுப்பாளினி ஸ்வர்ணமால் யாவோ தமிழில் கலகலா; படபடா. ஹரிக்கோ, தமிழ் அத்தனை சரியாய்த் தெரியாது. கொடுத்த வசனத்தை அரைமணி நேரத்தில் மலையாளத் தில் எழுதி வைத்துக் கொண்டு, மனப்பாடம் செய்து பேசி வந்து விட்டார்.

"நான் எப்போதுமே, பெரும் எதிர்பார்ப்புகளை வைத்துக் கொள்ள மாட்டேன். எனவே ஏமாற்றங்கள் என்னைப் பாதிக்காது. இரண்டு நாளில், மணி சார் ஆபீஸிலிருந்து தேர்வு ஆகி விட்டதாகத் தகவல் வந்தபோது இரட்டிப்பு சந்தோஷம்."

"**ம**ணிரத்னம் படத்தில் எப்படி வாய்ப்புக் கிடைத்தது?"

என் புகைப்படங்கள் சிலவற்றை பிஜூ ஜெயதேவன் என்ற மாடல் கோ ஆர்டினேட்டரிடம் கொடுத்திருந்தேன். அலைபாயுதே படத்திற்குப் புதுமுகங்கள் தேவைப்பட்டபோது, பிஜூ அனுப்பிய புகைப்படங்களிலிருந்து, என்னைத் தேர்ந்தெடுத்து மேக்-அப் டெஸ்ட் எடுத்தார் மணி சார்! செலக்ட் ஆனேன்."

பள்ளிப் படிப்பை முடித்து விட்டு, பெங்களூரில் ஹரி படித்தது கேடரிங் டெக்னாலஜி. அதன்பின் இரண்டு வருடம் அதே துறையில் வேலை பார்த்துக் கொண்டிருந்தவர், கூடவே மாடலிங்கிலும் ஈடுபட்டிருக்கிறார். "எமிரேட் ஏர்லைன்ஸ் நிறுவனத்தில் வேலை கிடைத்து, துபாய் போயாக வேண்டும். அதே சமயம், சினிமா ஆசையும் இருந்தது. துணிந்து துபாயைத் துறந்து விட்டு, பெங்களூரிலேயே தங்கி விட்டேன். அது நான் எடுத்த நல்ல முடிவு என்றே நினைக்கிறேன்!" என்கிறார்.

"சினிமாவில் அறிமுகமாகிற போது ஹீரோவாக அறிமுகமாக வேண்டும் என்றுதான் எவரும் விரும்புவார்கள். ஆனால் உங்களுக்கு 'அலைபாயுதே' படத்தில் இரண்டாவது ஹீரோ ரோல் என்று சொல்லலாம். இதில் உங்களுக்கு வருத்தம்தானே?"

"ஒரே நாளில் பெரிய அந்தஸ்து கிடைக்க வேண்டும் என்று நான் பேராசைப்படவில்லை. ஏணியில் நிதானமாக ஏறி, அழுத்தமாகத் தடம்பதிக்க வேண்டும் என்றுதான் விரும்புகிறேன்."

— கௌதம்

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

சேலையூரில் சற்று உள்வாங்கிய இடத்தில் இருக்கிறது தலித் எழில்மலையின் வீடு. பற்களில் உண்டான தொற்று (infection) காரணமாக காய்ச்சலில் அவதிப்பட்டுப் பேசுவதில் சிரமம் இருந்தாலும், "கல்கிக்காகப் பேசுவதில் சந்தோஷம்தான்" என்றார். பேட்டியிலிருந்து:

# "துரோகத்துக்கு பதில் சொல்ல



**"பதிமூன்று மாத காலம் அமைச்சராக பிஸியாக இருந்து விட்டு, இப்போது தேர்தலில் போட்டியிட வாய்ப்புக் கிடைக்காத சூழலில், ஒரு பட படப்போடு கிடைத்திருக்கிற இந்த ஓய்வைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"**

"நான் அமைச்சரானபோது எப்படி எந்த வித ஆச்சரியத்துக்கும், ஆர்ப்பாட்டத்துக்கும் ஆளாகவில்லையோ, அதேபோல இப்போது பதவியில் இல்லாதது பற்றியும் துளியும் வருத்தமில்லை. ஆனால் பதிமூன்று மாத காலத்தில் செய்த காரியங்கள் மனதுக்கு மருந்தாக இருக்கின்றன. பிரதமர் முதற்கொண்டு எல்லோரிடமும் நல்ல அமைச்சர் என்று பெயர் வாங்கினேன். 2000 ஆண்டில் போலியோ, 2001ல் லெப்ரஸி, 2003ல் மலேரியா ஆகியவை அறவே ஒழிக்கப்படும் வகையில் பணிகள் நடைபெற்று வருகின்றன. என்னிடம் வரும் கோப்பு ஒரு நாளைக்கு மேல் என் மேசைமேல் இருக்காது. மூத்த அதிகாரியான பி.பி. சிங் மிகவும் ஆச்சரியப்பட்டு 'பல்வேறு தலைவர்களிடம் பணியாற்றி இருக்கிறேன். உங்கள் செயல்பாடுகள் வியக்க வைக்கின்றன'' என்று பாராட்டினார். தமிழகத்துக்கு 120 கோடியில் சித்தா ஆராய்ச்சி நிலையம் கொண்டு வந்து இருக்கிறேன். என்னால் கட்சிக்கு எந்த அவப் பெயரும் வராத அளவில் பணியாற்றி இருக்கிறேன்!"

**''பொதுவாக பா.ஜ.க. அரசில் ஆர்.எஸ்.எஸ். தலையீடு என்று அரசல்புரசலாக அவ்வப்போது செய்திகள் வரும்; உங்கள் துறையைப் பொறுத்த மட்டில் எப்படி?"**

"ஆர்.எஸ்.எஸ். இயக்கம் மட்டுமல்ல; பல்வேறு இயக்கத்தைச் சேர்ந்த அமைச்சர்களிடம் பழகக் கூடிய வாய்ப்புக் கிடைத்தது. ஆனால் யாருமே என் துறையில் மூக்கை நுழைத்து செல்வாக்கைப் பிரயோகித்ததில்லை. மாறாக என் கட்சித் தலைவரே எனக்குப் பின்னால் நிழல் போன்று செயல்படச் சிலரை நியமித்திருந்தார். சிபாரிசுகள், நீதி விவகாரங்கள் என்று புகுந்து விளையாடிய அவர்களிடமிருந்து என்னைக் காத்துக் கொள்வதற்குத்தான் மிகவும் சிரமப்பட வேண்டியிருந்தது. குடும்பத்தினர் எல்லோரும் தில்லியில் உட்கார்ந்து கொண்டு என்னை அவர்கள் இஷ்டப்பட்ட விதத்தில் ஆட்டி வைக்க நினைத்தார்கள்.

ஆனால் இந்த எழில்மலை எந்தவித 'அழுத்தத் துக்கும்' ஆளாகாமல் பெயரைக் காப்பாற்றிக் கொண்டான்; இதற்குக் காரணம் அரசியலைப் பிழைப்பாகக் கொண்டவனல்ல நான். அரசியலில் இருந்துதான் வயிற்றை நிரப்ப வேண்டும் என்ற அவசியம் என்றைக்

# ராமதாஸ் வேண்டும்!"

கும் இருந்ததில்லை! எதிர்காலத்திலும் இருக்காது. அரசியலில் கிடைத்த வாய்ப்பை என் மக்களின் நல்வாழ்விற்காக அர்ப்பணித்துக் கொண்டவன். சுயமரியாதைக்காரன். நான் யாருக்கும் எஜமானனாகவும் இருக்க மாட்டேன்; அதேபோல் அடிமையாகவும் என்னை நடத்த முடியாது. பதவிகளை எதிர்பார்த்து அரசியலுக்கு வந்தவனல்ல நான். என் பாதை தெளிவானது."

**"தேர்தல் செலவுகளுக்காக உங்களிடம் கட்சி நிதி கேட்டதாகவும்; நீங்கள் மறுத்து விட்டதால்தான் ஸீட் கொடுக்கவில்லை என்றும் ஒரு செய்தி வந்ததே!"**

"கட்சி என்னிடம் நிதி கேட்க வேண்டிய நிலையில் இல்லை. காரணம், அதை வசூல் செய்யத்தான் தலைமை, ஆட்களை நியமித்து இருந்ததே. போதாதற்கு பெட்ரோலியத் துறை அமைச்சரை அத் துறையிலிருந்து நீக்கினால் நாங்களும் அமைச்சரவையிலிருந்து விலகுவோம்' என்று சொல்கிற அளவுக்கு எங்கள் தலைமை அவருடன் நெருக்கமாக இருந்தது."

**"ஒரு தேர்தலில் கட்சி ஸீட் இல்லை யென்றவுடன் விலகி விட வேண்டுமா என்ன?"**

"அந்தக் கட்சியில் பத்து, பன்னிரண்டு வருடங்கள் செருப்பாய் உழைத்தவன் நான். கட்சி நடத்திய போராட்டங்கள் எல்லாவற்றிலும் கலந்து கொண்டு ஜெயிலுக்குப் போனவன். எந்தவித அப்பழுக்கும் இல்லாமல் அமைச்சராகப் பணியாற்றியவன். வாஜ்பாய் அமைச்சரவை அமைக்கும்போது, வாழப்பாடிக்கு சிபாரிசு செய்தார் ராமதாஸ். அப்போது, தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த 'தலித்துக்குக் கொடுக்கலாமே' என்று சிபாரிசு செய்தவர் ஜெயலலிதாதான். இயக்கத்துக்கு நான் இரவும், பகலுமாக உழைத்ததற்கு தலைமை தான் என்னை அரவணைத்துச் சென்றிருக்க வேண்டும்."

**"டாக்டர் ராமதாஸுக்கு உண்மையிலேயே தாழ்த்தப்பட்டவர்கள் மீது எந்த வித அக்கறையும் கிடையாது என்கிறீர்களா?"**

"தாழ்த்தப்பட்டவர்கள் மீது மட்டுமல்ல; வன்னியர்கள் மீதே எந்த அக்கறையும் கிடையாது. கட்சி அவருக்காகவும் அவரது குடும்பத்துக்காகவும்தான் பயன்படுத்தப்படுகிறது. எந்தெந்த லட்சியங்களுக்காகக் கட்சி உருவாக்கப்பட்டதோ அந்த லட்சியங்களை விட்டு விலகியாகி விட்டது."

**"சுயமரியாதையுடன் செயல்படுவதாகச் சொல்லும் நீங்கள் கிட்டத்தட்ட சர்வாதிகாரப் போக்கில் செயல்படும் அ.இ.அ.தி.மு.க.வில் சேருவது நெருடுகிறதே!"**

"வந்தவன், போனவன், மாமன், மச்சான், மகன், மருமகன் என்று எல்லோருக்கும் பதில் சொல்லிக்கொண்டு ஒரு கட்சியில் இருப்பதை விட, ஒரு தலைவரின் கீழ் இருந்துகொண்டு, அவர் கட்டளைக்கு ஏற்பச் செயல்படுவதில் தவறேதும் இல்லை. அது தவிர 1989ல் இருந்து 1996 வரை சிதம்பரம் தொகுதியில் மூன்று முறை போட்டியிட்டபோது தோல்வி அடைந்தேன். 1998ல் வெற்றி பெறக் காரணம் அண்ணா தி.மு.க. கூட்டணிதான். அவர்களுடைய ஆதரவால்தான் வெற்றி பெற்றேன். மேலும் எந்த மக்களுக்காக நான் பணி செய்து கொண்டிருக்கிறேனோ அந்த மக்கள் அதிக அளவில் அ.இ.அ.தி.மு.க.வில்தான் இருக்கிறார்கள். எனவே அ.தி.மு.க.வில் சேருவது பொருத்தமே!"

**"தொகுதியில் தொண்டர்கள் மத்தியில் உங்கள் மீது அதிருப்தி இருந்ததால் தான் ஸீட் கொடுக்கவில்லை என்கிறாரே ராமதாஸ்?"**

"அதெல்லாம் சுத்தப் பொய். நான் அவரது சுற்றத்தாருக்கு ஏற்றபடி செயல்படாததுதான் அவருக்கு அதிருப்தி! கட்சியே அவர்தானே. தொண்டர்களைப் பற்றியெல்லாம் அவர் கவலைப்பட்டது கிடையாது. அவரது பதேச் சாதிகார செயல்பாடு காரணமாகப் பல நல்லவர்கள் கட்சியை விட்டு விலகி விட்டார்கள். கருவேப்பிலை போல் தூக்கிப் போட்டு விடுவார். அதற்கு உதாரணம்தான் நான்! துரோகத்துக்கும், மோசடிக்கும் டாக்டர் ராமதாஸ் பதில் சொல்ல வேண்டிய காலம் வந்தே தீரும்!"

சந்திப்பு: **ஸ்ரீநிவாசன்**

— எரிமலையாகிறார் எழில்மலை



தி.மு.க. வேட்பாளர்களை அறிமுகப்படுத்தி ஆதரவு கேட்டார்.

''மூன்று வேட்பாளர் களுமே நெருக்கடி நிலை



ஜெயலலிதா தேர்தல் பிரசாரத்தைத் துவக்கியபின், சரியாகப் பதினெட்டு நாட்கள் கழித்துத் தமது தேர்தல் பிரசாரப் பயணத்தைத் துவக்கினார் கலைஞர். வழக்கம் போல் சைதை தேரடியில் கோலாகலத் தொடக்கம். வழி முழுக்க ஆயிரக்கணக்கான மக்கள். 'தலைவா... தலைவா' என்று பிரசார ஊர்தியின் முகப்புக் கண்ணாடியைத் தடவி முத்தமிடும் தொண்டர்கள்.

சைதையின் குறுகிய தெருக்களில் கலைஞர் மக்கள் கடலில் நீந்திக் கொண்டு வந்தார் என்றுதான் சொல்ல வேண்டும். சரியாக 4:20 மணிக்கு மேடையேறினார்.

நீண்ட வெள்ளை அங்கி அணிந்திருந்த கிறிஸ்துவ போதகர்கள், தலையில் தொப்பியுடன் முஸ்லீம்கள் என்று மைனாரிட்டிகள் ஒருபோதும் கலைஞருக்கு எதிரானவர்கள் அல்ல என்பதைத் தெரிவிக்கும் வகையில் அணிவகுத்திருந்தார்கள். கடும்பாடி அம்மன் மற்றும் ஆஞ்சநேயர் கோயிலிலும் கலைஞருக்குப் பூரண கும்ப வரவேற்பு!

கலைஞரின் பேச்சு ரொம்ப சிம்பிள். "இந்தத் தேர்தலுக்குக் காரணமானவர்கள் யார்? கடந்த 50 வருட காலமாக மைனாரிட்டி மக்களுக்காக உழைக்கும் என்னைப் பார்த்து, 'அவர்களுக்கு விரோதி' என்று ஜெயலலிதா கூறுகிறார். இன்று புதிதாகப் பாசத்தைக் காட்டும் இவரை நம்ப மைனாரிட்டிகள் ஒன்றும்தெரியாதவர்களல்ல! அதேபோல், தாழ்த்தப்பட்டவர்களின் சம்பந்தியாக இருக்கும் என்னைப் பார்த்து 'கலைஞர் துரோகம் செய்து விட்டார்' என்றும் கூறுகிறார்.

"தேர்தலுக்குத் தேர்தல் மட்டும் முகம் காட்டும் இவர் சொல்வதை நாட்டு மக்கள் நம்ப மாட்டார்கள்" என்று தென் சென்னை, மத்திய சென்னை, வடசென்னை



காலத்தில் 'மிசா'வில் சிறையில் இருந்தார்கள். எனவே உங்கள் வாக்குகள் 'மிஸ்ஸா'காமல் இவர்களுக்கு விழ வேண்டும்'' என்று தமக்கே உரிய 'பஞ்ச்'சுடன் முடித்தார். கூட்டம் உற்சாகமாய் ஆர்ப்பரிக்க, வழக்கமாக இறுக்கமாக இருக்கும் மாறன் முகம் கூட கூட்டத்தைப் பார்த்து ரிலாக்ஸ் ஆகி, திருப்தியை வெளிப்படுத்தியது. கிட்டுவுக்கு ஏக சந்தோஷம்!

''இதே உற்சாகம் எங்கள் ஏரியாவிலும் தொடரும்'' என்று கலைஞருடன் பயணத்தைத் தொடர்கிறார் காஞ்சிபுரம் மாவட்டச் செயலாளரான ஆலந்தூர் சண்முகம்.

பல்லாவரம், குரோம்பேட்டை என்று போகும் வழியில் இருபக்கமும் மக்கள் கூட்டம். தாம்பரத்தில் நகரசபைத் தலைவர் ராஜா சால்வை கொடுக்கிறார்.

''எனது பிரசாரத்தின் போது மாலை போடுவதற்கோ, சால்வை போடுவதற்கோ, காரை நிறுத்தக் கூடாது' என்று கலைஞர் 'முரசொலி'யில் அறிவித்திருந்தாலும் உடன்பிறப்புகளின் உற்சாகத்துக்கு அணை போட முடியுமா என்ன?

டி.ஆர். பாலுவுக்கு வாய்ப்பு எப்படி?

''சைதாப்பேட்டையில் எவ்வளவு பெரிய பஸ் நிலையம் கட்டியிருக்கிறார் பார்த்தீர்களா? அதற்காகவே இந்த முறை வோட்டுப் போடலாமே ஸார்!'' என்று வேர்க்கடலையைக் கொறித்தபடி நம்மிடம் சொல்கிறார் தனியார் நிறுவனத்தில் வேலை பார்க்கும் செம்பாக்கம் சுரேந்திரன்.

# உற்சாக வெள்ளத்தில் உடன்பிறப்புகள்!



கலைஞரின் பிரசாரத்தில் இளமை முறுக்கு திரும்பி விட்டது என்பதை நிரூபித்தது செங்கல்பட்டு கூட்டம். பழைய பஸ் ஸ்டாண்ட் அருகில் சாலை கொள்ளாத கூட்டம்.

"அடிக்கடி தேர்தல் வருவது நாட்டுக்கு நல்லதல்ல; 'இந்தத் தேர்தலுக்குக் காரணமானவர்கள் தண்டிக்கப்பட வேண்டும்' என்று ஒருவர் சொல்லியிருக்கிறார். அது யார் என்று உங்களுக்குத் தெரியும்..." என்று ரஜினியின் பெயரைச் சொல்லாமல், அவர் கூறியதை மட்டும் கலைஞர் குறிப்பிட்டபோது உற்சாகக் கூச்சல்!

"வாஜ்பாய் ஐயா ஏமாத்திட்டீங்களே! என்று பாட்டுப் பாடுகிறாராம் ஜெயலலிதா. வாஜ்பாயை ஏமாற்றியவர் ஜெயலலிதா. நிலையான ஆட்சி என்று சொல்லி வோட்டு வாங்கி ஆட்சியைக் கவிழ்த்து ஏமாற்றுபவர் ஜெயலலிதா. ஆறு கோடி மக்களை ஐந்தாண்டுக் காலம் ஏமாற்றியவர் ஜெயலலிதா" என்று பாயிண்ட், பாயிண்டாக கலைஞர் எடுத்து வைக்க, கூட்டம் கைதட்டி ஆர்ப்பரிக்கிறது. செங்கல்பட்டு தொகுதி பா.ம.க. வேட்பாளர் ஏ.கே. மூர்த்தி தமது நெடிய உடம்பை குறுக்கிக் கொண்டு, கைகளைக் கூப்பி மேடையில் நின்று, கலைஞரின் பேச்சு முடியும் வரை மௌனமாகவே வாக்குகள் சேகரிக்கிறார்.

செங்கல்பட்டுடன் மாறன் சென்னைக்குத் திரும்ப, தயாளு அம்மையாரும், மகள் செல்வியும் பிரசார ஊர்தியில் ஏறிக்கொள்ள (கூடவே கலைஞரின் செல்ல நாயும்தான்) பயணம் தொடர்கிறது. கருங்குழியில் கட்டுக்கடங்காத கூட்டம். மதுராந்தகம் துவக்கத்தில், ஆறுமுகம் தொண்டர்களோடு நிற்கிறார். கலைஞர் ஊர்தியிலிருந்தே பேசுகிறார். ஆறுமுகம் சாலையில் ஊர்தியை ஒட்டினாற்போல் நின்று கொள்கிறார். ஜெ.வைக் குற்றவாளியாக்கும் சுருக்கமான பேச்சு.

அடுத்து ஒரு பர்லாங் தூரத்தில் உகம் சந்த் தலைமையில் மற்றொரு வரவேற்பு. ஒரே ஊரில் இரண்டு வரவேற்பு! உள்ளூர் கோஷ்டிப் பூசலின் வெளிப்பாடு. விழுப்புரம் மாவட்டத்திலும் இதே நிலைதான். கலைஞருக்கு இப்போது நெருக்கமாகிவிட்ட அமைச்சரும், மாவட்டச் செயலாளருமான பொன்முடி, தமது ஆதரவாளர்களுடன் தனியே வரவேற்க, சட்டமன்ற உறுப்பினரான ஏ.ஜி. சம்பத் வேறொரு இடத்தில் சால்வை கொடுக்கிறார். தேர்தல் நேரத்தில் மாவட்ட மனக்கசப்புகளை சரிசெய்ய அவகாசம் இல்லை. திண்டிவனம் நகரில் தேசிய நெடுஞ்சாலையே தெரியாத அளவுக்குக் கூட்டம்! ம.தி.மு.க. வேட்பாளராக இருந்தாலும், செஞ்சி ராமச்சந்திரன் இன்றும் கலைஞரின் பாசத்துக்குரியவர் தான்.

ஊர்தியிலிருந்தே உரையாற்றுகிறார் கலைஞர்.

"அருமைத் தம்பி செஞ்சி ராமச்சந்திரனுக்கு பம்பரம் சின்னத்தில் வாக்களியுங்கள்" என்று கலைஞர் சொல்கிறபோது கூட்டத்திலிருந்து விண்ணை முட்டும் உற்சாகக் கூச்சல்! கொஞ்சம் நேரமே நின்று கலைஞரின் பேச்சைக் கேட்கும் தெய்வசிகாமணி,


• ஏ.கே. மூர்த்திக்கு (பா.ம.க.) வோட்டுக் கேட்டு...



மாநில அரசு ஊழியர். ''படிச்சவங்க கொஞ்சம் தெளிவாத்தாங்க இருக்கோம். ஆனா பாருங்க... கிராம லெவல்ல கொஞ்சம் விவரம் தெரியாம இருக்காங்க. இருந்தாலும் செஞ்சியார் வந்துருவாருங்க'' என்கிறார். அடுத்து விக்கிரவாண்டி கூட்டம் நெண்டுகிறது. கடலூரில் பத்து மணிக்குள் பேசி முடிக்க வேண்டுமாதலால் வழிநெடுக, அவகாசம் இல்லாத நிலையிலும் உடன்பிறப்புகளின் பாசக் கட்டளைக்கு கலைஞர் உடன்பட வேண்டியிருக்கிறது.

**வி**க்கிரவாண்டியைத் தாண்டிய பிறகு இடதுபக்கமாகப் பிரியும் சாலையில் பிரசார ஊர்தி விரைகிறது. கோலியனூர் கூட்ரோட்டை அடைவதற்கு முன்னர் வழிநெடுக கிராமங்களில் மக்கள் கூட்டம் கூட்டமாக இருட்டில் நிற்கிறார்கள். ''தலைவா...'' என்று பக்கவாட்டு இருட்டில் இருந்து குரல்கள் எழுந்து அடங்குகின்றன. பண்ருட்டி நகரத்தில் ஏதாவது திருவிழாவோ என்ற அளவிற்குக் கூட்டம். துவக்கத்தில் ஒரு முஸ்லீம் பெரியவர் தமது மொபெட்டில் பெரிய கழகக் கொடியை கட்டிக் கொண்டு பிரசார ஊர்திக்கு இணையாக ஓட்டி வருவது பத்திரிகையாளர்களுக்குச் செய்தியாக மாறுகிறது. பண்ருட்டியிலும் ஊர்தியிலிருந்தே பேசுகிறார் கலைஞர். ஜெயலலிதாவின் இரட்டை வேடத்தை அம்பலப்படுத்தும்


''டாக்டர் உனக்கு மட்டும் எப்படி சம்பளம் கூட்டிப் போட்டு கொடுத்தார்?''

''சம்பளம் கூடுதலா தரலைன்னா நீங்க எம்.பி.பி.எஸ். படிக்கலைங்கற விஷயத்தை தண்டோரா போடுவேன்னு மிரட்டினேன்!''

– பம்மல் ஜி. ஸ்ரீதர்

பேச்சு. அடுத்து நெல்லிக்குப்பம். கணிசமான அளவில் இஸ்லாமியர்கள் உள்ள பகுதிகள்.

மேல்பட்டாம்பாக்கத்தில் ஊர்தியில் இருந்து பேசும் போது கூட்டத்தை நோட்டமிட்டோம். கூர்மையாகப் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த காதர் மொய்தீனிடம், ''தி.மு.க. மீது முஸ்லீம்கள் கோபமாக இருக்கிறார்களா?'' என்று கேட்டோம்.

''அப்படி ஒரேயடியாகச் சொல்ல முடியாதுங்க. இப்படியும் இருக்காங்க. அப்படியும் இருக்காங்க. இளைஞர்கள் கொஞ்சம் கோபமா இருக்காங்க'' என்கிறார்.



**அ**ன்றைய நிகழ்ச்சியின் இறுதிக் கட்டமாக கடலூர் மஞ்சக்குப்பம் மைதானத்தில் பொதுக் கூட்டம். தெருவெங்கும் உதய சூரியன் ஒளி விளக்குகள். ஈஃபில் கோபுரம் போன்று மின் விளக்கு செட் அப். கடலூர்த் தொகுதி – தி.மு.க. வேட்பாளர் ஆதி சங்கர் சிறிது நாட்கள் முன்பு நெற்றியில் பெரிய குங்குமப் பொட்டு வைத்துக் கொண்டதற்காகக் கலைஞரின் விமர்சனத்துக்கு ஆளானவர். இப்போது மேடையில் மஞ்சள் துண்டுடன் (பொட்டில்லாமல்)

• டி.ஆர்.பாலுவுக்கு வோட்டுக்கேட்டு...

(தொடர்ச்சி-10ம் பக்கம்)

## நீங்கள் கேட்டவை — தராசு

● ஆர். வேணுகோபால், பெரியகுளம்.

*? நாங்கள் ஆட்சிக்கு வந்தால் போபர்ஸ் விவகாரத்தை மீண்டும் விசாரிப்போம் என்கிறாரே சோனியா காந்தி?*

! கண்டிப்பாக. விசாரித்து, 'ஊழல் எதுவும் நடக்கவேயில்லை' என்ற மகத்தான முடிவுக்கு வந்து விடுகிற ஏற்பாடுகள் செயல்படுத்தப் படும்.

● ஆர். கமலக்கண்ணன், நாமகிரிப்பேட்டை.

*? அரசியல் உலகில் அதிகம் பழக்கப்பட்ட 'பாலிடிக்ஸ் அகடகபடம்' எனக்குத் தெரியாது என்கிறாரே அ.தி.மு.க. வேட்பாளர் கே. மலைச்சாமி?*

# 'அகடகபடம்' தெரியாது என்கிறாரே மலைச்சாமி..?

! அதைத் தெரிந்து கொள்ளச் சிறந்த இடம் அ.தி.மு.க. என்று கண்டுபிடித்து, அதில் சேர்ந்திருக்கும் மலைச்சாமிக்கா ஒன்றும் தெரியாதிருக்கும்?

● வாசுதேவன், ஸ்ரீராம்பூர்.

*? தலித் எழில்மலையின் ராஜினாமா?*

! ராஜினாமா ஆச்சர்யமளிக்கவில்லை. ஆனால் அ.தி.மு.க.வில் அவர் சேர்ந்தது அதிர்ச்சியளிக்கிறது! முகத்திடம் கோபப்பட்டு மூக்கை அரிந்துகொண்ட கதையாகவல்லவா இருக்கிறது!

● என். பாலகிருஷ்ணன், மதுரை.

*? இப்போதெல்லாம் சினிமா பாடல்களை விட தொடர்களில் வரும் டைட்டில் பாடல்கள் இனிமையாக அமைந்திருப்பதைக் கவனித்தீர்களா?*

! திரும்பத் திரும்ப வருஷக்கணக்காகக் கேட்பதால் அப்படியொரு பிரமை தட்டுகிறதோ என்னவோ. எனக்கு சினிமா பாடல் – டி.வி. தொடர் டைட்டில் பாடல்களுக்கிடையே பெரிய வித்தியாசம் தெரிவதில்லை.



• கோபக் கதை!



• சேரிடம் அறிந்து...

● ஆர். ஹரிகோபி, புதுடெல்லி – 22.

*? அன்று எம்.ஜி.ஆர். காங்கிரஸுடன் அமைத்த கூட்டணிக்கும் இன்று ஜெயலலிதா காங்கிரஸுடன் அமைத்துள்ள கூட்டணிக்கும் என்ன வித்தியாசம்?*

! நிச்சயமாக டெல்லியை ஆட்டி வைக்க வேண்டும் என்கிற எண்ணத்தில் எம்.ஜி.ஆர். கூட்டணி வைக்கவில்லை.

● புளியறை கணேசன், சென்னை – 30.

*? சர்வதேசப் போட்டிகளிலிருந்து ஸ்டெபி கிராஃப் ஓய்வு பெறுவதாக அறிவித்திருக்கிறாரே?*

! மற்ற வீராங்கனைகளின் நிம்மதிப் பெருமூச்சு பலமாகக் கேட்கவில்லை உங்களுக்கு?

● ஆர். ராஜதுரை, சீர்காழி.

*? 'மருத்துவம், என்ஜினியரிங் உயர்கல்வியில் மாணவர்களைத் தகுதி அடிப்படையில் மட்டுமே சேர்க்க வேண்டும்; இடஒதுக்கீடு முறை கூடாது' என்று உச்சநீதி மன்றம் தீர்ப்பளித்துள்ளது குறித்து?*

! வரவேற்கப்பட வேண்டிய தீர்ப்பு. உடனே அமுல்படுத்தப்பட வேண்டிய தீர்ப்பும் கூட.



• ஜெயித்தால்...

● ஜெகன் ரகு, வேலூர் - 1.

*? எங்கள் பகுதியில் முகமது ஆசிப் போட்டியிடுகிறார். ஜெயித்தால் வழக்கு விசாரணையின் போது மீண்டும் ஸ்ட்ரெச்சரில் வருவாரா...?*

! அவர் ஜெயித்தால் அதைப் பார்த்துக் கொள்ளலாம். இப்போது பிரசார மேடைக்கு எப்படி வருகிறார் என்பதைக் கவனித்து தொகுதி மக்கள் வோட்டளிக்கட்டும்.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

*? 'தேர்தலுக்குப் பின் ஜெயலலிதாவின் ஊழல்களைப் பற்றி விவாதிக்கலாம்' என்று ஈ.கே. நாயனார் கூறுகிறாரே?*



• பெருமூச்சு ஓசை!



• பிரசாரம் எப்படி!



• தெரியாத பேச்சு!



• இன்றும்...



• ...அன்றும்

! தேர்தலில் 'ஜெ' ஜெயித்துவிட்ட பிறகு, 'இப்போது உங்கள் ஊழல்கள் பற்றி நாங்கள் விவாதிக்க இருக்கிறோம்' என்று கூட்டணி கட்சித் தலைவர்கள் கூறினால், போயஸ் தோட்டத்தில் என்ன நடக்கும் என்பது நமக்குத் தெரியும். பாவம், நாயனாருக்குத் தெரியாது போயிருக்கிறது. இருந்தாலும் உள்ளூர் கம்யூனிஸ்டுகளாவது எடுத்துச் சொல்லியிருக்கலாம்.

● ஈ. சிதம்பரம், திருத்தங்கல்.

*? சுதந்தர தினத்தை கல்கி மறந்தது ஏனோ? 15.8.99 இதழில் சுதந்தர தினச் செய்தி வெளியிடாமல் புறக்கணிப்பு செய்தது ஏன்?*

! 'ஆனந்த நகரம்' கல்கி கலெக்ஷனில் படிக்கவில்லையா, நீங்கள்!

● மன்னை நா. கபா கண்ணன்.

*? வரும் தேர்தலிலாவது விழித்துக் கொள்ள, பத்திரிகை - வார இதழ்கள், தொலைக் காட்சி ஆற்ற வேண்டிய பணி என்ன?*

! வாக்குகள் சிதறாமல் தேசிய ஜனநாயக முன்னணியை ஆதரிக்கும்படி மக்களைக் கேட்டுக் கொள்ள வேண்டும்.

● கே. சபாபதி, கோவை - 42.

*? இப்போதும், இந்த டீ.வி. யுகத்திலும் தினமும் பார்க்கும் தலைவர்களை நேரில் பார்க்கவேண்டும் என்கிற ஆர்வம் மக்களிடம் இருக்கிறதா?*

! தினமும் விஜய் டீ.வி.யில் திருப்பதி பெருமாளைக் காட்டுகிறார்களே; அதற்காகத் திருப்பதிக்குப் போகும் கூட்டம் குறைந்தா போய்விட்டது! தலைவர்களின் ஆகர்ஷண சக்தியும் அத்தகையதுதான். அதை அவர்கள் நாட்டுநலன் கருதி சரியாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

*? ராஜதந்திரத்துக்கும் நயவஞ்சகத்துக்கும் என்ன வித்தியாசம்?*

! ராஜதந்திரத்தின் இறுதி நோக்கம் மக்கள் நலன்;

நயவஞ்சகத்தின் ஒரே நோக்கம் சுயநலன்.

● மு. மணிகண்டன், லால்புரம்.

*? 'பாக் விமானத்தை இந்திய வீரர்கள் சுட்டது ஒரு கோழைத்தனமான செயல்' என்று நவாஸ் ஷரீஃப் கூறியுள்ளாரே?*

! ஆமாம்; உளவு விமானத்தை எல்லை கடந்து அனுப்புவதும் தீவிரவாதிகளுக்குப் பயிற்சியளித்து, திருட்டுத்தனமாக இந்தியாவுக்குள் அனுப்புவதுதான் வீரம். பாகிஸ்தான் அகராதியே வேறு. அதில் நேர்மைக்கோ தர்ம நியாயங்களுக்கோ இடமில்லை.

● கே.ஏ. இராஜேஸ்வரி, காட்டுக்காஞர்.

*? எம்ப்ளாய்மென்ட் இன்டர்வியூவுக்கும் கட்சிகள் நடத்தும் வேட்பாளர் தேர்வு நேர்முகத்துக்கும் என்ன ஒற்றுமை அல்லது வித்தியாசம்?*

! இரண்டிலுமே முக்கியமாக பணபலம் பற்றித்தான் கேட்கப்படுகிறது என்பது ஒற்றுமை. இவ்வளவு முக்கியமான ஒற்றுமைக்கு முன்னால் மற்ற வித்தியாசங்கள் ஒன்றுமில்லாது போகுமே!

● டி.எஸ். சேகர், தென்கடப்பந்தாங்கல்.

*? ஒரு குறிப்பிட்ட வகை மோதிரத்தை அணிந்து கொள்வதன் மூலம் நினைத்த காரியத்தை முடிக்கலாம் என பத்திரிகைகளில் விளம்பரம் வருகிறதே நம்பலாமா?*

! மோதிர வியாபாரிகள் நினைப்பது நிச்சயம் நடக்கும்! ●

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
ஆர். ஹரிகோபி, A/C 4, C.R.O.
I.T.B.P. East Block-9A, ஆர்.கே.புரம்,
புதுடெல்லி - 110 022.



''ரசிக்கிற மாதிரியான புதுமொழி ஒன்னு சொல்லேன்.''

''ஒவ்வொரு ஆணின் கடனுக்கும் பின்னால் ஒரு பெண் இருக்கிறாள்.''

– சோமநாத் சர்மா



''நேத்து உங்க பொண்ணு ஒரு பையனோட ஜோடியா கைகோத்து ரோட்டுல நடந்து போனதை என் கண்ணால பார்த்தேங்க... கொஞ்சம் கண்டிச்சு வைங்க...''

''வரட்டும் கவனிச்சுக்கறேன். நான் அவங்க ரெண்டு பேரையும் யார் கண்ணுலேயும் படாம பழகுங்கன்னு சொல்லியிருந்தேனே?''



''நீங்க ஏன் ஆபரேஷன் தியேட்டர்லேர்ந்து பயந்து போய் வெளியே ஓடி வர்றீங்க?''

''தைரியமா இருங்க... இது சின்ன ஆபரேஷன்தான்னு சொல்றாங்க!''

''நீங்க தைரியமா இருக்க வேண்டியது தானே!''

''ரெண்டு நர்ஸ்கள் தான் டாக்டர்கிட்ட அப்படிச் சொல்றாங்க!''

– லட்சுமி ஆவுடைநாயகம்

(7-ம் பக்கத் தொடர்ச்சி)

கைகூப்பியபடி நிற்கிறார். பத்து மணிக்குக் கூட்டத்தை முடிக்க வேண்டிய நிலையில் மைக்கைப் பிடிக்கிறார் கலைஞர்.

''இதே மைதானத்தில், என் பொது வாழ்வில் ஐம்பது முறைகளுக்கு மேல் உங்களைச் சந்தித்திருக்கிறேன். ஆனால் தேர்தலுக்குத் தேர்தல் உங்களைச் சந்திக்க வருபவர் ஜெயலலிதா. 'கருணாநிதி என் மீது பொய் வழக்குப் போட்டிருக்கிறார். அதைக் கோர்ட்டில் சந்திப்பேன்' என்கிறார் அவர். வழக்குப் போடுவதற்கு பூர்வாங்க ஆதாரங்கள் இருக்கின்றன என்று உச்சநீதி மன்றமே சொல்லியிருக்கிறது. கோர்ட்டுக்கு வந்து உடல்நலம் சரியில்லை என்பதைச் சொல்லாமல் சொல்ல அவர் போட்ட தும்மலில் கோர்ட்டுக்கே ஜுரம் வந்து விடும் போல இருந்தது! உடல்நலம் சரியில்லை என்று வாய்தா வாங்கி நீதிமன்றத்துக்கு வராமல் ஒதுங்கும் ஜெயலலிதா இப்போது ஊர் ஊராக, தெருத் தெருவாக அலைகிறார். ஆனால் நாட்டு மக்கள் ஏமாற மாட்டார்கள்...'' என்று மக்களுக்குப் புரியும்வண்ணம் விஷயங்களை எளிமையாக எடுத்து வைக்கிறார்.

கார்கில் வெற்றியைப் பற்றி லேசாகக் குறிப்பிடும் கலைஞர், ''வாஜ்பாய் கையில் இந்தியா பத்திரமாக இருக்கிறது. உதயசூரியனுக்கு வாக்களிப்பதன் மூலம் வாஜ்பாய் கரத்தை மேலும் பலப்படுத்துங்கள்'' என்று சரியாகப் பத்து மணிக்கு முடிக்கிறார். மூப்பனார் அணியைப் பற்றிக் கலைஞர் எதுவும் குறிப்பிடுவதில்லை.

தொடர்ந்து ஆறு மணி நேரம் பயணம் செய்து, வழியெங்கும் பேசி வந்தாலும், சைதையில் கலைஞரிடமிருந்த அதே உற்சாகம் கடலூரிலும் இருந்ததைச் சொல்லியாக வேண்டும். இந்தத் தேர்தல் பிரசாரத்தைப் பொறுத்தமட்டில் கலைஞரின் பேச்சில் கோடை மழையும் உண்டு; குற்றாலச் சாரலும் உண்டு; குடைய வைக்கும் கிண்டலும் உண்டு.

''இருபது முப்பது வருடத்துக்கு முந்தைய கலைஞரின் பேச்சைக் கேட்டது போலிருக்குங்க'' என்கிறார் ஒரு கலைஞர் அன்பர்.

— ப்ரியன்

படங்கள் : சௌந்தரராஜன்

சிறந்த ஓவியங்களுக்காக லலித்கலா அகாடமி வழங்கும் தேசிய மற்றும் மாநில அகாடமி விருதுகளைப் பெற்றவர் ஓவியர் விஸ்வம். 1977-ம் வருடம் நடந்த ஒரு சம்பவம் அவரது வாழ்க்கையைக் குதறிப் போட்டு விட்டது. அதிலிருந்து அவர் மீண்டு எழுந்து, இன்று விருதுகள் வாங்குகிற அளவுக்கு வளர்ந்திருப்பது, அவருக்கே இன்னும் ஆச்சரியமாகத்தான் இருக்கிறதாம்!

விஸ்வத்தின் சொந்த ஊர் அரியலூர் பக்கத்திலிருக்கும் கிழவண்ணம் என்ற கிராமம். இன்றைய தேதி வரை பேருந்து வசதி கூட இல்லாத குக்கிராமம். கும்பகோணம் கலைக் கல்லூரியில், ஃபைன் ஆர்ட்ஸில் டிப்ளோமா பட்டம் வாங்கியவுடன், விஸ்வத்திற்கு இருந்த ஒரே லட்சியம் 'சொந்தக் காலில் நிற்பது'. ஆட்டுக்குட்டி விற்ற காசை அம்மாவிடம் வாங்கிக் கொண்டு சென்னை வந்தார்.



நண்பர் ஒருவரின் உதவியால், மயிலாப்பூரில் உள்ள ஒரு சிறிய தனியார் நிறுவனத்தில் வேலை கிடைத்தது. அது, ஆடைகளுக்கு வண்ணம் தீட்டுகிற சிறிய நிறுவனம். தாம் பணிபுரிந்த நிறுவனத்திலேயே தங்கிக் கொள்வார் விஸ்வம். யாரையும் எளிதில் நம்பி விடுவார். கம்பெனி உரிமையாளர் ஒரு 'டைப்பான' ஆசாமி என்பது விஸ்வத்துக்குத் தெரியாது. நண்பர்போல் பழகிய உரிமையாளரை முழுமையாய் நம்பினார் விஸ்வம். அந்த நபர்தான் விஸ்வத்தின் வாழ்க்கையையே குதறிப் போட்டு விட்டார்.

ஒரு வெள்ளிக்கிழமை மாலை வேலை முடிந்து இருவரும் வெளியே நடந்தார்கள். ஒரு பெட்டிக் கடையருகே நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். பேச்சு வாக்கில், உரிமையாளர் விஸ்வத்திடம், "மாத்திரை ஒண்ணு தர்றேன். சாப்பிடுகிறாயா?" என்று கேட்டிருக்கிறார்.

"என்ன மாத்திரை?" என்று விஸ்வம் கேட்க,

"அதெதுக்கு உனக்கு? உன்னால எத்தனை மாத்திரை சாப்பிட முடியும்? அதைச் சொல்லு முதல்ல..." என்று அந்த ஆள் சவால் விட, விஸ்வம் தமக்கு வரப் போகும் ஆபத்தை உணராமல் சவாலைச் சந்திக்கத் தயாரானார்.

ஒன்று, இரண்டு... என ஐந்துக்கும் மேற்பட்ட மாத்திரைகளை விழுங்கினார் விஸ்வம். உரிமையாளரிடம் விடைபெற்றுக் கொண்டு கம்பெனிக்குத் திரும்பி வந்து படுத்தவர்தான். வெள்ளிக்கிழமை படுத்த

## மறுபிறவி – ஓவியர் விஸ்வம்

# நண்பர்கள் ஜாக்கிரதை!

விஸ்வம், கண்ணைத் திறந்தது திங்கட்கிழமை காலையில்! அதுவும் சனி, ஞாயிறு விடுமுறை முடிந்து திங்கட்கிழமை வேலைக்கு வந்தவர்கள் தட்டி எழுப்பிய பிறகே அவருக்கு விழிப்பு வந்திருக்கிறது. கண் விழிக்காமல் கிடந்த இரண்டு நாட்களில், யாரோ முகம் தெரியாத நபர் விஸ்வத்தின் ஆடைகளை 'ஜூட்' அடித்துக் கொண்டு போயிருக்கிறார்கள். அந்த அளவுக்கு சுயநினைவின்றிக் கிடந்திருக்கிறார்.

கண் விழித்த விஸ்வத்துக்கு கண்ணை இருட்டிக் கொண்டு வந்தது. நிற்கக்கூட முடியாமல் கால்கள் தள்ளாடின. மருத்துவமனைக்குப் போகக் கையில் பணம் இல்லை. இரண்டு மாத சம்பள பாக்கித் தொகையை உரிமையாளர் தராததால் பணத் தட்டுப்பாடு! பிறரிடம் உதவி கேட்கவும் முடியவில்லை.

ஒருவழியாகத் தள்ளாடித் தள்ளாடி உரிமையாளர் வீட்டுக்கு வந்திருக்கிறார். உரிமையாளரின் தாயார், "உன்னையும் கெடுத்துட்டானா? இங்கல்லாம் வராதே!" என்று சத்தம் போட, நொந்து போனார்.

பிறகு எப்படியோ பணத்தைப் புரட்டிக் கொண்டு ஊர் திரும்பினார்.

"அந்தப் பாவி என்ன மாத்திரை கொடுத்தான் என்று இன்று வரை எனக்குத் தெரியவில்லை!" என்று சொல்லும் விஸ்வம்,

ஊர் திரும்பியும் உடல் நலமில்லாமல் அவதிப்பட்டிருக்கிறார். நடக்க முடியவில்லை. சாப்பிட முடியவில்லை. சாப்பிட்டால் ரத்தம் கலந்த வாந்தி. கூடவே வயிறு இரைய ஆரம்பிக்கும். மொத்தத்தில் வயிறு வீங்கிய சவலைப் பிள்ளை மாதிரி ஆகிப் போனார். வீட்டில் எல்லோரும் அவர் வாழ்க்கை முடிந்து விட்டது என்றே நினைத்தார்கள். அவரது அம்மா மட்டும் நம்பிக்கை இழக்காமல் நாட்டு மருந்து கொடுத்து வைத்தியம் செய்ய, இரண்டு மாதங்களில் கொஞ்சம் கொஞ்சமாய் குணமானார்.

அப்புறம், சென்னையிலிருந்து ஓவியர் வீர. சந்தானமும், ஓவியர் ஆதிமூலமும் விஸ்வத்திற்குக் கடிதமெழுத, சென்னைக்கு ஓவிய மேற்படிப்புக்குத் திரும்பினார்.

அதற்குப் பிறகு, தமக்கான வட்டத்தை தீர்மானித்துக் கொண்டார். மிகக் குறைவான, நம்பத் தகுந்த நட்பு வட்டாரம் மட்டுமே விஸ்வத்தின் பழகுகிற வட்டம்.

"அந்தச் சம்பவத்திற்குப் பிறகு நான் வேறு எங்கும் வேலைக்கு முயற்சி செய்யவே இல்லை. மேற்படிப்பு, ஓவியம் என்று என் வாழ்க்கை திசை மாறியதற்கு அது ஒரு காரணம். அது மட்டும் நடக்கவில்லையென்றால், ஏதாவதொரு சாதாரண வேலையில்தான் என் வாழ்க்கை தொடர்ந்திருக்கும். அந்த அனுபவம் எனக்கு ஒரு மறுபிறவி. உடலுக்கு மட்டுமல்ல; என் வாழ்க்கைக்கும்தான்!" என்கிறார் விஸ்வம்.

— கே. பாலசுப்ரமணியன்

"இது ஒன்றும் வாசகர்களால் 'அணு'க முடியாத சப்ஜெக்ட் இல்லை" என்றபடி அணு சக்தி தொடர்பான கேள்விகளைத் தொகுக்கத் தொடங்கினார் சி.ஏ. படிக்கும் ராஜன், ஸ்ரீவத்சன், ப்ரியா, ரம்யா ஆகியோர்.


• ராஜன்


• ஸ்ரீவத்சன்

"அணு என்றாலே ஹிரோஷிமாவைத் தரைமட்டமாக்கின அணுகுண்டுதான் நினைவுக்கு வருது" என்று ராஜன் தோளைக் குலுக்க,


• ப்ரியா

"ஏன் நெகடிவாவே பார்க்கணும்? அணு ஆராய்ச்சியின் விளைவாகப் பல வியாதி

# கப்பல் ஓட்டிய அணு!

களுக்குப் புது மருந்து கண்டு பிடிச்சிருக்காங்க. அணுகுண்டின் மூலம் புதிய நதித் தடங்களை உருவாக்கி, வெள்ளத்தைத் தவிர்க்க முடியும். மின்சார உற்பத்திக்குக் கூட அணுசக்தி உதவுதே" என்றார் ஸ்ரீவத்சன்.

"அதுதானே, அணுசக்தி மூலம் ராட்சதக் கப்பல்களைக் கூட அனாயாசமாகச் செலுத்தலாமே? அமெரிக்காவில் இதுபோல் வடிவமைக்கப்பட்ட கப்பல் துளியூண்டு யுரேனியம் ஆக்ஸைடை வச்சுக்கிட்டே மூணரை வருஷம் ஓடிச்சே" என்று ப்ரியா ஆதரவுக் குரல் கொடுத்தாலும் ரம்யாவின் முகத்தில் நிறையத் தயக்கம்.

"மனித மேம்பாட்டுக்குத்தான் அணுசக்தி பயன்படுத்தப்படும்னு என்ன நிச்சயம்? நாற்பது வருடங்களுக்கு முன்னே நெவேடாவிலே அணுசக்தி சோதனை நடந்தப்போ, அங்கே பல குழந்தைகளின் தைராய்ட் சுரப்பிகளைப் பதம் பார்த்து புற்றுநோய்க்கு வழிவகுத்ததே" என்றார்.

அணு ஆயுதத் தடை ஒப்பந்தத்தில் இந்தியா கையெழுத்திட வேண்டுமா என்று கேட்டோம்.

"ஒரு நாள் உங்களைப் பார்க்கலைன்னாலும் எனக்கு வாழ்க்கையே வெறுத்துடும் டார்லிங்..."

"சுண்டல்னா உனக்கு அவ்வளவு இஷ்டமா லலிதா?"

– எஸ்.எஸ். பூங்கதிர்

''முதல்லே அமெரிக்கா தன்னிடம் இருக்கும் அணு ஆயுதங்களை செயலிழக்க வைக்கட்டும்.''

"எப்படியும் கையெழுத்திட்ட நாடுகளும் ரகசியமாக அணு ஆயுதங்களை உருவாக்கத்தான் போகுது" என்றெல்லாம் விதவிதமான பதில்கள் கிடைத்தாலும், கையெழுத்திட வேண்டாம் என்பதைத்தான் அவர்கள் கோரஸாகக் குறிப்பிட்டனர் என்பது புரிந்தது!

அருகே உள்ள கூப்பனில் கேள்விகளும் நீங்கள் 'டிக்' செய்ய வேண்டிய சரியான



• ரம்யா

விடைக்கான சாய்ஸ்களும். அத்தனை கேள்விகளுக்கும் சரியான விடையை 'டிக்' செய்பவருக்கு ரூ.200 பரிசு. பலர் செய்து விட்டால் குலுக்கல். ஜெராக்ஸ் கூப்பன் செல்லாது என்பதும் ஆசிரியர் தீர்ப்பே இறுதி என்பதும் தெரிந்த விஷயம்தானே?

கடைசி தேதி: **6.9.99**

— ஜி.எஸ்.எஸ்.

படங்கள் : ஸ்ரீஹரி



## க்விஸ் கூப்பன் – 4

1. எந்த இடத்தின் மீது வீசப்பட்ட அணு குண்டு 'சிறுபையன்' (Little boy) என்று அழைக்கப்பட்டது?

☐ ஹிரோஷிமா ☐ நாகசாகி ☐ பேர்ல் துறைமுகம்.

2. இந்திய அணுசக்தி கமிஷனின் தலைவராக விளங்குபவர் யார்?

☐ ஆர்.கே. நாராயணன் ☐ டாக்டர் அப்துல்கலாம் ☐ டாக்டர் சிதம்பரம்.

3. 1945–ல் நடத்தப்பட்ட முதல் அணு குண்டு சோதனை எங்கு நடத்தப்பட்டது?

☐ பாரிஸ் ☐ நியூ மெக்ஸிகோ

☐ ஸ்காட்லாந்து.

4. அணு ஆயுதத் தடை ஒப்பந்தத்தை 1963-ல் உருவாக்கிக் கையெழுத்திட்ட மூன்று நாடுகளில் இரண்டு பிரிட்டனும், அமெரிக்காவும். மூன்றாவது நாடு எது?

☐ பிரான்ஸ் ☐ சீனா ☐ சோவியத் யூனியன்.

5. நமது 'பிருத்வி'க்கு பதிலாக என்று சொல்லப்படும் – பாகிஸ்தான் தயாரித்த ஏவுகணையின் பெயர் என்ன?

☐ சக்தி ☐ விஜய் ☐ கோரி.

6. பாபா அணு ஆராய்ச்சி மையம் எங்குள்ளது?

☐ தும்பா ☐ ட்ராம்பே ☐ ஸ்ரீஹரிகோட்டா.

7. பொக்ரான் அணுசோதனை வெற்றி பெற்றதும் இதைத் தெரிவிக்க விஞ்ஞானிகள் பயன்படுத்திய சங்கேத வார்த்தைகள் எவை?

☐ சக்தி பிறந்தாள் ☐ புத்தர் சிரித்தார்

☐ நமக்கே வெற்றி,

8. 1986–ல் இந்த அணுசோதனைக் கேந்திரத்தில் ஏற்பட்ட கசிவு – விபத்து காரணமாகப் பலர் மடிந்தனர்.

☐ கல்பாக்கம் ☐ எல் சல்வேடர்

☐ செர்னோபில்

பெயர்: ..........................................................

முகவரி: ..........................................................

..........................................................

..........................................................

கடைசி
நிமிஷத்திலே
யாருக்கும்
தெரியாம
வேட்பு மனு
தாக்கல்
பண்ணிடலாம்...



1999 ஆகஸ்ட் 29
பிரமாதி ஆவணி 12
மலர் : 58
இதழ் : 5

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## போக்ரான் — III

பிரதமர் நம்பிக்கையுடன் இருக்கிறார். 'வளமான பாரதம்; பெருமிதம் கொள்ளத்தக்க எதிர்காலம்' குறித்துப் பெரிய கனவுகளுடன் இருக்கிறார்.

அந்தக் கனவுகளை மெய்யாக்கும் நோக்கில் தேசிய ஜனநாயகக் கூட்டணியின் தேர்தல் அறிக்கை வடிவமைக்கப்பட்டுள்ளதாகவும் சொல்கிறார் பிரதமர்.

ஒன்பது இடங்களில் அவருடைய வண்ணப்படத்தைத் தாங்கி வெளியாகியிருக்கும் அந்தத் தேர்தல் அறிக்கை காங்கிரஸின் தேர்தல் அறிக்கையினின்று பெரிய அளவில் வேறுபடவில்லை. இரு அறிக்கைகளுக்கும் ஆதாரமான பொருளாதாரக் கொள்கை ஒன்றுதான் - மன்மோகன் சிங் தொடங்கி வைத்த தாராளமயமாக்கல் கொள்கை. இனி எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் அதைக் கைவிட முடியாத அளவுக்கு அந்தப் பாதையில் நாடு நீண்ட தூரம் வந்து விட்டது.

அதனால்தான் 'சுதேசி'யத்தை வலியுறுத்தும் பி.ஜே.பி. கூட நேரடியான அன்னிய முதலீடுக்குத் தடைவிதிக்கவில்லை. வேலை வாய்ப்புப் பெருகவும் பொருளாதார முன்னேற்றத்துக்கும் அது அவசியம் என்று உணர்ந்திருக்கிறது. ஆனால் அதே சமயத்தில், அயல்நாட்டு முதலீடு காரணமாக உள்நாட்டுத் தொழில் துறை நலிவுற்று விடாமல் காக்க ஆவன செய்வதாகவும் வாக்களிக்கிறது. இந்த அம்சம் காங்கிரஸ் அறிக்கையில் இல்லை.

இது தவிர, கடந்த தேர்தலின் போது அளிக்கப்பட்ட பல வாக்குறுதிகளே இம்முறையும் தேர்தல் அறிக்கையில் இடம்பெறுகின்றன.

புதிதாகக் குறிப்பிடப்படும் விஷயங்கள் :

- ராணுவ செலவுக்குக் கூடுதல் தொகை ஒதுக்கப்படும்.
- சுதந்தரத்துக்குப் பிறகு ஏற்பட்டுள்ள அரசியல் நிகழ்வுகளின் அடிப்படையில் அரசியல்




நிர்ணயச் சட்டத்தில் திருத்தங்கள் செய்யலாமா என ஆராய ஒரு கமிஷன் நிறுவப்படும்.

● நீதித் துறையையும் நீதிபதிகள் நியமனத்தையும் கண்காணிக்க ஒரு கமிஷன்.

- மேற்படி மூன்று புதிய யோசனைகளுக்கும் எந்தவித ஆட்சேபமும் கிடையாது. ஆனால், ஒரு தேர்தலில் ஆட்சிக்கு வரும் அரசு, அதற்குரிய காலம் முடியும்வரை ஆட்சியில் நீடிக்கும் வகையில் அரசியல் நிர்ணயச் சட்டத்தைத் திருத்த வேண்டும் என்கிற ஒரு கருத்தையும் தேசிய ஜனநாயக கூட்டணி வெளியிட்டிருக்கிறது. இந்த யோசனை அபத்தமானது; ஆபத்தானது.

மக்களின் ஆதரவையும் நம்பிக்கையையும் இழந்துவிட்ட ஓர் அரசு, ஆட்சியில் நீடிக்க அனுமதிக்கப்படக்கூடாது என்பதற்காக அரசியல் சட்டம் வழங்கும் பாதுகாப்புச் சாதனங்கள்தான் நம்பிக்கை வாக்கெடுப்பும் நம்பிக்கையில்லா தீர்மானமும். இந்தச் சாதனங்களைத் தவறாகப் பயன்படுத்துவதால் ஏற்படக்கூடிய விளைவுகளை நாடு சமீபத்தில் பார்த்திருப்பது உண்மைதான். அதற்காக, தேர்தல் மூலம் ஆட்சிக்கு வரும் எந்த அமைப்புமே (பஞ்சாயத்து முதல் பாராளுமன்றம் வரை) முழுக் காலகட்டத்துக்கும் ஆட்சியை விட்டு நீக்கப்படக்கூடாது என்று சொல்வது அதிகார துஷ்பிரயோகத்துக்கும் பகிரங்கமான ஊழலுக்கும்தான் வழிவகுக்கும்.

'நெருப்பு' என்று சொன்னால் வாய் வெந்து விடாது. பிரதமர் வெளியிட்டிருக்கும் தேர்தல் அறிக்கையில் இடம்பெறுவதாலேயே இந்தச் சட்டத் திருத்தம் அமுலாகிவிடப் போவதில்லை, அரசியல் நிர்ணயச் சட்டத் திருத்தத்தை நடைமுறைப்படுத்த அறுதிப் (2/3) பெரும்பான்மை வேண்டும். அது கிடைக்கப் போவதுமில்லை; அப்படியே கிடைத்தாலும் பல நிலைகளில் விவாதங்கள், கருத்துப் பரிமாற்றங்கள் நடத்திய பிறகே சட்டத் திருத்தம் கொண்டுவர முடியும்.

எனினும், கொள்கை அளவிலேயே எதிர்க்கப்பட வேண்டிய ஒரு சட்டத் திருத்தத்தை; சிந்தனை அளவிலேயே கிள்ளியெறியப்பட வேண்டிய ஒரு மாற்றத்தை, தனது தேர்தல் அறிக்கையில் மையப் படுத்தியிருக்கிறது பி.ஜே.பி. கூட்டணி. அனுபவஸ்தர்களான அதன் பல்வேறு தலைவர்களுக்குப் பெருமை சேர்க்காத விஷயம் இது.

ஜெர்மானிய முறைப்படி நம்பிக்கையில்லா தீர்மானம் கொண்டுவந்து ஓர் அரசுக்கு மாற்று அரசு உடனடியாக அமைக்க வழி செய்யும் சட்டத் திருத்தமும் யோசிக்கப்பட்டு வருகிறது. ஆனால் 'உத்தரவாதமான ஐந்தாண்டு ஆட்சி' சட்டத்துக்குத் தரப்படுகிற முக்கியத்துவம் இந்த ஆரோக்கிய




மான மாற்று யோசனைக்குத் தரப்படவில்லை.

தேர்தல் அறிக்கையில் இடம்பெறாவிட்டாலும் பி.ஜே.பியின் அணுசக்திக் கொள்கை மூன்றாவது போக்ரனாக வெடித்திருக்கிறது.

தேசிய பாதுகாப்பு ஆலோசகர் பிரஜேஷ் மிஷ்ரா வெளியிட்டுள்ள கருத்துகளைப் படிக்கும்போது தூக்கிவாரிப் போடுகிறது :

இந்தியா மேலும் அணு ஆயுதங்களைத் தயாரித்து வைத்துக் கொள்ள வேண்டும். அவசியமானால் அவற்றை ராணுவத்தின் பொறுப்பிலேயே கொடுத்து வைக்கவும் தயங்கக் கூடாது. அண்டை நாடுகளில் அணு ஆயுதக் குவிப்பைப் பொறுத்து நம்முடைய அணு ஆயுதங்கள் உற்பத்தியும் பெருக வேண்டும். எந்த சந்தர்ப்பத்திலும் அணு ஆயுதங்களைக் கொண்டு முதல் தாக்குதலை இந்தியா நடத்தக்கூடாது என்றாலும் தாக்கப்பட்டால், தாராளமாகத் திருப்பித் தாக்கலாம். அதற்குரிய தயார் நிலையில் நாம் எப்போதும் இருக்க வேண்டும்.

பாதுகாப்பு ஆலோசகரின் இந்த சிபாரிசுகள் விபரீதமானவை. போக்ரன் பரிசோதனைகள் நடத்தியபோதே, 'நமது பலத்தைப் பிரகடனப்படுத்தத்தான் இந்தச் சோதனைகள்; அண்டை நாடுகள் நம்மைத் தாக்குவதற்கு இனி தயங்கும்' என்று சொல்லப்பட்டது. ஆனால் நடந்த கதையோ வேறு. பாகிஸ்தானும் தனது பலத்தைப் பிரகடனப்படுத்தியதுடன் ஆக்கிரமிப்பும் நடத்தியது.

கார்கிலில் மிதமிஞ்சாமல் சுயகட்டுப்பாட்டுடன் இயங்கி, நல்ல பெயரைத் தேடிக் கொண்ட பிரதமருக்கு, தேசிய பாதுகாப்பு ஆலோசகரின் அறிவுரைகளால் உலக அரங்கில் அவப்பெயரே ஏற்படும்.

அண்டை நாடுகளும் நம்மைக் கண்டனங்களால் குதறித் தீர்ப்பதுடன் பாதுகாப்புக் கருதி அவையும் அணு ஆயுதங்களைச் செய்து குவிக்க தார்மிக உரிமை பெற்றவையாகிவிடும்.

போட்டா போட்டியென்பது பொருளாதார முன்னேற்றத்தில் இருக்க வேண்டுமே தவிர, இரு நாடுகளின் பொருளாதாரத்தையும் பாழாக்குகிற அதிபயங்கரமான அணு ஆயுதப் போட்டியில் அல்ல.

மார்தட்டுவது போன்ற இத்தகைய வீராப்பான அறிக்கைகள் ஒருவேளை பாமர மக்களின் வோட்டுக்களை பி.ஜே.பிக்குப் பெற்றுத் தரலாம். ஆனால் அந்த மக்களுக்கு அமைதியான, சுபிட்சமான வாழ்க்கையை ஒருநாளும் பெற்றுத் தராது. வளமான எதிர்காலம் என்ற பிரதமரின் கனவு நிறைவேறவே செய்யாது!

# தென்றலோர் மேடை!



• ஜானகிராஜன்



• காஞ்சனா தாமோதரன்



• ஜெயஸ்ரீராஜ்

"சிறை வாசம் உங்களுக்கு மிருதியான ஒய்வு அளிக்கிறது. அதை ஆக்கபூர்வமாகப் பயன் படுத்திக் கொண்டால் நீங்கள் ஒரு சிந்தனையாளராகவோ, படைப் பாளியாகவோ மலரலாம். மாறாக, இந்த ஒய்வைத் தவறாகப் பயன் படுத்தினால் கிரிமினலாகிவிடும் அபாயம் இருக்கிறது!'' என்று சொன்னார் அந்தச் சிறை கண் காணிப்பாளர்.

கேட்டுக் கொண்டிருந்த அந்த ஆயுள் தண்டனைக் கைதியின் மனத்தில் ஒரு பொறி உதித்தது. ஏற்கெனவே அமரர் கல்கியின் 'கடிதமும் கண்ணீரும்' சிறு கதையை அவர் படித் திருந்ததும் அக் கதை அவருக்குள் பெரும் தாக் கத்தை ஏற்படுத்தி, தாமும் எழுத வேண்டும் என்கிற ஆர்வத்தை வளர்த்திருந்ததும் உடன் சேர, பொறி பற்றிக் கொண்டு விட்டது!

• முதல் பரிசுக்காரர் கண்ணனின் புகைப்படம் கிடைக்காத சூழ்நிலையைப் புரிந்து கொள்ளீர்கள்!

ஆதர்ச எழுத்தாளர்களான பாரதியும் கி.ராஜநாராயணனும் தம் படைப்புகள் மூலம் தந்த உத்வேகம் பின்புலமாக இருக்க, பாளையங்கோட்டை மத்திய சிறையில் பிறந்தது 'ஈனத் தொழில்'.

இவ்வாண்டு சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்ற இரா. கண்ணனின் முக வரியை வெளியிட்டதுமே நமக்குக் கடிதம் மூலமும் தொலைபேசி மூலமும் பலர் தம் வியப்பையும் மகிழ்ச்சியையும் தெரிவித்தார் கள்.

''சிறையிலிருந்து இப்படியொரு சிறு கதைப் புரட்சியா!'' என்று வியப்பு.

"மிகச் சிறந்த, தகுதியான கதைக்கே பரி சளித்திருக்கிறீர்கள்!'' என்பதற்கான மகிழ்ச்சி.

முப்பத்தியெட்டு வயதான கண் ணன் படித்திருப்பது பள்ளி இறுதி வரைதான். தூத்துக்குடி மாவட் டத்திலுள்ள சீனிவெள்ளாளபுரம் என்கிற கிராமத்தைச் சேர்ந்த விவசாயி இவர்.

சிறைவாசத்துக்கான காரணத்தைத் தெரி விக்காவிட்டாலும் சிறை தம்மை எப்படிப் பக்குவப்படுத்தியிருக்கிறது என்பது பற்றிக் கடிதத்தில் மிகவும் விரிவாகச் சொல்லியிருக் கிறார்.

"காலையும் மாலையும் தியானம். பகல் முழுவதும் சிறை நூலகத்தில் படிப்பு. இரவில் சிந்தனை; எழுத்து என என் நேரத்தை வகுத் துக் கொண்டிருக்கிறேன். 'இந்தியத் தத்துவ ஞானம்', பகவத் கீதை, சங்க இலக்கியம்- இவற்றை விருப்பத்துடன் கற்றேன். என் எழுத்தார்வத்துக்கு ஊக்கம் வழங்கும் சிறை கண்காணிப்பாளருக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும்!'' என்று நெகிழ்ந்து பேசுகிறார்.

"அடடே, எத்தனை யதார்த்தம்!

அரசு அலுவலக நடைமுறையை இப்படி போட்டோ பிடித்திருக்கிறாரே, எழுத்தில்!" என்று விழி உயர்த்தச் செய்த இரண்டாம் பரிசுக்காரர் ஜானகிராஜனுக்கு முப்பது வயது. இதற்குள் பல சிறுகதைப் போட்டிகளில் பரிசு பெற்ற அனுபவம் வைத்திருக்கிறார்.

இருப்பினும் வருடா வருடம் கல்கி போட்டிக்குக் கதை அனுப்பிவிட்டுக் காத்திருப்பதும் பரிசு வராமல், 'அடுத்தமுறை ஜெயித்து விடலாம்' என்று தம்மைத் தாமே உற்சாகப்படுத்திக் கொள்வதுமாக இவர் போராடிய வருடங்கள் ஐந்து!

"நீண்ட காத்திருப்புக்குப்பின் இது எனக்குக் கிடைத்த சந்தோஷம்!" என்று பூரித்துப் போகும் ராஜன் (ஜானகி என்பது அம்மாவின் பெயராம்) கோவையில் தனியார் நிறுவனம் ஒன்றில் பணி புரிபவர்.

இன்னொரு இரண்டாம் பரிசுக்கதை 'நதி'யைத் தந்த காஞ்சனா தாமோதரன், அமெரிக்காவில் வசிக்கும் திருநெல்வேலிக்காரர்.

எக்கச்சக்கமாகப் படித்துவிட்டுப் பத்தொன்பது வருடங்கள் முன்பு அமெரிக்கா சென்று செட்டில் ஆகிவிட்டாலும் தன் வேர்களை இழக்கவில்லை என்பதில் நியாயமான பெருமிதம் கொண்டிருக்கிறார்.

சொந்தமாக பிஸினஸ் செய்யும் இவருக்கு சங்கப் பாடலிலிருந்து தற்கால இலக்கியம் வரை விடாமல் படிப்பதில் தீராத தாகம். இந்த வருஷ ஜனவரியில்தான் எழுத ஆரம்பித்திருக்கிறார்.

தமிழ்ச் சூழலை இன்டர்நெட் மூலம் அவ்வப்போது அறிந்து கொள்ளும் இவர், "தமிழில் எழுதும் போது, தூரத்திலிருக்கும் தாய்நாட்டோடு எனக்குள்ள பிணைப்பு இன்னும் இறுகுவது போல் உணர்கிறேன்!" என்கிறார்.

"நடைமுறையில், கணவரை இழந்த குடும்பங்கள் செழிப்பாக இருப்பதாக இங்கே ஓர் அமைச்சர் அடித்த கமென்ட்தான் என் கதைக்குக் கரு" என்று சொல்லும் மூன்றாம் பரிசுக் கதைக்காரர் ஜெயஸ்ரீ ராஜைக் கல்கி வாசகர்களுக்கு அறிமுகம் செய்வதென்பது வெறும் இட விரயம்.

கிண்டலும் கிருகலுமான நடையில் மும்பை மசாலா கொடுப்பவர். வாசகர்களைக் கொஞ்ச நாள் 'ஹைரோப்பா'வுக்கு அழைத்துப் போனவர்.

ரேடியோ ப்ரோக்ராம்கள், நாடகம், சிறுகதை, கட்டுரை என்று படைப்பின் சகல சாத்தியங்களோடும் பரிச்சயமுள்ள ஜெயஸ்ரீ பணிபுரிவது வங்கியில்.

சிறப்பான சிறுகதைகளைத் தந்த இந்தப் படைப்பாளிகளை வாழ்த்துவதில் கல்கி தம் வாசகர்களோடு இணைந்து கொள்கிறது!

— ஆசிரியர் குழு.

## குவிஸ் போட்டி – 1 முடிவு

ஆயிரக்கணக்கான வாசகர்கள் கலந்து கொண்டு சிறப்பித்த இப்போட்டியில் சரியான விடைகளை எழுதியவர்கள் மொத்தம் 86 பேர்.

குலுக்கலில் தேர்வாகி ரூ.200/- பரிசு பெறுபவர்:

அ. கதிரவன்,
12, ஜெயராம் நகர்,
கொண்டான் திருமலை,
திருச்சி - 620 102.

**வாழ்த்துகள்!**

**சரியான விடைகள்:**

1) கேரளா 2) எஸ்.எஸ்.சந்திரன்
3) புறா 4) 1950
5) ஜகதாம்பிகா பால்
6) இந்திராகாந்தி 7) பூலான் தேவி
8) ஐ.ஏ.எஸ்.

''தலைவரே! உங்களுக்குத் தான் ஊருக்கு ஒரு பங்களா இருக்கே. இந்த சின்ன ஓட்டு வீட்டை எதுக்கு கட்றீங்க?''

''நேர்மையா சம்பாதிச்சதுன்னு சொல்லிக்க ஒண்ணு வேணாமா!''

– எஸ்.எஸ். பூங்கதிர்





• விழா மேடை



• கூட்டத்தின் ஒரு பகுதி

சுதந்தரப் போரில் மும்முறை சிறை சென்றவர் அமரர் கல்கி. அவர் நூற்றாண்டில் நடந்த சுதந்தர தினக் கொண்டாட்டங்களின் போது அவருடைய ரசிகர்களும் கொஞ்சம் சிறைவாசம் அனுபவிக்கட்டுமே என்று முடிவு செய்தது கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக் கட்டளை! அன்று பாரதிய வித்யா பவனின் குளிரூட்டப்பட்ட அரங்கில் கல்கி அன்பர்கள் அனுபவித்த ஐந்து மணி நேர சிறைவாசமும் அமரர் கல்கியின் மூன்றாவது சிறைவாசத்தைப் போல் ஆனந்தமயமான சத்சங்கமாகத்தான் அமைந்தது! மாலை 4.15க்குத் தொடங்கி இரவு 9.00 மணிவரை நீடித்த நிகழ்ச்சியை முழுதும் ரசித்துவிட்டு 'முடிந்துவிட்டதே' என்ற ஆதங் கத்துடன் வீடு திரும்பியோர்தான் அதிகம்!

நிகழ்ச்சிக்குத் தலைமைதாங்கிய அசோக் லேலண்ட் நிர்வாக இயக்குனர் சேஷசாயி, கல்கியின் தேசிய உணர்வு அவர் படைத்த இலக்கியங்களுக்கு மட்டுமின்றி அவர் போற்றிய கலைகளுக்கும் ஆதாரமாக அமைந்ததைச் சுட்டிக் காட்டினார். குறிப்பாக இசைக்கும் சுதந்தர வேள்விக்கும் இருந்த நெருங்கிய தொடர்பு- எம்.எஸ், டி.கே.பி., கே.பி. சுந்தராம்பாள் போன்றோர் இசை மூலம் தேசப்பற்று வளர்க்கப் பாடுபட்டதை நினைவூட்டினார்.

"அதனால்தான் கல்கி நினைவு அறக்கட்டளை சுதந்தர தினத்தை இப்படி வித்தியாசமாகக் கொண்டாட முடிவு செய்துள்ளது. 'கல்கி இலக்கியத்தில் தேசியம்' என்ற தலைப்பில் பட்டிமன்றமோ கருத்தரங்கமோ நடத்தாமல் கர்நாடக இசைக் கச்சேரிகளுக்கு ஏற்பாடு செய்திருக்கிறது... தேச பக்தி என்பது போர்களத்தில் நாம் போராடுகிறபோது மட்டுமே சிலிர்த்தெழும் உணர்வு அல்ல; நாட்டின் ஒட்டுமொத்த வளர்ச்சியை உள்ளடக்கியது; அந்த வளர்ச்சியில் கலை, பண்பாட்டு வளர்ச்சிக்கு இடமில்லாவிட்டால் அது முழுமை அடையாது..." என்றார் சேஷசாயி.



• தலைமையுரை: ஆர். சேஷசாயி

இந்த முழுமைக்காகப் பாடுபட்டு வரும் மூன்று இளம் இசைக் கலைஞர்கள் மேடையிலிருந்தார்கள். பாடகர் சஞ்சய் சுப்ரமண்யன், வீணை ஜெயந்தி, வயலின் ஸ்ரீராம்குமார்! சேஷசாயியின் வாழ்த்துரையே விருதுப் பத்திரம் போல்தான் அமைந்தது என்றாலும் கல்கி நினைவுப் பரிசான வெள்ளித் தட்டுகளுடன் மூவருக்கும் விருதுப் பத்திரங்களையும் பிடிவாத

மாக வழங்கினர் அறக்கட்டளையினர்!

இளம் கலைஞர்களை கௌரவிக்கும் இந்த நிகழ்ச்சியில் நெடுக இளமை மட்டுமின்றி கல்கியின் பரமகுருநாதர் பாரதியார் முத்திரையும் பளிச்சிட்டதைக் குறிப்பிட்டே ஆக வேண்டும்.



வலியுறுத்தியதைப் பகிர்ந்து கொண்டார். ராஜாஜி, டி.கே.சி., கல்கி சதாசிவம், எம்.எஸ்., திருமதி கல்கி என கல்கியுணர்வில் இரண்டறக் கலந்து போயிருக்கும் பெரியோர்களை வரிசைப் படுத்தி நினைவு கூர்ந்தார்.

தமக்கு 'வயதாகிவிட்டது' என்று குறிப்பிட்ட போதும் சேஷசாயி தமது உரையினூடே அமரர் கல்கியின் 'தெய்வத் தமிழ் நாட்டினிலே' பாடல் வரிகளை மிடுக்குடன் படித்தபோது நிகழ்ச்சிக்கு மீண்டும் இளமைத் துடிப்புடன் கூடிய பாரதி முத்திரை கிடைத்தது.

'கவியரசர் பாரதியின் கவிதை இன்பம் – உன்
கதிரொளியில் காண்பதென்ன
வெண்ணிலாவே
புவியில் நீயும் தமிழன் என்னப்
பிறந்ததுண்டோ – அவர்
புதுமைக்கவி மது அருந்தி
மகிழ்ந்ததுண்டோ?'

– என்று வியக்கிற வெண்ணிலாக் கண்ணி வரிகள்!

மற்றொரு அறங்காவலரான வி. கோபாலனின் நன்றியுரையில் மீண்டும் இளைஞர்கள் இடம்பெற்றார்கள். கல்கி நினைவு அறக்கட்டளையிடம் கல்வி உதவித் தொகை

# சுதந்தர தினத்தன்று ஒரு சிறை வாசம்!

• ஜெயந்தியின் ஏற்புரை

இறை வணக்கத்தைத் தொடர்ந்து அமரர் கல்கி இயற்றிய பாடலை மிக இனிமையாகப் பாடினார் இளைஞர் சரண் சந்திரசேகர். 'புவனம் வியந்திட அமுதத் தமிழினில் நவநவமாய் கவி அருளிய புனிதரின் தவமும் பலித்ததம்மா!' என்று சுதந்தர தினத்தை பாரதியாருடைய கனவின் மெய்ப்பாடாக வர்ணிக்கும் அழகிய ராகமாலிகைப் பாடல்.

அதைத் தொடர்ந்து அறங்காவலரும் கல்கியின் மகளுமான ஆனந்தி ஆற்றிய வரவேற்புரையிலும் இளமைக்குக் குறைவில்லை! அறுபதைக் கடந்த ஆனந்தி தமது இளமைக் காலத்தில் தந்தை இசையுணர்வூட்டியதை – குறிப்பாக வீணை பயிற்சிக்கு முக்கியத்துவம் கொடுத்து

பெற்றுப் பயனடைந்த இளைஞர்கள்! இவர்களுள் பலர் வசதியான வேலைகளில் அமர்ந்து தற்போது அறக்கட்டளைக்கு நிதியனுப்பி வருவதைக் குறிப்பிட்ட கோபாலன், கல்கி நூற்றாண்டில் ஒரு லட்சத்து முப்பதாயிரம் ரூபாய் உதவித் தொகையாக வழங்கப்பட்டுள்





• சஞ்சய்



• ஸ்ரீராம்குமார்

ளதைத் தெரிவித்தார்.

**க**லைஞர்கள் மூவர் சார்பாகவும் ஏற்புரை வழங்கிய ஜெயந்தி, மீண்டும் 'தவழும் பலித் ததம்மா' என்று ஆரம்பித்து அமரர் கல்கியின் கதை, பாடல், கட்டுரை தலைப்புகளைத் தொகுத்தே நூதனமாக அவ்வுரையை அமைத் திருந்தார்.

இவர் கச்சேரியிலும் பாரதி பாடல் (பாருக் குள்ளே நல்ல நாடு) இடம்பெற்றது.

ஒரே மாதிரியான சரணங்கள் அமைந்த பாடல்களைப் பொதுவாக வாத்தியக் கச்சேரி களில் அதிகம் கையாளக் கலைஞர்கள் தயங்கு வார்கள். வார்த்தைகள் வெளிப்படாத நிலை யில், மீண்டும் மீண்டும் அதே மெட்டு ஒலிக் கும்போது சலிப்பு உண்டாகக்கூடும் என்பதே இதற்குக் காரணம்.

ஆனால், ஜெயந்தி துணிந்து அத்தகைய இரு பாடல்களைத் தமது நிகழ்ச்சியில் சேர்த்திருந் தார்: முதலாவது – மாயூரம் விச்வநாத சாஸ்திரி யின் 'ஜெயதி ஜெயதி பாரத மாதா'. இரண் டாவது, மேற்குறிப்பிட்ட 'பாருக்குள்ளே நல்ல நாடு'.

'வார்த்தைகளை உச் சரிக்கிறது இவர் விந்தை வீணை' என்று விருதுப் பத்திரத்தில் குறிப்பிட் டதை மெய்ப்பிக்கும் வித மாக ஒரே மாதிரியான சர ணங்களின் வரிகளைக்கூட சிறு சிறு வேறுபாடுகள் மூலம் உணர்த்தினார் ஜெயந்தி.

ஜெயந்தியின் இந்த அரிய ஆற்றல் உச்சபட்சத்தில் வெளிப்பட்டது 'பூங்குயில் கூவும்' என்ற அமரர் கல்கி பாடலை அவர் வாசித்தபோது தான்! அழகு ததும்பும் அதன் சொற்களின் உச்சரிப்பு ஏற்ற இறக்கங்களையும் நாசூக்கான கமகங்களையும் அமைதியான பிருகாக்களையும் ஒரு பூ மலர்கிற பாங்குடன் அவர் வழங்கியது விழா நாயகருக்குப் பொருத்தமான அஞ்சலி.

முன்னதாக ஹம்ஸத்வனி ராகத்தில் 'வாரணமுக வா' என்று விநாயகரை அழைத்து, கற்பனை ஸ்வரங்கள் வாசித்தபோது ஜெயந்தி யின் உயரிய மனோதர்ம முத்திரை பளிச் சென்று பதிவாயிற்று.

தொடர்ந்து வந்த கேதாரகௌளை ராக ஆலாபனையும் 'சாமிக்கு சரி எவ்வரே' என்ற கிருதியும் இசைப் புலமையுடன் அழகுணர்ச்சி யையும் ஒருங்கே வெளிப்படுத்த, பிரதான ராகமான பூர்வி கல்யாணி அந்த ராக தேவதை யையே அரங்கில் கொண்டு நிறுத்தியதுபோன்ற பிரத்யட்ச அழகுடன் மிளிர்ந்தது.

ஆதரித்து வாசித்து வந்த மன்னார்குடி ஈச் வரனும் (மிருதங்கம்) கார்த்திக்கும் (கடம்) தங்கள் முழுத் திறமையை வெளிப்படுத்த உதவும் வித மாக ஜெயந்தி பூர்வி கல்யாணியில் 'ஆனந்த நடமாடுவார்' பாடலை வாசிக்க முடிவு செய்தார் போலும்! 'பாதிமதி ஜோதி பளீர் பளீர் என' என்ற வரியில் கற்பனை ஸ்வரங்களும், குறைப்பும் அவற்றுக்கு ஈச்வரனும் கார்த்திக்கும் மாற்றி மாற்றி வாசித்த கலகலப்பும் கச்சேரிக்கு மேலும் ஒரு புதுப் பரிமாணத்தை அளித்தது. அதன் முடிவில் அமைந்த தனியாவர்த்தனத்தில் ஆனந்த நடனத்தின் ஜதிகள் ஆங்காங்கே அழகாக ஒலித்தன.

**ச**ஞ்சய் சுப்ரமண்யன் ஹரிகாம்போதி ஆலாபனையை ஆரம்பித்ததுமே அரங்கிலிருந்த முகங்




• இரண்டு...

களின் பிரகாசத்தில் வெளிச்சம் நூறு வாட் கூடியது! அத்தனை பேரும் அமரர் கல்கியின் 'வண்டாடும் சோலையை' அவர் பாடப் போகிறார் என்று காத்திருக்க, மனிதர் 'பாமாலை' என்று ஆரம்பிக்க, எழுந்த சலசலப்பு அடங்க சில கணங்களாயிற்று. எனினும் ரசிகர் களுக்குத் துளியும் ஏமாற்றமில்லை. ஏறத்தாழ வழக்கொழிந்து போயிருக்கும் பாபநாசம் சிவன் பாட்டை சஞ்சய் சுப்ரமண்யன் அட்டகாச மாய்ப் பாடியதில் பரம திருப்திதான். அமரர் கல்கி கண்ணென மதித்த பாரதியாரைப் போற்றி பாபநாசம் சிவன் இயற்றியிருக்கும் அப் பாடலில்,

'தமிழ்நாடு செய் தவப்பயனாய்

வந்தவதரித்தாய்...' என்ற அடியை நிரவலுக்கு சஞ்சய் எடுத்துக் கொண்டபோது, திப்பு சுல்தான் சமாதி குறித்து அமரர் கல்கி எழுதியதுதான் நினைவுக்கு வந்தது. 'இத்தனை அழகான இடத்தில் சமாதி அமைத்திருப்பதைக் காண திப்புசுல்தான் இல்லையே' என்று எழுதினார்! ,அதைப் போல் சஞ்சய்யின் இந்த நிரவலைக் கேட்டு மகிழ அமரர் கல்கி இல்லையே என்றுதான் நமக்குத் தோன்றியது!

தமிழ்ப்பாடல்களைக் கொண்டே ஏறத்தாழ முழுக் கச்சேரியையும் அன்று அமைத்திருந்தார் சஞ்சய்.



• ...கச்சேரிகள்

'சிவலோகநாதனைக் கண்டு' (கோபால கிருஷ்ண பாரதி) 'அஞ்சேல் என்று' (அம்புஜம் கிருஷ்ணா) ஆகியவற்றைக் குறிப்பிட்டுச் சொல்லலாம். பைரவி ராகத்தில் அமைந்த அம்புஜம் கிருஷ்ணாவின் பாடலில்,

சத்திய வழிதன்னில் சார்ந்து நான் நின்றிட
சக்திவேல் எனக்கு சக்தியளித்திடும்

என்ற வரிகள்தான் இன்றையச் சூழலுக்கு எத்தனை பொருத்தமாக இருக்கின்றன என வியப்பும் நெகிழ்ச்சியும் ஒருங்கே ஏற்பட்டன.

ரசிகர்களின் இந்த உணர்வுகளை சஞ்சய் உச்சத்துக்குத் தூக்கிவிட்டது மோகன ராக ஆலாபனையின்போதுதான். அதைத் தொடர்ந்து வந்த தானம், மோகன வெள்ளத்தில் ரசிகர்களைத் திணறத் திணற மூழ்கடித்தது என்றுதான் சொல்லலாம்!

பல்லவிக்கு சஞ்சய் எடுத்தாண்ட வரி 'ஆடுவோமே பள்ளு பாடுவோமே ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோமென்று...' (மீண்டும் பாரதியார்!) இதை கண்ட ஜாதி அட தாளத்தில், திச்ர நடையில் பொருத்தி, அந்தக் காலத்து ஜி.ஆர். விச்வநாத்தின் 'லேட் கட்' போன்ற ஒரு சிக்கலான எடுப்பையும் அமைத்துச் சக்கரவட்டம் ஆடிவிட்டார் மனிதர்!

இத்தனைக்கும் ஈடுகொடுத்த ஸ்ரீராம்குமாரை என்ன சொல்வது! வலக்கரம் கொடுப்பது இடக்கரத்துக்குத் தெரியாது என்பார்களே, அப்படிப்பட்ட ஒரு வள்ளன்மையுடன் கூடிய ஆதரவு. பைரவி, ஹரிகாம்போதி, மோகனம் ஆலாபனைகளில் இந்த இளைஞர் காத்த சாஸ்த்ரீய சுத்தம் இன்று எளிதில் காணக் கிடைக்காத - இல்லை - கேட்கக் கிடைக்காத ஒன்று. 'அனுசரணை' என்பதை ஒரு கலையாக்கியிருக்கும் ஸ்ரீராம்குமாருக்கு கல்கி விருது அளிக்கப்பட்டதை எண்ணி அன்று ரசிகர்கள் ஆனந்தப்பட்டதை அவர்களுடைய கரவொலியே உணர்த்தியது.

'ம்ருதங்கமா? இடது கையால் வாசித்து விட்டுப் போய் விடுவேன்!' என்று அருண் பிரகாஷ் கர்வமின்றிச் சொல்லலாம். இடது கைக்காரர்! சரியான இடைவெளிக்குக் காத்திருந்து அழகு செய்வதிலும் சங்கதிக்கு சங்கதி வேறுபாடு காட்டுவதிலும் வல்லவர். மோகன ஆலாபனையில் வயலின் வாய்ப்பு விட்டபோது சஞ்சய் இவரிடம் பல்லவி பற்றிக் கிசுகிசுக்க, மனிதர் தாளத்தைக் கொஞ்சம் கவலையுடன் போட்டு போட்டுப் பார்த்துக் கொண்டிருந்தார்! பல்லவி ஆரம்பித்ததுதான் தெரியும் - அளவெடுத்துத் தைத்தது போல் கச்சிதமாக வாசித்து தனியாவர்த்தனத்தையும் ஜமாய்த்தார் அருண்பிரகாஷ்.

கல்கியின் பாடல்களுள் சஞ்சய் பாடத் தேர்ந்தெடுத்தது 'ஒளியே வடிவமாய்' என்ற விருத்தம். ஷண்முகப்ரியாவில் ஆரம்பித்து கொஞ்சம் வடக்கே யாத்திரை போய் சிந்துபைரவியைத் தொட்டு, தேஷ் ராகத்தில் முடித்தார் சஞ்சய். தொடர்ந்து அவர் எடுத்த பாடல் 'பாரத சாம்ராஜ்ய சுகி' - தேசபக்திப் பாடல்! ஆழ்ந்த தெய்வ பக்தியில் விருத்தம்; அதைத் தொடர்ந்து தேச பக்திப் பாடல்!

அமரர் கல்கிக்கும் அவர் காலத்தவர்க்கும் தேச பக்தியும் தெய்வ பக்தியும் இருவேறு விஷயங்களல்ல என்பதை உணர்த்துவது போன்றமைந்திருந்தது இந்தத் தேர்வு. சுதந்திர தினத்தை இதனினும் சிறப்பாகக் கொண்டாட முடியாது என்ற நிறைவோடு கலைந்தது கூட்டம்.

**— காஞ்சனா பிரகாஷ்ராவ்**

படங்கள்: யோகா

# NEW PRODUCTS

## அயூர் ஹெர்பலின் அழகு பொருள்கள்

வட இந்தியாவில் இயங்கிவரும் அயூர் ஹெர்பல் நிறுவனம் சருமம் மற்றும் தலைமுடி பாதுகாப்புக்கான அழகு சாதன பொருள்களை விற்பனை செய்து வருகிறது. தலைமுடிக்கான ஷாம்புகள், முகத்துக்கான க்ரீம்கள் மற்றும் சருமப் பாதுகாப்புக் கான ஆயில்கள் போன்றவற்றைத்



தயாரித்து வருகிறது.

இந்நிறுவனம் உடல் ஆரோக்கியத்தையும் உள்ளடக்கிய வகையில் ஒன்பது வகையான அழகு சாதனப் பொருள்களை தற்போது அறிமுகப் படுத்துகிறது.

இந்த நிறுவனம் தற்பொழுது சென்னையிலும் தன்னுடைய தயாரிப்புகளை அறிமுகம் செய்துள்ளது. இயற்கையான மூலிகைகள் மூலம் இந்தப் பொருள்கள் தயாரிக்கப்படுவதால் பக்க விளைவுகள் ஏதும் ஏற்படுவதில்லை. இந்நிறுவனம் அழகுக் கலை பயிற்சி வகுப்புகளையும் நடத்தி வருகிறது.

**R.D.M. TRADERS**

7/1, East Patel Nagar,
New Delhi - 110 008
Ph: 5711695

**கோ**வை தொகுதியில் பா.ஜ.க. வேட்பாளர் சி.பி. ராதா கிருஷ்ணனுக்காக உள்ளூர் தி.மு.க.வினர் வேலை செய்வார்களா என்பதே கடைசி வரை கேள்வியாக இருந்தது. தேசியத் தலைவர்களும், மாநில தி.மு.க. தலைமையும் கூட்டணி அமைத்துத் தொகுதி உடன்பாடு செய்து கொண்டாலும் உள்ளூர் கட்சிப் பிரமுகர்களுக்கும், தொண்டர்களுக்கும் 'கசப்பு' தீர வேண்டுமே?! சென்ற தேர்தலுக்கு முன் நடந்த மதக் கலவரத்தில் 'இந்துத்வா' சக்திகளால் எரிக்கப்பட்ட உள்ளூர் தி.மு.க. எம்.எல்.ஏ. சி.டி. தண்டபாணியின் ஜீப், அவர் தாக்கப்பட்ட சம்பவம், முன்னாள் தி.மு.க. எம்.பி. மு. ராமநாதன் இல்லம் தாக்கப்பட்ட காட்சி, ஒருவருக்கொருவர் கடுமையாய் தாக்கிக் கொண்ட வார்த்தைப் பிரயோகங்கள் கண்முன் வந்து நிற்கத்தானே செய்யும்?



• சி.பி. ராதா கிருஷ்ணன்



• எஸ்.ஆர்.பி.

வேட்பு மனு தாக்கலுக்கு இரண்டு வார காலம் முன்பிருந்தே அதிமுக. கூட்டணி யில் வ. 'கம்யூனிஸ்டு வேட்பாளர் ஆர். நல்லகண்ணுவுக்கு அ.தி.மு.க., காங்கிரஸ், சி.பி.எம். கட்சிகள் போட்டி போட்டுக் கொண்டு வாழ்த்துச் செய்தியும், பாராட்டு விழாக்களும், பிரசார உத்தியுமாய் நகர்ந்து கொண்டிருக்க, தி.மு.க. திடீரென்று சோம்பல் முறித்துக் கொண்டு எழுந்தது. வேட்பு மனுதாக்கலுக்கு மூன்று நாள் முன்பு அதிரடி தி.மு.க. செயல் வீரர்கள் கூட்டம். வேட்பாளர் அறிமுகம். சி.டி. தண்டபாணி, மு. ராமநாதன் முன்னிலையில் நடந்த முதல் கூட்டத்திலேயே வேட்பாளர் சி.பி. ராதா கிருஷ்ணன் 'மிஸ்ஸிங்'.

சில நூறு தி.மு.க. உடன்பிறப்புகள் மத்தியில் எண்ணி பத்திருபது பா.ஜ.க. தொண்டர்கள் மட்டுமே. அவர்களும் அங்கங்கே நின்று உள்ளூர சலசலத்துக் கொண்டார்கள்.

"ராதா அண்ணன் வருவாரா?"

"ம். வருவார்!"

"அவர் எங்கப்பா வரப் போறார்? அதுவும் 'இவங்க' கூட்டின கூட்டத்துக்கு!"

'**எ**ன்ன கோபம்?' நாம் நெருங்கியதும் முகம் மாறி தொனியையே மாற்றிக் கொண்டு, "கோபமெல்லாம் இல்லைங்க. முறையா அழைப்பும் வந்தது. அண்ணனுக்கு 'டைட்' ஷெட்யூல். திருப்பூர்ல ம.தி.மு.க. ஊழியர் கூட்டம். முந்தியே ஏற்பாடு. அதுக்குப் போயிட்டார்..." என்றனர்.

"ச்சே. நம்ம ராமநாதன் அண்ணன், ராதாகிருஷ்ணனுக்கு பொன்னாடை போர்த்தற கண்கொள்ளாக் காட்சியப் பார்க்கலாம்னு வந்தேன். ஏமாத்திபுட்டாங்களே!"

இப்படியும் ஓர் உடன்பிறப்பு.

"நம் அணி வெற்றி உறுதிசெய்யப்பட்டு விட்டதாகப் பலரும் சொன்னார்கள். உண்மைதான். ஆனால் அதற்காக அப்படியே இருந்து விடக்

# கோவையைத்

கூடாது. எதிர் அணியில் அணிவகுக்கும் கட்சிகள் எல்லாமே மக்களை திசை திருப்புவதில் நிபுணத்துவம் வாய்ந்தவை. நாமும் சளைத்தவர்கள் அல்ல. யாரும் சோம்பியிருந்திடக் கூடாது என்பதற்காகச் சொல்கிறேன்."

– மு. ராமநாதன் பேச்சுக்கு ஏக கைதட்டல்.

"அண்ணன் எப்படி நாசூக்கா தன்

• கம்யூனிஸ்ட்களின் ஊர்வலம்



அதிருப்தியைக் காட்டறார் பார்த்தியா?"

"என்ன காட்டி என்ன செய்யறது. 'தாமரைய'த் தூக்கி வோட்டுக் கேட்க வச்சுட்டாரே தலைவர்."

இங்கே இப்படியென்றால் கம்யூனிஸ்ட் கட்சி வட்டாரத்தில் நிலையே வேறு. உள்ளூர்ப் பிரமுகர் எஸ். கண்ணனும், திருப்பூர் பிரமுகர் சுப்புராயனும் 'சீட்'டுக்கு உட்கட்சியிலேயே போராட, இருவருக்கும் இல்லாமல் மாநிலச் செயலாளரையே நிறுத்தி விட்டார்கள். இருந்தாலும் கம்யூனிஸ்டுகளுக்குள்ளேயே உள்ள கட்டுப்பாடு அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் படு சுறுசுறுப்பாய் இயங்க வைத்திருக்கிறது. அதிலும் 'அம்மா' கட்சிக்காரர்கள் நல்லகண்ணுக்கு நல்ல சப்போர்ட். 'அவர்கள்' காசில்லாமல் தம் கூட்டணிக் வாக்காளர் சந்திப்பு, தேர்தல் சுவரொட்டிகள், சுவர் விளம்பரம் என, படு அமர்க்களம்.

"எங்கள் அணியை மக்கள் வரவேற்கிறார்கள். மதச்சார்பின்மை உள்ள ஒரே கூட்டணி எங்களுடையதுதான். கோவை தொகுதியில் எங்களுக்காக 'மேயர்' இருக்கிறார். சட்டமன்ற எதிர்க்கட்சித் துணைத் தலைவர் இருக்கிறார். இரண்டு எம்.எல். ஏக்கள், ஏராள கவுன்சிலர்கள், ஊராட்சி ஒன்றியத் தலைவர்கள் என பெரிய படை பலம் உள்ளது. போதாக்குறைக்கு எஸ்.ஆர்.பி. மாதிரி ஒரு நேர்மையான மனிதர் தொகுதிக்குக் கிடைக்க வேண்டுமே! எங்களுக்கு இந்தத் தேர்தல் திருப்புமுனையாக அமையப் போகிறது" எனப் புளகாங்கிதப்பட்டுப் பேசுகின்றனர் த.மா.கா. தொண்டர்கள்.

# தக்க வைக்குமா பா.ஜ.க?

கட்சிக்காக வேலை செய்யும் ஒரே தொகுதி அநேகமாக இதுவாகத்தான் இருக்கும்.



• மேளதாளத்துடன் வேட்புமனு தாக்கல்!

கோவை மக்களவைத் தொகுதியில் ஆறு சட்டமன்றத் தொகுதிகள். திருப்பூர், பல்லடம் தொகுதியில் பனியன் தொழில் நலிவு, விவசாய பாதிப்பு இரண்டுமே முன் நிற்கின்றன. திருப்பூர் கம்யூனிஸ்டுகள் பகுதி என்றால், பல்லடம் முழுக்க முழுக்க கிராமங்கள் நிறைந்த பகுதி. ஒட்டுமொத்த வோட்டுக்களும் அ.தி.மு.கவுக்கே குவியும் என ஒரு கணக்கீடு. அடுத்துள்ள சிங்கநல்லூர், கோவை கிழக்கு இரண்டுமே பஞ்சாலை, இன்ஜினியரிங் தொழில் ஏரியா.

பெரும்பாலும் ஆலைகள் மூடல், வேலையின்மை பிரச்னை பூதாகாரமாய்த் தலைவிரித்து நிற்கின்றன. கோவை மேற்கு, பேரூர் பகுதிகள் – சொல்லவே வேண்டாம். முஸ்லீம்களின் ஏரியா. பதற்றம், குண்டு வெடிப்பு, வியாபார பாதிப்பு, தங்க நகைத் தொழில் நசிவு என ஆளும் அர்சையே பகிரங்கமாய்க் குற்றம்சாட்டி பேசுகின்றனர் மக்கள். இஸ்லாமியர் வாக்கு மட்டும் இப்பகுதியில் ஒரு லட்சத்திற்கு மேல் என ஒரு கணக்கீடு. அதைப் பெறுபவர் யார் என்று



மூப்பனார் தமது அணியில் கோவைக்கு எஸ்.ஆர்.பியை அறிவித்த உடனே த.மா.கா. மாவட்டத் தலைமையிடம் கூட மிகுந்த பரபரப்புக்கு உள்ளாகியிருந்தது. உடனடி 'சைக்கிள்' பயணம். பிரமுகர் சந்திப்பு.

சில இஸ்லாமியரிடம் கேட்டால் பகிரங்க மாகவே பேசுகிறார்கள். அவர்களிடம் தி.மு.க. - பா.ஜ.க. கூட்டணி மீதான வெறுப்பு அப்பட்டமாகத் தெரிகிறது.

"யாருக்கு வோட்டுப் போடுகிறோமோ இல்லையோ மசூதியை இடித்தவர்களுக்கு எந்த ஒரு இஸ்லாமியனும் வோட்டுப் போட மாட்டான். எங்களை இப்படிக் கூட்டணி போட்டு மனம் நோகச் செய்து விட்டார் கலைஞர்!" என்பதே பலரின் வெளிப்பாடு.

**பா**.ஜ.க. எம்.பி. பதவியில் ராதாகிருஷ்ணன் பதின்மூன்று மாத காலமே இருந்தாலும் ஒரு மாமாங்கமே எம்.பியாக இருந்து ஒன்றுமே செய்யாமல் போய் விட்டது போல் பாமர மக்களிடம் ஒரு பிரமையும் - கோபமும் உள்ளது. உள்ளூர் தி.மு.க.வினரின் அதிருப்தி ஒரு பக்கம். இன்னும் சிலரிடமோ அங்கங்கே தொகுதிக்கு நன்றி சொல்லவே வரவில்லை எனப் புறப்படும் குற்றச்சாட்டு. இத்துடன் கூடவே தொகுதிக்கு ஒதுக்கிய எம்.பி. நிதியில் எதுவுமே செய்யாமல் கஜானாவுக்கே திருப்பியனுப்பிய எம்.பி. என்கிற பிரசாரமும் - எதிரணியில் - கூடுதலாய் வலுப்பெற்றுள்ளது.

இந்த இக்கட்டான சூழலில் எந்த மாதிரி பிரசார உத்தியை வைத்து வெல்லப் போகிறார் பா.ஜ.க. வேட்பாளர் சி.பி. ராதாகிருஷ்ணன்?

"நீங்கள் சுட்டிக்காட்டுவது போல் என் தொகுதி மக்களிடம் என் மீது எந்த அதிருப்தியுமில்லை. மக்கள் முன்பை விட மிகுந்த பாசத்தோடு வரவேற்கிறார்கள். சென்ற முறை வென்றதற்கு - வாக்காளர்களுக்கு நன்றி அறிவிப்பினை வார்டு வாரியாகப் போய்ச் செய்திருக்கிறேன். போக முடியாத சில ஊர்களில் கூட்டம் போட்டு, நானும் எங்கள் கட்சிக்காரர்களும் நன்றி அறிவிப்பு செய்திருக்கிறோம். கைத்தறி, பஞ்சாலை, பனியனுக்கு அதிகமாய் நிதி ஒதுக்கீடு பெற்றுத் தந்த எம்.பி. நான். பள்ளிக்கூடங்களுக்கும், மருத்துவமனைகளுக்கும், சாக்கடை வசதி போன்றவற்றுக்கும் எம்.பி. நிதி ஒதுக்கீடு செய்துள்ளேன். கூட்டணிக் கட்சிகளிடமும் எந்தக் குழப்பமுமில்லை. தி.மு.க. அணி கூட்டிய சில கூட்டங்களில் கலந்து கொள்ள முடியாமல் போனது உண்மைதான். காரணம் நேரமின்மை. நெருக்கும் வேலை. எனினும் சி.டி. தண்டபாணி, மு. ராமநாதன் அவர்களுடன் தினமும் தொடர்பு கொண்டு, 'அவர்களின் உழைப்புதான் எங்களின் வெற்றி' என்றும் வலியுறுத்திக் கொண்டுள்ளேன். அவர்களும் எங்கள் வெற்றிக்காகப் பாடுபட்டு வருகிறார்கள். இது எங்களை எதிர்க்கும் கம்யூனிஸ்டுகள் மக்களை திசைதிருப்பச் செய்யும் பிரசார உத்தி. ஏற்கெனவே பா.ஜ.க. ஆட்சி வந்தால் தாழ்த்தப்பட்டவர்களும், சிறுபான்மையினரும் இந்தத் தேசத்தில் வாழவே முடியாது எனப் பிரசாரம் செய்தவர்கள்தானே அவர்கள்? பதின்மூன்று மாத பா.ஜ.க. ஆட்சியில் அம்மக்கள் அப்படியா துன்புறுத்தப்பட்டார்கள்? சுருக்கமாகச் சொன்னால் கடந்த கால ஆட்சிகளிலேயே சிறுபான்மையினரும், தாழ்த்தப்பட்ட மக்களும் மிக சுபிட்சமாக வாழ்ந்தது - வாழ்ந்து கொண்டிருப்பது எங்கள் ஆட்சியில்தான். இதை மக்கள் புரிந்து கொண்டிருக்கிறார்கள். நான் தொகுதிக்குக் குறுகிய காலத்தில் செய்த அளப்பரிய பணிகளை தொகுதி மக்களும் பாராட்டவே செய்கிறார்கள். வேண்டுமானால் பாருங்கள். இந்த முறை முன்பை விடக் கூடுதல் வாக்குகள் பெற்று வெற்றி பெறுவேன்'' என்கிறார் நம்பிக்கையுடன்.

கட்டுரை, படங்கள் : **கேயெஸ்வி**

---

**"அந்த வீட்டுலே பிசாசுங்க நடமாடுதுன்னு சொல்லியும் நீங்க அதே வீட்டுக்குக் குடிபோகணும்னு சொல்றீங்களே எப்படி?"**

**"எல்லாம் என் பெண்டாட்டி இருக்கிற தைரியத்தில்தான்!"**

**— எஸ். உஷாதேவி.**



# ஆரோக்கியமான தூக்கத்திற்கு அருமருந்து!



DP Foam வழங்கும் PUF மெத்தைகள், களைத்து வரும் முதுகுகளுக்கு மிருதுவான மருந்து. நாளெல்லாம் உழைத்த சோர்வு தீர உறங்க சுகமான படுக்கைகள். DP Foam மெத்தைகள் மற்ற Foam மெத்தைகளைவிட அடர்த்தியாக இருப்பதால் முதுகிற்கு இதமான பாதுகாப்பு தருகின்றன. நீண்டகாலம் உழைக்கின்றன. பருத்தி மெத்தைகளில் ஆவது போல் தூசி படாது. கழுவலாம். சுலபமாக மடித்தும் வைக்கலாம்.

குடும்பத்தில் அனைவரும் நிம்மதியாக தூங்கி புத்துணர்ச்சியுடன் விழித்தெழ, உங்கள் மெத்தைகள் DP Foam ஆக இருக்கட்டும்.

DP Foam ஸ்லீப் பில்லோ மெத்தைகள், காண்டூர் தலையணைகள், அதிஅடர்த்தி மெத்தைகள், கன்வர்ட்டபிள் மெத்தைகள், சேர் காட், ஸ்போர்ட்ஸ் பேட்ஸ் மற்றும் போல்ஸ்டர்கள், சென்னையிலும் பாண்டியிலும் உள்ள எங்கள் கம்பெனி கடைகளில் மட்டுமே கிடைக்கும்.




**Sweet Dreams**

**Mattresses**

துடிப்பான துவக்கத்திற்கு, நிம்மதியான இரவுகள்.




- சென்னை: 180, லஸ் சர்ச் சாலை, கடை எண் 29, T. N. H. B. ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ், லஸ் கார்னர், மைலாப்பூர், சென்னை-4. (காமதேனு தியேட்டர் அருகில்) போன்: 498 2663.
- பாண்டிச்சேரி: 13, ரங்கப்பிள்ளை தெரு, பாண்டிச்சேரி-605001 போன்: 221095

FIDELIS -DP FOAM-388

# வட்டமேஜை

## வாக்களிக்க மாட்டார்கள்!

✉ உலகிலேயே மிக அதிகமான பேர்களுக்கு வேலை கொடுத்திருப்பதாகப் பீற்றிக் கொள்ளும் 'இந்திய ரயில்வே' உடனடியாக அதிரடி நடவடிக்கையில் இறங்கி, களையெடுப்பு நடத்த வேண்டும். இல்லையெனில் தலையங்கம் குறிப்பிட்டது போல அதிக விபத்துக்குக் காரணமாகி 'கின்னஸ்' சாதனை படைத்துவிடும்.
திருச்செங்கோடு, டி.ஏ.சி. பிரகாஷ்.

✉ 'நிலையான ஆட்சி' என்று வசனம் பேசி, பின் தமது கட்சியின் ஆதரவை வாபஸ் பெற்று மக்களின் மேல் மறைமுகமாக வரிச்சுமைகளை சுமக்கச் செய்த ஜெ.வுக்கு மக்கள் கூட்டம் கூடுவது வேடிக்கை பார்க்கத்தானே தவிர, தங்களின் கட்டுரைப் பொருள்படி வாக்களிக்க அல்ல.
மணக்குப்பம், வி.எஸ். மோஹன்ராஜ்.

✉ பொய்யை உண்மையென நம்பும்படி சொல்லும் திறமை ஜெயலலிதாவிடம் இருப்பதை உணர முடிந்தது. இதில் பாமர மக்கள் ஏமாறுவதற்கு வாய்ப்பு அதிகம். இன்னும் ஒருமுறை 'ஜெ' தலையெடுத்து விட்டால் அது இந்தியாவுக்கும், தமிழகத்துக்கும் மிகப் பெரிய பாதகமாக அமையும். எனவே வரும் தேர்தலில் அதைத் தடுக்கும் திறமும், கடமையும் படித்தவர்களிடமும், விவரம் தெரிந்தவர்களிடமும்தான் இருக்கிறது.
திருவண்ணாதபுரம்,
தி.சு. பாலசுப்ரமணியன்.

✉ 'மேஜிக் லாண்டன்' குழுவினரின் பொன்னியின் செல்வன் நாடகம் பற்றிய கட்டுரையைப் படித்து மகிழ்ந்தேன். சுருக்குப் பையில் ராட்சஸத் திணிப்பு நடந்திருந்தாலும், கட்டுரையைப் படித்த கல்கி அபிமானிகளின் இதயம் எனும் சுருக்குப் பை நெகிழ்ந்திருக்கும் என நம்புகிறேன்.
குட்டலாடம்பட்டி, கே. மூர்த்தி.

✉ ஆர். சூடாமணி எழுதிய 'தரிசனம்' சிறுகதை பெண்களைப் பற்றிய பெரும்பாலான ஆண்களின் மனோபாவத்தினை வெளிப்படுத்தியிருந்தது. இயல்பாகவும் இருந்தது. பாராட்டுகள்.
மயிலாடுதுறை, எல். துர்காதேவி.

✉ தலைசிறந்த இந்திய இலக்கிய மேதைகளில் ஒருவரான பஷீரின் 'ஒரு காதல் டைரி' நாவலை தொடர்கதையாக வெளியிட்டதன் மூலம் 'கல்கி' மிகச் சிறந்த இலக்கிய சேவை புரிந்திருக்கிறது.
கோவில்பட்டி, வெ. சுப்ரமணியபாரதி.

✉ 'காதலின் வெற்றி காதலித்தவர்களின் பிரிவில்தான் இருக்கிறது' என்பதை 'ஒரு காதல் டைரி'யின் மூலம் அருமையாக விளக்கி விட்டார் பஷீர். 'வையவனின் மொழிபெயர்ப்பில் சரஸ்வதிதேவியைப் பற்றி பஷீர் குறிப்பிடுவதாக அமைந்த, 'துயரின் இனிமை கலந்த மோகன காவியமே' என்ற வரி இன்னும் என் காதில் ஒலித்துக் கொண்டுதான் உள்ளது.
பூனாம்பாளையம், ஆர். பி. ஜெயச்சந்திரன்.

✉ 13.8.99 நாளிதழ்களில் வாத்வா கமிட்டி அறிக்கை பற்றிப் படித்திருப்பீர்கள். மீடியா பொறுப்பற்ற முறையில் செய்திகளைத் திரித்து வெளியிட்டதை வாத்வா கண்டித்திருக்கிறார். அது உங்களுக்கும் பொருந்தும்.
சென்னை – 17, ஆர். நரசிம்மன்.

*(இல்லை. வாத்வா கமிட்டி சொன்னது, கல்கிக்குப் பொருந்தாது. ஒரிஸாவில் நடந்த ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த கிறிஸ்துவ மிஷனெரியான ஸ்டெயின்ஸும் அவரது இரு குழந்தைகளும் எரித்துக் கொலை செய்யப்பட்டது பற்றிய நமது நேரடி ரிப்போர்ட்டில் என்ன சொல்லியிருக்கிறோம்? "இந்தக் கொலையில் பஜ்ரங்தள் சம்பந்தப்பட்டிருக்கிறதா இல்லையா என்பதில் இரண்டு கருத்துக்கள் இருந்தாலும் இதில் தாராசிங் சம்பந்தப்பட்டிருக்கிறான் என்பதில் மட்டும் அனைவரும் ஒத்துப் போகிறார்கள்" என்றுதான் முத்தாய்ப்பாகச் சொல்லியிருக்கிறோம். எனவே, வாத்வா கமிட்டியின் கண்டனம் கல்கிக்குப் பொருந்தாது.*

– ஆர்

# CAMPING CAN BE FUN

# THE WEEPING DEER

# BATTLE OF SEXES

# SILENCE IS GOLDEN!



SEPTEMBER
1999
Rs. 6/- only

# THE BUFFALO BILL

# GOKULAM

*The monthly magazine for children*

47, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097

சுமார் பதினைந்து வருடங்கள் முன்பு நடந்த போபால் விஷவாயுக் கசிவு விபத்தை மறந்திருக்க மாட்டீர்கள். உயிர் பிழைக்க, நகரமே திரண்டு ஓடியபோது இரண்டு குடும்பங்கள் மட்டும் வீட்டைக் காலி செய்து கொண்டு ஓடாமல் அங்கேயே தங்கி விட்டன.

விஷவாயு அவர்களை மட்டும் தாக்கவில்லை. எப்படி? அவர்கள் தம் வீட்டுக்கு 'அக்னிஹோத்திரம்' செய்து ஹோமப் புகையைப் பரவ விட்டு விட்டதால் விஷ வாயு அங்கே செயலிழந்து போனது!

– இது ஹிந்து நாளிதழில் அப்போது வந்த ஆதாரபூர்வ செய்தி.

இதைப் படித்த ஆர். வெங்கடேசன் என்கிற திருச்சிவாசிக்கு ஓர் எண்ணம் தோன்றியது. 'நாம் இந்த அக்னி ஹோத்திரத்தை முறைப்படி செய்யக் கற்றுக் கொண்டு விரும்புகிறவர்களுக்கெல்லாமும் கற்றுத் தந்து, பரப்பலாமே?' என்று எண்ணினார். அன்றிலிருந்து அதுவே இவரது 'கடமை'யாகிப் போனதாகக் குறிப்பிடுகிறார்.

"அக்னிஹோத்ரம் செய்வதென்பது, பிராமணர்களுக்கு மட்டுமேயான அனுஷ்டானம் என்றொரு தவறான அபிப்பிராயம் இங்கே இருக்கிறது. அது உடல்நலனைப் பேணுவதற்குக் கைகண்ட முறை. எல்லா தரப்பினரும் ஆண் – பெண் பேதமின்றிச் செய்யலாம்" என்கிறார் வெங்கடேசன்.

திருச்சி ஜமால் முகம்மது கல்லூரி பௌதிகத் துறைப் பேராசிரியர் ஜாபர் தலைமையில் செய்த ஆய்வின்படி, அக்னி ஹோத்ரம் செய்த இடத்தில், நாம் சுவாசிக்கும் காற்றில் உள்ள 95 சதவீதக் கிருமிகள் அழிக்கப்பட்டு விடுகின்றன என்பதை இதற்கு ஆதாரமாகக் காட்டுகிறார் வெங்கடேசன்.

அக்னிஹோத்ரம் செய்வது எப்படி?

பிரமிட் உருவ செப்புப் பாத்திரம். (நீள, அகல, உயரங்களுக்குத் துல்லியமான கணக்கு உண்டு) சிறிய செம்பு ஸ்டாண்ட், சிறிய செம்புக் கிண்ணம், நெய்க்கரண்டி, இடுக்கி – இவையும் செம்புதான்.

சுத்தமான பசு நெய், பசுஞ்சாண விரட்டி, முனை உடையாத கைக்குத்தல் பச்சரிசி, ஆல், அத்தி, பரசு, அரசு, வில்வ மரங்களின் – ஏதேனும் ஒன்றின் குச்சிகள் இத்தனையும் வேண்டும் அக்னி ஹோத்ரத்துக்கு.

மொத்தம் பத்து நிமிடமே பிடிக்கும் இதனை, உதய காலத்திலும் அஸ்தமன நேரத்திலும் (துல்லியமான உதய – அஸ்தமன நேரத்தை வெங்கடேசன் கணித்து அனுப்பி விடுகிறாராம்) செய்ய வேண்டும்.

குச்சிகளை ஒடித்து செம்புப் பாத்திரத்தில் காற்றோட்டமாக அடுக்க வேண்டும். பசுஞ்சாண விரட்டியை ஒடித்து நாற்புறமும் சுற்றி அடுக்க வேண்டும். இரண்டு சிட்டிகை பச்சரிசியை செம்புக் கிண்ணத்தில் இரு பாகமாக வைத்து, அதில் இரண்டு சொட்டு பசு நெய் சேர்த்துக் கலக்க வேண்டும்.

கற்பூரம், குங்கிலியம், நெய் அரசங்குச்சி – இவற்றில் ஏதேனும் ஒன்றைப் பயன்படுத்தி, தாமிரப் பாத்திரத்தினுள்ளே தீ மூட்ட வேண்டும். அக்னி, புகையின்றி ஜுவாலையுடன் எரிய வேண்டியது முக்கியம்.

மிகச் சரியாக சூரிய உதய நிமிடத்தில், நெய் கலந்த முதல் சிட்டிகைப் பச்சரிசியை,

• அக்னிஹோத்ரம் செய்கிறார் வெங்கடேசன்



அனைத்துக்குமான

"சூர்யாய ஸ்வாஹா. சூர்யாய இதம் நமமா" என்றும், இரண்டவாது சிட்டிகையை, "ப்ரஜா பதயே ஸ்வாஹா. பிரஜா பதயே இதம் நமமா" என்றும் சொல்லி அக்னியில் இட வேண்டும். சூர்ய அஸ்தமனத்தின் போது சொல்லப்படும் மந்திரம் வேறு.

அக்னிஹோத்ர மந்திரங்களை உச்சரிக்கும் போது உணர்வில்லாமல் ஏனோதானோ வென்றோ, அதிக சப்தமாகவோ சொல்லக் கூடாது என்கிறார் வெங்கடேசன்.

கணவன் – மனைவி இருவரும் வேலைக் குச் செல்பவர்களாக இருந்தால் உதய – அஸ்த மன நேரத்தில் சரியாகச்

• அக்னிஹோத்ர உபகரணங்கள்



செய்ய இயலாமல் போய்விடலாம் அல்லவா? நான் தவறாமல் செய்ய வேண்டிய இக் காரியத்தை நம்பிக் கைக்குகந்த பணியாளர்கள் மூலமாகக் கூட குறித்த நேரத்தில் செய்யச் சொல்லலாம் என்கிறார்.

## அரிய சிகிச்சை!

அறிவியல் யுகத்தில் இதென்ன பழம் பஞ்சாங்கம் என்று கேட்பவர்களுக்குப் பல ஆதாரபூர்வ சான்றுகள் வைத்திருக்கிறார் இவர்.

அமெரிக்கா, போலந்து, சிலி, மேற்கு ஜெர்மனி நாடுகளில் அக்னிஹோத்ரம் விஞ் ஞானிகளின் ஆய்வுக்குட்பட்டு, அதன் நன்மையான விளைவுகளடங்கிய ஆய்வுக் கட்டுரைகள் பலவற்றை நம்மிடம் காட்டினார்.

ஜெர்மனியின் மருத்துவ ஆராய்ச்சியாளர் மோனிகா ஜெலே, அக்னிஹோத்ர சாம் பலைப் பயன்படுத்திச் செய்த சிகிச்சைகள் எத்தனை வெற்றியளித்திருக்கின்றன; என் னென்ன வியாதிகள் அதன் மூலம் குணமாகும் என்பது பற்றி ஒரு பட்டியலே தந்திருக் கிறார்.

மேற்கு ஜெர்மனியின் அடர்ந்த காடுகளில் ஒரு சமயம் மரங்கள் பட்டுப் போய் காடு அழிய நேர்ந்தபோது, அரசே அங்கு அக்னி ஹோத்ரம் நடத்தியதாகவும் பட்டுப் போன மரங்கள் மீண்டும் துளிர்த்ததாகவும் 'மிர்ரர்' இதழில் வெளியான ஒரு செய்தியைக் காட்டினார் வெங்கடேசன்.

யூகோஸ்லாவியாவைச் சேர்ந்த 'ரோவினி' என்ற நகரில் அணுக்கதிர் வீச்சு பரவியபோது அங்கே அக்னி ஹோத்ரம் செய்தார்களாம். அதன்பின் பரிசோதித்ததில் கதிர் வீச்சு அபாயம் பெருமளவு குறைந்து, இல்லா மலே ஆகிவிட்டதை, அணுக்கதிர் அளவுக் கருவி காட்டியிருப்பதாகச் சொல்கிறார் கள் விஞ்ஞானிகள்.

"இவ்வளவு ஏன்? போதைப் பழக் கத்துக்கு அடிமையானோர், அக்னி ஹோத்ரத்தால் அதிலிருந்து விடுபட முடியுமென்று புதுதில்லி ராணுவ மருத் துவ மனை ஆய்வுக் குறிப்பு தெரிவிக் கிறது! இதோ பாருங்கள்" என்று ஆதா ரம் நீட்டுகிறார்.

அணுக்கதிர் வீச்சு, போதைப் பழக்கம் போன்ற பேரழிவுகளுக்கு மட்டும்தான் என்றில்லை. சாதாரண 'சைனஸ்' தொல் லையிலிருந்து பெண்களின் 'பிரத்தியேகப்' பிரச்னைகள் வரைக்கும் கூட அக்னி ஹோத்ர சாம்பல் அருமருந்தாகப் பயன்படுவதாகச் சொன்னார் வெங்கடேசன்.

மாதவிலக்கின் போது அளவுக்கதிக மாக ரத்தப் போக்கு ஏற்பட்டு சோர்ந்து போன சில பெண்களுக்கு, அக்னிஹோத்ர சாம்பலை தினம் இருமுறை சுத்தமான நீரில் கரைத்து, குடிக்கத் தர, தற்போது அவர்களுக்கு அந்த அபாயம் அதிகமாக இல்லை என்றார் திருமதி வெங்கடேசன்.

வெங்கடேசனுக்கு இது சம்பந்த மான அனைத்துத் தகவல்களையும் தருவது மகாராஷ்டிரா – சோலா பூர் மாவட்டம், சிவபுரியிலுள்ள 'வேத விஞ்ஞான ஆராய்ச்சி நிலையம்'தானாம்.

"இந்த அற்புதமான மருத் துவமுறையை முடிந்தவரை பரப்புவதே என் பணி" என்கிறார் வெங்கடேசன்.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# போட்டிக் கதை – 1

"லவ் பத்தி என்ன நினைக்கிறே?"

காவ்யா கேட்டபோது அதிர்ந்தேன்.

என்னை விட எட்டு வயது சிறியவள். என் சித்தியின் பெண். பத்தாவது பரீட்சை எழுதி விட்டு ரிசல்ட்டுக்காகக் காத்திருக்கிறாள். விடுமுறைக்கு இங்கு வந்திருக்கிறாள்.

சென்னை நாகரிகம், அவளை விட வயதில் மூத்த, என்னிடம் கொஞ்சமும் தயங்காமல் இந்தக் கேள்வியைக் கேட்க வைத்திருக்கிறது.

''எப்படி நினைச்சா உனக்கு வசதியாயிருக்கும்?''

அவள் சற்றுத் தடுமாறித்தான் போனாள். முகம் சிவந்து போயிருந்தது. நகத்தைக் கடித்தாள். மொட்டை மாடியின் விளிம்பு வரை வேகமாக நடந்து சென்றாள். பின் அதே வேகத்தில் திரும்பி வந்தாள்.



''சும்மா கேட்டேன்'' என்றாள்.

''நான் சீரியஸா கேக்கறேன். சொல்லு, எப்படி நினைச்சா உனக்கு வசதியாயிருக்கும்?''

"இல்லே... வந்து... நீ யாரையாவது 'லவ்' பண்ணியிருக்கியா?"

"உம்"

"யாரை?"

''அது உனக்குத் தேவையில்லை. நகத்தைக் கடிக்காதே. உனக்கு என்ன வேணும்?" சற்றே கோபத்தைக் காட்டினேன்.

''வந்து... நானும் ஒருத்தனை லவ் பண்றேன்.''

"ஓஹோ!"

"என்ன ஓஹோ?"

"நம்ப முடியலை!"

"ஏன்?"

"உனக்கு வயசு பதினஞ்சு! இருந்தாலும் உன்னை நான் இன்னும் உப்பு மூட்டை ஏத்திட்டுப் போன குழந்தையாத்தான் பாத்துக்கிட்டு இருக்கேன்."

''நம்பாட்டிப் போ! யார்கிட்டேயும் சொல்லிட மாட்டியே?"

எனக்கு அப்போதுதான் நிலைமையின் விபரீதம் புரிந்தது. "சொல்ல மாட்டேன்... யாரு?"

"பக்கத்து வீடு. பேர் சூரஜ்."

ஆ. உமா சங்கர்
(அறிமுக எழுத்தாளர்)



"எப்படி இது?"

"அவன் தங்கைதான் என்கிட்டே முதல்லே வந்து சொன்னா. அவகிட்டேயே நானும் அவனை லவ் பண்றதா சொல்லி யனுப்பினேன். அப்புறம் ஸ்கூல்ல லஞ்ச்ல ஒண்ணா உக்காந்துதான் சாப்பிடுவோம். அப்புறம் நைட் படிச்சு முடிச்சுட்டு படுக்கப் போகும் போது ஃபோன் செய்வேன். அவ னும் அவங்க வீட்டு ஃபோன் பக்கத்துலேயே படுத்துட்டிருப்பான்."

காவ்யா உற்சாகமாய் விவரித்துக் கொண்டே போனாள். எனக்கோ பற்றி எரிந்தது.

"நீ ஃபோன் பண்ணும்போது உன் வீட்டுல யாரும் உன்னைக் கவனிச்சதில்லையா?"

"எப்படிக் கவனிக்க முடியும்? நான் நைட்டு படிச்சு முடிக்க பன்னண்டு ஒண்ணுன்னு ஆயிடுமே! எல்லாம் தூங்கிடுவாங்க."

அவள் திறமையை அவளே மெச்சிக் கொண்டிருக்க, எனக்கு ரத்தம் கொதித்தது.

காவ்யா, "நான் பண்றது தப்பா?" என்று கேட்டாள்.

"தப்பில்லே! ஆனா தப்புதான்!"

"குழப்பறே..."

"லவ் பண்றது தப்பில்லே! ஆனா எந்த வயசுல பண்றோம்கிறது முக்கியம்."

"இந்த வயசுல பண்ணாம பின்ன எப்ப?"

"ஸ்டுப்பிட்! இது படிக்கிற வயசு. படிப்புல மட்டும்தான் கவனம் இருக்கணும்!"

"நான் நல்லாத்தானே படிச்சுட்டிருக்கேன். நீ வேணும்னா பாரு, மோர்தேன் 85% எடுத்துக் காட்டறேன்."

"சரி, அவன்..."

சட்டென்று இடைமறித்தாள்.

"அவன் என்னை விடவே நல்லா

# கண்ணாடியில் என்னைப் பார்த்தேன்

படிப்பான். டென்த்லே அவன் எய்ட்டி நைன் பர்சன்ட் தெரியுமா? இப்ப பிளஸ் ஒன் எழுதியிருக்கான்."

"காவ்யா, இது சித்தப்பாவுக்குத் தெரிஞ்சா என்ன ஆகும் தெரியுமா?"

"அதை நினைச்சாத்தான் பயமாயிருக்கு."

"எத்தனை நாளா உங்க லவ்?"

"ரெண்டு வருஷம்."

அதிர்ந்தேன். பதிமூன்று வயதில் ஒரு பெண் எவ்வளவு துணிச்சல் இருந்தால் இப்படிச் செய்வாள்!

"அவன் இல்லாமல் என்னால வாழ முடியாது. கண்டிப்பா செத்துடுவேன்."

சன்னமாய் விசும்பினாள். அவளைப் பார்க்கப் பார்க்க சிரிப்பு, கோபம், பரிதாபம் என ஒருவித கலவையான உணர்வு எழும்பிக் கொண்டிருந்தது எனக்குள். இருவரும் வேலைக்குப் போவதால் இவளைக் கவனிக்க முடியவில்லையா இவள் பெற்றோருக்கு? அல்லது அதிகம் சினிமா பார்க்கிறாளோ?

"சரி! சரி! அழாதே! சொல்றதைக் கேள்! அழறதை நிறுத்து!"

அவள் அழுவதை நிறுத்தவில்லை. வானத்தை நிமிர்ந்து பார்த்தேன். நிலா நேர் மேலே வந்திருந்தது.

**இ**தே மொட்டை மாடியில் என்னுடைய பத்தொன்பது வயதில் எனக்குக் கிடைத்த அனுபவத்தை எண்ணிப் பார்த்தேன். அப்போது காவ்யா இடத்தில் நானும், என்னிடத்தில் என் மாமாவும் இருந்தார். இப்போது என்னை நானே கண்ணாடியில் பார்த்துக் கொள்வது போல் இருக்கிறது. அப்போது என் மாமாவின் பேரில் எனக்குக் கோபம்தான் வந்தது. எனக்குப் புரியவில்லை அல்லது புரிந்து கொண்டே நடித்திருக்க வேண்டும்.

மாமா 'வேண்டாம்' என்று எவ்வளவோ அட்வைஸ் பண்ணியும் கேட்காமல் தாராவின் பின்னால் சுற்றி, பி.எஸ்.சியில் 'கோட்' அடித்து, இன்று வரை பி.எஸ்ஸியை முடிக்க முடியாமல் தடுமாறிக் கொண்டிருக்கிறேன். இன்னமும் என் பாடப் புத்தகத்தைப் பிரித்தால் தாராவின் முகம் தெரிவதே அதற்குக் காரணம். தாராவோ கல்யாணமாகிக் கையில் குழந்தையோடு சந்தோஷமாக இருக்கிறாள்.

காவ்யா நன்றாகப் படிப்பதாகவும் சொல்கிறானே! அதெப்படி? காதலிக்கும் யாருமே ஒழுங்காகப் படிக்க முடியாது என்றல்லவா எண்ணிக் கொண்டிருக்கிறேன்? பொய் சொல்கிறாளோ?! சேச்சே! காவ்யா நன்றாகப் படிக்கிறாள்; படிக்க முடியும் என்றால், அவள் காதல் அவளுடைய படிப்பைப் பாதிக்காவிட்டால், காதலிப்பதில் வேறு என்ன தவறு இருக்க முடியும்? இருந்தாலும் இது ரொம்ப சிறிய வயது அல்லவா? எனக்குக் குழப்பம்தான் மிஞ்சியது.

இவள் காதல் ஒரு சிக்கல் விழுந்த பட்டு நூலாய்ப் பட்டது. கவனமாகச் சிக்கெடுக்காவிட்டால் பட்டு நூல் உபயோகப்படாமல் போய் விடும். பிரச்னைக்கு வெளியே நின்று பார்த்தால்தான் பிரச்னையின் வியூகம் நமக்குப் புலப்படுகிறது. அன்று எனக்கு உயர்வாய்த் தெரிந்த 'என் காதல்', இன்று இவளைப் பார்க்கும் போது எனக்கே பேத்தலாய்ப்படுகிறது. இந்த வயதில் இதெல்லாம் வெறும் எதிர் பாலின ஈர்ப்புதான் என்று தெளிவாகப் புரிகிறது.

**கா**வ்யா அழுவதை நிறுத்தி விட்டு நிமிர்ந்தாள். "ஜெய்! நீயாவது எனக்கு சப்போர்ட் பண்ணுவேன்னு நினைச்சேன்... நான் கீழே போறேன்."

"காவ்யா, நில்லு!" நான் சொல்வதைக் கேளாமல் நடந்தாள். வேகமாய் எழுந்து போய் அவள் கையைப் பிடித்து நிறுத்தினேன்.

---

**க**ர்நாடக மாநில பள்ளிகளில் பத்தாம் வகுப்பு ஹிந்தி பாடப் புத்தகத்தில் இந்தியாவின் புகழ் பெற்ற பெண்மணிகள் என்ற தலைப்பில் கவிக்குயில் சரோஜினி நாயுடு, அன்னை தெரசா, பி.டி. உஷா இவர்களுடன் சோனியா காந்தியையும் புகழ்ந்து குறிப்பிடப்பட்டுள்ளது. நேரு குடும்பத்தில் மேனகா காந்தியாவது சுற்றுச் சூழல் பராமரிப்பு, பிராணிகள் நலனில் தீவிர அக்கறையுடன் ஈடுபட்டுப் பிற நாட்டு அமைப்புகளின் கவனத்தைக் கவர்ந்துள்ளார். சோனியா காந்தி எந்த வகையில் தேசத்தின் புகழை உயர்த்தினார் என்ற கேள்விக்குப் பாடப் புத்தகத் தேர்வு அதிகாரிகளிடமிருந்து பதில் ஏதுமில்லை.

'டெக்கான் ஹெரால்ட்'

தகவல்: அ. ஷண்முகசுந்தரம்



"இப்போ உங்க ரெண்டு பேரோட பேரண்ட்ஸ் இதுக்கு சம்மதிக்கலைன்னா என்ன செய்வே?"

"அதுதான் எனக்கும் புரியலை."

"இங்கே பாரு காவ்யா! இப்போ ஒருவேளை உங்க பேரண்ட்சுக்கு இந்த விவகாரம் தெரிஞ்சிட்டா இப்பவே உங்களைப் பிரிச்சுடுவாங்க இல்லையா?"

"கண்டிப்பா! ஏன்னா அவங்க வீட்டுக்கும் எங்க வீட்டுக்கும் ஏற்கெனவே சின்னச் சின்ன சண்டை நிறைய வந்திருக்கு. எல்லாத்துக்கும் மேல அவங்க வேற ஜாதி."

"அப்படின்னா நான் சொல்றபடி கேளு!"

"சொல்லு."

"உனக்குக் கல்யாண வயசு வர எப்படியும் குறைஞ்சது ஒரு ஏழு வருஷம் ஆகும். அதுவரைக்கும் உங்க லவ் யாருக்கும் தெரியக் கூடாது. தெரிஞ்சா, உங்க காதல் உடனே குளோஸ். அதனால..."

"அதனால?!..."

"நீங்க ரெண்டு பேரும் பழகறதைத் தாற்காலிகமா நிறுத்திக்கணும்."

"ஐயோ!"

"வெயிட்! நான் இன்னும் முடிக்கலை. சரியான டைம் வரும்போது நானே சித்தப்பாட்ட பேசி உங்க கல்யாணத்துக்கு ஏற்பாடு பண்றேன். நீ பிளஸ் ஒன்னும் கூட இங்கே விழுப்புரத்துலயே சேர்ந்து படி. ஏன்னா தூரம்தான் உங்க ரெண்டு பேருக்கும் நல்லது. ஓ.கே.யா?"

"நோ! முடியாது! ரெண்டு வருஷத்து லவ்... டக்குனு எப்படி? சொல்லு எப்படி முடியும்? ஐ கான்ட்!"

"பைத்தியம்! ரெண்டு வருஷம் ரெண்டு வருஷம்னு சொல்றியே! பதினஞ்சு வருஷமா உன்னைப் பெத்து வளர்த்த பேரண்ட்ஸுக்கு நீ செய்ற நன்றிக்கடன் இதுதானா? இதுநாள் வரைக்கும் உன் அப்பா, அம்மாவோட பங்களிப்பையும் உன் சூரஜ்ஜோட பங்களிப்பையும் ஒரு தராசுல வச்சுப் பார். எந்தப் பக்கம் வேல்யூ அதிகம்னு உன் மனச்சாட்சியே சொல்லும்..."

"யெஸ்!" நீண்ட மௌனத்துக்குப் பின் நடுங்கிய குரலோடு ஒற்றையாய் பதில் சொன்னாள்.

"பாரு காவ்யா! இந்தக் காதலெல்லாம் ஒருவிதமான மாயை! இது உனக்கு ரெண்டுங்கெட்டான் வயசு. இன்னும் ஒரு நாலஞ்சு வருஷம் கழிச்சு நீயே புரிஞ்சுக்குவே! நான் உன் அண்ணன்! உனக்கு நல்லதுதான் செய்வேன். என் மேல நம்பிக்கை



**"விசாரணையைத் தள்ளி வைத்ததற்கு நன்றி கூறி, தேர்தல் நெருங்குவதால் இங்கு கூடியிருக்கும் ஜட்ஜ், வக்கீல்கள் டவாலி, பெஞ்ச் க்ளார்க், காவலர்கள் மற்றுமுள்ள எல்லோரும் உங்கள் பொன்னான வாக்குகளை எங்கள் கட்சிக்கே அளித்து ஆதரவு தர வேண்டுகிறேன்."**

**– சுமன்**

வை. சரியான டைம்ல நானே உனக்காக உன் பேரண்ட்ஸ்கிட்டே பேசறேன்! நீ செஞ்சது தப்பில்லை! அதே சமயம் இந்த வயசுல செய்யறது ரைட்டும் இல்லை! என்ன புரியுதா?"

அவள் முகத்தில் நம்பிக்கையும், தெளிவும் வந்தது போல் எனக்குப் பட்டது.

"சரி! நான் இப்ப என்ன செய்யணும்?" என்றாள் காவ்யா. உடனே அவள் கைகளைப் பற்றிக் கொண்டேன்.

"ஓ! தட் இஸ் காவ்யா! குட்! வெரிகுட்! இப்ப நீ மெட்ராஸ் போனவுடன் முதல்ல அந்த சூரஜ்கிட்ட போய் "நேரம் வரும் வரை - ஐ மீன் ஒரு ஏழு வருஷம் - பழகாம இருக்கணும்கிறதைச் சொல்லிடு. நீ சித்தப்பாட்டே கேள். இங்க விழுப்புரத்துல பிளஸ் ஒன் படிக்க நானும் சித்தப்பாட்ட சொல்றேன். அப்படி இல்லன்னாலும் பரவாயில்லை; எனக்கு உன் மேல நம்பிக்கை இருக்கு! நீ இனி சலனத்துக்கு உள்ளாக மாட்டே."

காவ்யா கண்ணீர்த் துளிகளால் என் கைகளை நனைத்தாள்.

"தேங்க்யூ! தேங்க் யூ வெரிமச்! ஜெய்" என்றவாறே எழுந்தாள்.

"வா! போய்ப் படுக்கலாம்" என்றேன்.

இருவரும் கீழே இறங்கி வந்தோம். 'குட் நைட்' பரிமாறிக் கொண்டோம். என் அறைக்கு வந்தேன். காவ்யா உண்மையில் என் அட்வைஸ்படி நடப்பாளோ என்னவோ? ஆனால் இப்போது எனக்குள்ளே, கண்ணாடி பார்த்துக் கலைந்த தலையை சரிசெய்து விட்டு வந்தது போன்று உணர்ந்தேன். ●

# பொன்னியின் செல்வன்

முப்பத்து நான்காம் அத்தியாயம்

## தீவர்த்தி அணைந்தது!

அமாவாசை முன்னிரவு. நன்றாக இருள் சூழ்ந்துவிட்டது. வடதிசையில் தோன்றி மேலே வந்த கரிய மேகங்கள் இப்போது வானவெளி முழுதும் பரவி மறைத்துவிட்டன. ஆகாசத்தில் ஒரு நட்சத்திரம்கூடக் கண் சிமிட்டவில்லை. மரங்களின் மீதும் புதர்களின் மீதும் பறந்த மின்மினிப் பூச்சிகள் சிறிது வெளிச்சம் அளித்தன. அதன் உதவி கொண்டு வந்தியத்தேவன் குதிரையைச் செலுத்திக்கொண்டு போனான். எங்கே போகிறோம், போவதினால் பயன் ஏதேனும் ஏற்படுமா என்பது ஒன்றும் தெளிவாக வில்லை. குந்தவைப் பிராட்டியின் அருமைத் தோழிக்கு ஆபத்து வந்திருக்கிறது. அவளைக் காப்பாற்ற முயலுவது தன் கடமை. அப்புறம் கடவுள் இருக்கிறார்!

ஒரு நாழிகை நேரம் குதிரை ஓடிய பிறகும் பல்லக்கைக் கண்டுபிடிக்க முடியவில்லை. வெறும் பைத்தியக்கார வேலையில் இறங்கி விட்டோமோ என்ற யோசனை வந்தியத்தேவன் மனத்தில் உதித்தது. குதிரையை நிறுத்தினான். அச்சமயம் சற்றுத் தூரத்தில் ஏதோ சத்தம் கேட்டது. கூர்ந்து கவனித்தான். குதிரைக் காலடிச் சத்தம் போலிருந்தது. ஆம், குதிரைதான்!

அமரர் கல்கி




கல்கி கலெக்ஷன்

ஒரு குதிரையா, பல குதிரைகளா என்று தெரியவில்லை. பல்லக்கைக் காவல் புரிந்துகொண்டு போகும் குதிரை வீரர்களாயிருக்கலாம். இனி ஜாக்கிரதை யாகப் போக வேண்டும். திடீரென்று பெருங்கூட்டத்தின் நடுவில் அகப் பட்டுக் கொள்ளக்கூடாது. அதனால் வானதி தேவிக்கும் பயன் இல்லை; தன் காரியமும் கெட்டுப் போகும்.

மெள்ள மெள்ள, நின்று நின்று, குதிரையை விட்டுக்கொண்டு போனான். முன்னால் போவது ஒரே குதிரைதான் என்று ஒருவாறு நிச்சயித் துக்கொண்டான். சற்று நேரத்துக் கெல்லாம் அந்தக் குதிரை ஒரு மேட்டுப் பாங்கான கரையின் மீது ஏறுவது போலத் தோன்றியது. தான் பின் தொடர்வது தெரியாமல் மறைந்து நிற்க விரும்பினான். சுற்றுமுற்றும் கூர்ந்து பார்த்தான். பாழடைந்த மண்டபம் ஒன்று இடிந்த கவர் களுடன் பக்கத்தில் காணப்பட் டது. அதன் அருகே சென்று மொட்டைச் சுவர் ஒன்றின் மறைவில் குதிரையை நிறுத்திக் கொண் டான். முன் னால் சென்று மேட்டில் ஏறிய குதிரையைக் கண்கள் வலிக் கும்படியாக இருட்டில் உற் றுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''யார் அங்கே?'' என்ற குரல் வந்தியத் தேவனைத் திடுக்கிடச் செய் தது. அது அவ னுக்குப் பழக்கப் பட்ட மனிதரின் குரலாகத் தோன் றியது.

''மகாராஜா! அடிமை, நான்தான்!'' என்ற மறுகுரலும் கேட்டது.

ஒரு நிமிட நேரத்துக்கெல்லாம், குரல்கள் கேட்ட இடத்தில் ஒரு தீவர்த்தி வெளிச்சம் தோன்றியது. மரத்தின் மறைவிலிருந்து கையில் தீவர்த்தியுடன் ஒருவன் வெளி வந்தான்.



அதன் வெளிச்சத்தில் குதிரை தெரிந்தது. குதிரையின் மேல் ஓர் ஆள் வீற்றிருப்பதும் தெரிந்தது. குதிரை மேலிருந்தவர் மதுராந்தகர்தான் என்பது உறுதியாயிற்று.

தரையில் நின்றவன் தீவர்த்தியைத் தூக்கிப் பிடித்தபோது இளவரசர் ஏறியிருந்த குதிரை மிரண்டது. முன்னங்கால்களை அது மேலே தூக்கி ஒருதடவை சுழன்றது. பின்னர் சடால் என்று பாய்ந்து ஓடத் தொடங்கியது.

அந்தக் குதிரை நின்ற இடம் ஒரு அகன்ற வாய்க்காலின் கரை. அந்த



மேட்டுக் கரையிலிருந்து குதிரை வாய்க்காலின் வெள்ளத்தில் பாய்ந்தது.

தீவர்த்தி பிடித்த மனிதன் "மகாராஜா! மகாராஜா!" என்று கூவிக்கொண்டே குதிரையைப் பின்தொடர்ந்து வாய்க்காலில் குதித்தான். குதித்தவன் இடறி விழுந்தான். தீவர்த்தி வாய்க்காலின் வெள்ளத்தில் அமிழ்ந்தது.

மறுகணம் முன்னைவிடப் பன்மடங்கு கனாந்தகாரம் சூழ்ந்தது.

அதேசமயத்தில் இலேசாகத் தூறல் போடத் தொடங்கியது.

காற்றினால் மரங்கள் ஆடிய சத்தத்துக்கும் மழைத்தூறலின் சத்தத்துக்கும் மண்டூகங்களின் வறட்டுக் கத்தல்களுக்கும் இடையே மனிதர்களின் அபயக் குரல்களும் குதிரைகளின் காலடிச் சத்தமும் குழப்பமாகக் கேட்டன.

இளவரசர் மதுராந்தகர் அவ்வளவாகத் தைரியத்துக்குப் பெயர் போன மனிதர் அல்ல என்பதை வந்தியத்தேவன் அறிந்திருந்தான்.

மிரண்ட குதிரையின் மேலிருந்த மதுராந்தகருக்கு என்ன ஆபத்து விளையுமோ என்று அவன் உள்ளம் திடுக்கிட்டது. குதிரை அவரைச் சுமந்துகொண்டே தறி கெட்டு ஓடினாலும் ஓடலாம். அல்லது அவரை வாய்க்கால் வெள்ளத்திலேயே தள்ளியிருந்தாலும் தள்ளியிருக்கலாம். அல்லது சற்றுத்தூரம் அவரைச் சுமந்துகொண்டு சென்று வேறு எங்கேயாவது தள்ளிவிட்டுப் போயிருக்கக் கூடும்.

தீவர்த்தியுடன் வந்த மனிதனால் குதிரையைத் தொடர்ந்து போய் அவரைக் காப்பாற்ற முடியுமா? அவனேதான் வாய்க்கால் வெள்ளத்தில் தடுமாறி விழுந்து விட்டானே?

அச்சமயம் தான் செய்ய வேண்டியது என்ன? வானதியைத் தேடிப் போவதா? மதுராந்தகரின் உதவிக்குச் செல்லுவதா? என்ற போராட்டம் ஒரு நிமிடம் அவன் உள்ளத்தில் நிகழ்ந்தது.

வானதி தேவி போன இடமே தெரியவில்லை. ஆனால் மதுராந்தகர் தன் கண் முன்னால் ஆபத்துக்கு உள்ளானார். அவருக்கு உதவி செய்வது எளிது. அவரைத் தேடிப் பிடித்து அபாயம் ஒன்றுமில்லை என்று கண்டால், பிறகு வானதியைத் தேடிப் போவது இருக்கவே இருக்கிறது! கடவுளே! சம்பந்தமில்லாத வேறு எந்தக் காரியத்திலும் தலையிடுவதில்லை என்று தான் சற்று முன்னால் தீர்மானித்துக்கொண்டு கிளம்பியது என்ன? இப்போது நடப்பது என்ன?

மண்டபச் சுவரின் மறைவிலிருந்து குதிரையை வெளியில் கொண்டு வந்தான் வந்தியத்தேவன். இருட்டிலும் தூறலிலும் உள்ளுணர்ச்சியினால் வழி கண்டு பிடித்து வாய்க்காலில் இளவரசரின் குதிரை இறங்கிய இடத்தை நோக்கிச் சென்றான். வாய்க்காலில் அவனும் இறங்கினான். சுற்றுமுற்றும் நன்றாகப் பார்த்தான். ஒன்றும் தென்படவில்லை. எங்கேயோ தூரத்தில் 'ஆஆஆ!' 'ஓஓஓ!' 'ஈஈஈ!' 'டடபடா டடபடா' 'கடகட கடகடா!' என்பவை போன்ற விவரம் தெரியாத சத்தங்கள் கேட்டன.

வாய்க்காலின் அக்கரையில் ஏறினான். கரைமேட்டுக்கு அப்பால் உற்றுப் பார்த்தான். நெடுகிலும் நெல் வயல்களாகக் காணப்பட்டன. வயல்களில் சேற்றிலும் பச்சைப் பயிரிலும் குதிரையை நடத்திச் செல்வது இயலாத காரியம். கரையோடு போய்த்தான் தேடிப் பார்க்க வேண்டும்.

வாய்க்காலின் கரையிலோ செடிகொடிகளும் முட் புதர்களும் அடர்ந்திருந்தன. அவற்றின் நடுவே சென்ற குறுகிய ஒற்றையடிப் பாதை வழியாகக் குதிரையைச் செலுத்திக்கொண்டு சென்றான். மேலே மழை; கீழே சறுக்கும் சேற்றுத் தரை; ஒரு பக்கத்தில் வாய்க்கால்; இன்னொரு பக்கத்தில் நெல் வயல்கள்; சுற்றிலும் முட்புதர்கள்.

குதிரை மெள்ள மெள்ளச் சென்றது.

நேரமோ ஒரு நிமிஷம் ஒரு யுகமாகச் சென்றது.

தூறல் மழையாக வலுத்துக்கொண்டிருந்தது!

இருட்டு மேலும் இருண்டு கொண்டிருந்தது.

வந்தியத்தேவனுடைய உள்ளம் சிந்தனையில் ஆழ்ந்தது.

மதுராந்தகத்தேவர் தனியாகக் குதிரை மீது ஏன் வந்தார்? எங்கே செல்வதற்காகப் புறப்பட்டு வந்தார்? அவரை எதிர் கொண்டு வந்த மனிதன் யார்?

வானதியைச் சிலர் பிடித்துக் கொண்டு சென்றதற்கும் இதற்கும் ஏதேனும் சம்பந்தம் உண்டா?

வானதியின் கதி இப்போது என்ன ஆகியிருக்கும்?

நாம் எதற்காக இந்தச் சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டு விழிக்க வேண்டும்?

நம்முடைய காரியத்தை நாம் பார்க்கலாமே? இராஜபாட்டையைத் தேடிப் பிடித்து அடைந்து, காஞ்சியை நோக்கிப் போகலாமே?

அதுதான் இந்த மழைக்கால இருட்டில் எப்படிச் சாத்தியமாகும்?

இந்தக் காரியங்கள் எல்லாம் நமக்குச் சம்பந்தம் இல்லையென்று எப்படித் தீர்மானிக்க முடியும்?

கடம்பூர் சம்புவரையர் அரண்மனையில் நமக்குச் சம்பந்தமில்லாத காரியத்தைக் கவனித்ததினால் பிற்பாடு எவ்வளவு உபயோகம் ஏற்பட்டது?

ஆனாலும் இன்றிரவு இந்த இருட்டில் இந்த வாய்க்காலின் கரையோடு போய்க்கொண்டிருப்பதினால் ஒரு பயனும் ஏற்படப் போவதில்லை. சொட்ட நனைவதுதான் பயன்! குதிரை எங்கேயாவது இடறி விழுந்து காலை ஒடித்துக்கொண்டால், பிரயாணமே தடைப்பட்டு விடும்.

திரும்பிச் சென்று அந்தப் பாழும் மண்டபத்தை அடைய வேண்டியதுதான். மழை விட்ட பிறகுதான் மறுபடி புறப்பட வேண்டும்.

ப்ளிச்சென்று ஒரு மின்னல். அதன் கண நேர வெளிச்சத்தில், சிறிது தூரத்தில், களத்து மேடு ஒன்றில், குதிரை நின்றது போலத் தெரிந்தது.

வந்ததுதான் வந்தோம்; இன்னும் கொஞ்ச தூரம் சென்று, அதையும் பார்த்துவிட்டுத்தான் போகலாமே! இளவரசர் மதுராந்தகருக்கு ஆபத்துச் சமயத்தில் கை கொடுத்து உதவினால், அதன் மூலம் பிற்பாடு எவ்வளவோ காரியங்களுக்குச் சாதகம் ஏற்படலாம்.

குதிரையை வாய்க்காலின் கரையிலிருந்து பக்கத்து வயல் வரப்பில் வந்தியத்தேவன் இறக்கினான். குதிரை நின்றதாகத் தோன்றிய களத்துமேட்டை நோக்கிச் செலுத்தினான்.

களத்து மேட்டின் சமீபத்தை அடைந்தபோது அது ஒரு பெரிய கரிய பூதத்தைப் போல் காட்சி அளித்தது.

இன்னொரு மின்னல்.

மேட்டின் மீது குதிரை நின்றது ஒரு கணம் தெரிந்தது. குதிரையின் பேரில் ஆள் இல்லை என்பதை வந்தியத்தேவன் கவனித்துக்கொண்டான்.

இடி இடித்தது!

இடிக்கும் மின்னலுக்கும் பயந்துதானோ என்னமோ அந்தக் குதிரை மறுபடியும் தெறிகெட்டுப் பாய்ந்து ஓடத் தொடங்கியது. அதைத் தொடர்ந்து போவதில் இனி ஒரு பயனுமில்லை.

பக்கத்தில் எங்கேயாவது குதிரை மேலிருந்து விழுந்த மதுராந்தகத் தேவர் ஒருவேளை இருக்கக்கூடும்.

ஆகையால், வந்தியத்தேவன் பல முறை குரல் கொடுத்துப் பார்த்தான். "ஜிம் ஜிம்" "ரிம் ரிம்" என்னும் மழை இரைச்சலை மீறி அவனுடைய இடி முழக்கக் குரல் "அங்கே யார்?" என்று எழுந்தது. நாலாபுறத்திலிருந்தும் "அங்கே யார்?" அங்கே யார்?" என்ற

எதிரொலிதான் கேட்டது.


ழை மேலும் வலுத்துக் கொண்டிருந்தது. வாடைக்காற்று விர் என்று அடித்தது. காற்றின் வேகத்தினால் மழைத்தாரைகள் பக்கவாட்டில் திரும்பித் தாக்கின. குதிரை உடம்பைச் சிலிர்த்துக்கொண்டது. வந்தியத்தேவனுடைய உடம்பும் மழையினால் தாக்கப்பட்டுக் குளிரினால் நடுங்கத் தொடங்கியது.

இனி அங்கே நிற்பதில் ஒரு பயனுமில்லை. வந்தியத்தேவன் குதிரையை வந்த வழியே திருப்பினான். தன்னுடைய அறிவீனத்தை எண்ணி வருத்தப்பட்டுக் கொண்டே வந்தான். இனிமேலாவது இத்தகைய அசட்டுக் காரியங்களில் இறங்காமலிருக்க வேண்டும். நம்முடைய காரியம் உண்டு, நாம் உண்டு என்று பார்த்துக்கொண்டு போக வேண்டும்...

குதிரை தன்னுடைய உள்ளுணர்ச்சியைக் கொண்டு வழி கண்டுபிடித்து இடிந்த மண்டபத்துக்கு அருகில் வந்து நின்று ஒரு கனைப்புக் கனைத்தது; அப்போதுதான் வந்தியத்தேவன் சிந்தனா உலகத்திலிருந்து இந்த உலகத்துக்கு வந்தான். குதிரை மீதிருந்து இறங்கினான். அவன் உடுத்தியிருந்த துணிகள் சொட்ட நனைந்து போயிருந்தன. அவற்றை உலர்த்தியாக வேண்டும். அன்றிரவு அந்த இடிந்த மண்டபத்தில் தானும் குதிரையும் தங்கியிருப்பதற்கு இடியாத பகுதி ஏதேனும் இருக்கிறதா என்று சுற்று முற்றும் பார்த்தான்.

வெட்ட வெளியில் கொட்டுகின்ற மழையில் காலிலே நெருப்புச் சுட்டால் எப்படியிருக்கும்? அவ்வாறு வந்தியத்தேவன் துள்ளிக் குதிக்க நேர்ந்தது. அதற்குக் காரணம் வேறொன்றுமில்லை. பேயில்லை. பிசாசில்லை; ஒரு சின்னஞ்சிறு குழந்தையின் குரல்தான்!

''அம்மா! அம்மா!''

பேயில்லை, பிசாசில்லை, என்று எப்படிச் சொல்ல முடியும்? அந்த வேளையில் அந்த மண்டபத்தில், குழந்தைக் குரல் எப்படிக் கேட்க முடியும்?

அது பேய் பிசாசின் குரல் இல்லை என்று எப்படிச் சொல்ல முடியும்?

சீச்சீ! பேயும் இல்லை; பிசாசும் இல்லை! பேயும் பிசாசும் பயப் பிராந்தி கொண்ட பேதைகளின் கற்பனை!

''அம்மா! அம்மா! ஊம்! ஊம்!'' இது மனிதக் குழந்தையின் குரல்தான்! தாயைப் பிரிந்த சேயின் பயங் கலந்த அழுகைக் குரல்தான்!

இடிந்த மண்டபத்தின் இருளடைந்த பகுதியிலிருந்து வருகிறது.

குழந்தை மட்டுந்தான் இருக்கிறதா? வேறு யாரும் இல்லையா?

''அம்மா! அம்மா! ஊம்! ஊம்!''

குரல் வந்த இடத்துக்குச் சமீபத்தில் சென்று வந்தியத்தேவன் ''யார் அங்கே?'' என்றான்.

''யார் அங்கே?'' என்று குழந்தையின் குரல் எதிரொலித்தது.

''நான்தான்! நீ யார்? இருட்டில் என்ன செய்கிறாய்! வெளியே வா!''

''வெளியில் மழை பெய்கிறதே?''

''மழை நின்றுவிட்டது; வா!''

''என் அம்மா எங்கே?''

''அம்மா உனக்குப் பால் வாங்கிக் கொண்டு வரப் போயிருக்கின்றாள்.''

''இல்லை; நீ பொய் சொல்கிறாய்!''

''நீ வெளியில் வருகிறாயா? நான் உள்ளே வரட்டுமா!''

''உள்ளே வந்தால் என் கையிலே கத்தியிருக்கிறது; குத்தி விடுவேன்!''

''அடே அப்பா! பெரிய வீரனாயிருக்கிறாயே? வெளியில் வந்துதான் குத்தேன்!''

''நீ யார்? புலி இல்லையே?''

''நான் புலி இல்லை; குதிரை!'' என்றான் வந்தியத்தேவன்.

''நீ பொய் சொல்லுகிறாய்; குதிரை பேசுமா?''

"புலியிருந்தால் பேசுமா?"

"வெளியில் வந்தால் புலி இருக்கும். ஒருவேளை மேலே பாய்ந்து விடும் என்று அம்மா சொன்னாள்."

"நான் புலி இல்லை; உன் பேரில் பாயவும் மாட்டேன்; ஆகையால் பயப்படாமல் வெளியே வா!"

"பயமா? எனக்கென்ன, பயம்?" என்று சொல்லிக்கொண்டே ஒரு சின்னஞ்சிறு குழந்தை இருண்ட மண்டபத்திலிருந்து வெளியே வந்தது.

தற்குள் மழை நன்றாக விட்டுப் போயிருந்தது. மேகங்கள் சிறிது விலகி நட்சத்திரங்களும் தெரிந்தன.

நட்சத்திர வெளிச்சத்தில் அக்குழந்தையை வந்தியத்தேவன் பார்த்தான்.

சுமார் நாலு வயதிருக்கும்.

தெரிந்த வெளிச்சத்தைக் கொண்டு வெகு இலட்சணமான குழந்தை என்று தெரிந்துகொண்டான்.

இடுப்பில் ஒரு சிறிய பட்டுத் துணி உடுத்தியிருந்தது. கழுத்தில் ஒரு ரத்தின மாலை அணிந்திருந்தது.

பெரிய குலத்துக் குழந்தையாகவே இருக்க வேண்டும். இதை இங்கே தனியாக விட்டுவிட்டுப் போன தாய் யார்? இங்கே எதற்காக வந்தாள்? ஏன் குழந்தையை விட்டுவிட்டுப் போனாள்?

இதற்குள் குழந்தையும் வந்தியத்தேவனை உற்றுப் பார்த்துவிட்டு நீ குதிரையில்லை; மனிதனைப் போல்தான் இருக்கிறாய்!" என்றது.

"அதோ குதிரையும் இருக்கிறது, பார்!" என்றான் வந்தியத்தேவன்.

குழந்தை குதிரையைப் பார்த்தது.

"ஓகோ! எனக்காகத்தான் கொண்டு வந்திருக்கிறாயா? பல்லக்கு வரும் என்றல்லவா சொன்னார்கள்?"

சிறுவனின் மறுமொழி வந்தியத்தேவனுடைய மனத்தில் பற்பல முரண்பட்ட எண்ணங்களை உண்டாக்கின. இந்தக் குழந்தை யார்? இவன் ஏன் இங்கே தனியாயிருக்கிறான்? இவ்வளவு சின்னஞ்சிறு பிள்ளை இப்படிச் சற்றும் பயப்படாமல் இருக்கிறானே, இது ஆச்சரியமல்லவா? இவனுக்காக யார்

பல்லக்கு அனுப்புவதாகச் சொல்லியிருந்தார்கள்? அது ஏன வரவில்லை? இவனை விட்டு விட்டுப் போன இவன் அம்மா யார்? அவள் எங்கே போயிருக்கிறாள்?

"குழந்தை! உன்னை ஏன் உன் அம்மா விட்டுவிட்டுப் போய் விட்டாள்?" என்று கேட்டான்.

"அம்மா என்னை விட்டு விட்டுப் போகவில்லை; நான்தான் அவளை விட்டுவிட்டு வந்துவிட்டேன்!" என்றான் அந்தச் சிறுவன்.

"ஏன் விட்டுவிட்டு வந்தாய்?"

"குதிரை ஒன்று ஓடி வந்தது. அதைப் பிடித்து அதன்மேல் ஏறிக்கொண்டு வரலாம் என்று நான் சொன்னேன். அம்மா கூடாது என்றாள். நான் அவளுக்குத் தெரியாமல் குதிரையைப் பிடிக்க ஓடி வந்தேன். அந்தக் குதிரை தானா இது?"

"இல்லை; இது வேறு

குதிரை! அப்புறம், எப்படி இங்கே வந்தாய்?''

''குதிரை அகப்படவில்லை. அம்மாவையும் காணவில்லை. மழை அதிகமாக வந்தது. அதற்காக இந்த மண்டபத்துக்குள் வந்தேன்.''

''இருட்டில் தனியாக இருக்க உனக்குப் பயமாயில்லையா?''

''பயமென்ன? தினம் தினம் இந்த மாதிரிதானே இருக்கிறேன்?''

''புலிக்குக்கூட பயமில்லையா?''

''அம்மாவுக்குத்தான் பயம். எனக்குப் பயமில்லை. நான் மீன். புலியை விழுங்கி விடுவேன்.''

''அடே, மீன் புலியை விழுங்குமா?''

''நான் சாதாரணச் சின்ன மீன் இல்லை! பெரிய மகர மீன்; திமிங்கிலம்! புலி, சிங்கம், யானை எல்லாவற்றையும் விழுங்கி விடுவேன்...!''

வந்தியத்தேவன் மனத்தில் என்ன வெல்லாமோ எண்ணங்கள் தோன்ற ஆரம்பித்தன. புலியை விழுங்கும் மீன் அதிசயமான மீன் அல்லவா! இப்படி யார் இந்தப் பிள்ளைக்குச் சொல்லிக் கொடுத்திருப்பார்கள்?

''அதோ அங்கே என்ன சத்தம்?'' என்று கேட்டான் சிறுவன்.

வந்தியத்தேவன் பார்த்தான். ஒரு கூட்டம் வந்துகொண்டிருந்தது. கூட்டத்தில் சிலர் தீவர்த்திப் பந்தங்களை வைத்துக்கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு நடுவில் ஒரு பல்லக்கும் தெரிந்தது. எல்லாரும் பரபரப்புடன் ஓடி வந்து கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒரு பெண் பிள்ளையும் இருந்ததாகத் தோன்றியது. ''அங்கே!'' ''இங்கே!'' ''அதோ!'' ''இதோ!'' என்ற கலவரமான குரல்கள் கேட்டன.

இடிந்த மண்டபத்தைக் கூட்டத்தில் ஒருவன் பார்த்துச் சுட்டிக் காட்டினான். அவ்வளவுதான்; எல்லாரும் அம் மண்டபத்தை நோக்கி ஓட்டம் பிடித்து ஓடி வந்தார்கள்.

''அதோ வருகிறார்கள். பல்லக்கும் வருகிறது. எனக்குப் பல்லக்கில் ஏறப் பிடிக்கவில்லை. என்னை உன் குதிரையின் மேல் ஏற்றிக்கொண்டு போகிறாயா?'' என்று சிறுவன் கேட்டான்.

அந்தக் குழந்தையின் முகமும் தோற்றமும் பேச்சுக்களும் வந்தியத்தேவனுடைய மனத்தைக் கவர்ந்தன. அவனைக் கட்டி அணைத்துத் தூக்கிக் கொள்ளலாம் என்று தோன்றியது. ஆனால், மனத்திற்குள் ஏதோ ஒரு தடங்கலும் கூடவே ஏற்பட்டது.

''எனக்கு வேறு அவசர வேலை இருக்கிறதே!'' என்றான் வந்தியத்தேவன்.

''நீ எங்கே போகப் போகிறாய்?''

''காஞ்சிக்கு!''

''காஞ்சிக்கா! அங்கேதான் என்னுடைய முக்கிய சத்துரு இருக்கிறான்!''

வந்தியத்தேவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவ்விடம் அந்தப் பிள்ளையின் அருகில்தான் நிற்பதுகூடப் பிசகு என்று எண்ணினான். ஆனால் குதிரையின் மேல் ஏறிப் போவதற்கும் அவகாசம் இல்லை. கூட்டம் வெகு அருகில் வந்து விட்டது. ஓடினால் சந்தேகத்துக்கு இடமாகும். இவ்வளவுடன், என்னதான் நடக்கப் போகிறது என்று தெரிந்து கொள்ளும் ஆவலும் வந்தியத்தேவனைப் பற்றியிருந்தது. ஆகையால் சற்று ஒதுங்கிச் சென்று இடிந்த சுவர் ஓரமாக இருட்டில் நின்றான்.

''இதோ நான் இருக்கிறேன்'' என்று முன்னால் போய் நின்றான் சிறுவன்.

வந்தவர்களிலெல்லாம் முதலில் வந்தவள் ஒரு பெண் பிள்ளை. அவளுக்கு ஓடி வந்ததினால் இரைத்துக்கொண்டிருந்தது. அதை அவள் பொருட்படுத்தாமல் தாவி வந்து குழந்தையை எடுத்து வாரி அணைத்துக்கொண்டு ''பாண்டியா! இப்படிச் செய்து விட்டாயே?'' என்றாள்.

அவளுக்கு அடுத்தபடியாக வந்தவன் ரவிதாஸன். அவன் சிறுவனின் பக்கத்தில் வந்து நின்று ''சக்கரவர்த்தி! இப்படி

எங்களைப் பயமுறுத்தி விட்டீர்களே?" என்றான்.

சிறுவன் சிரித்தான். "அப்படித்தான் பயமுறுத்துவேன். நான் குதிரை வேண்டும் என்று கேட்டேன். பல்லக்குக் கொண்டு வந்திருக்கிறீர்களே!" என்றான்.

நாம் முன்னம் பார்த்திருக்கும் சோமன் சாம்பவன், இடும்பன்காரி, தேவராளன் முதலியவர்கள் சிறுவனை வந்து சூழ்ந்துகொண்டார்கள்.

"சக்கரவர்த்தி! ஒரு குதிரை என்ன? ஆயிரம் குதிரை, பதினாயிரம் குதிரை கொண்டு வருகிறோம். இன்றைக்கு இப் பல்லக்கில் ஏறிக்கொள்ளுங்கள்!'' என்றான் சோமன் சாம்பவன்.

''மாட்டேன்; நான் அந்தக் குதிரை மேலேதான் ஏறி வருவேன்'' என்று சிறுவன் கூறிச் சுவர் மறைவில் நின்ற குதிரைச் சுட்டிக்காட்டினான்.

அப்போதுதான் குதிரையையும் அதன் அருகில் நின்ற வந்தியத்தேவனையும் அவர்கள் கவனித்தார்கள்.

ரவிதாஸன் முகத்தில், வியப்பும், திகிலும் குரோதமும் கொழுந்து விட்டு எரிந்தன.

இரண்டு அடி முன்னால் சென்று, "அடேபாவி! நீ எப்படி இங்கே வந்து சேர்ந்தாய்?" என்று கேட்டான்.

"அட பிசாசே! கோடிக்கரையிலிருந்து நீ எப்படி இங்கே வந்தாய்?'' என்று கேட்டான் வந்தியத்தேவன்.

ரவிதாஸன் 'ஹா ஹா ஹா' என்று சிரித்தான். "நீ என்னை உண்மையாகவே பிசாசு என்று நினைத்துக்கொண்டாயா?" என்று கேட்டான்.

"சிலர் செத்துப் போன பிறகு பிசாசு ஆவார்கள். நீ உயிரோடிருக்கும் பிசாசு!" என்றான் வந்தியத்தேவன்.

இதற்குள் சிறுவன், ''அவனோடு சண்டை போடாதே! அவனை எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது. இருட்டில் அவன் எனக்குத் துணையாயிருந்தான். புலி வந்தால் கொன்று விடுவதாகச் சொன்னான். அவனும் நம்மோடு வரட்டும்" என்றான்.

ரவிதாஸன் சிறுவன் அருகில் சென்று, "சக்கரவர்த்தி! அவசியம் அவனையும் அழைத்துப் போகலாம். தாங்கள் இன்றைக்கு ஒருநாள் பல்லக்கில் ஏறிக் கொள்ளுங்கள்!'' என்றான்.

சிறுவன் அவ்வாறே பல்லக்கை நோக்கிச் சென்றான்.

ரவிதாஸன் வந்தியத்தேவனை மறுபடியும் நெருங்கி "இப்போது என்ன செய்யப் போகிறாய்?" என்று கேட்டான்.

"நீயல்லவா சொல்ல வேண்டும்?"

''எங்களுடன் வந்து விடு! எங்களுடைய இரகசியம் உனக்கு முன்னமே அதிகம் தெரியும். இப்போது இன்னும் அதிகமாகத் தெரியும். உன்னை விட்டு விட்டு நாங்கள் போக முடியாது. வந்து விடு!"

"உங்களுடன் நான் வர மறுத்தால்...?"

"முடியாத காரியம். நீ பெரிய சூரன் என்பதை அறிவேன். ஆயினும் நாங்கள் இருபது பேர் இருக்கிறோம். எங்களைத் தப்பி நீ போக முடியாது."

"உயிரோடு தப்ப முடியாது என்று தானே சொல்கிறாய்?"

"நீ இளம்பிராயத்தவன். உலகத்தின் சுகங்கள் ஒன்றையும் அனுபவியாதவன். எதற்காக வீணுக்கு உயிரை விட வேண்டும்?"

"வீணுக்கு யார்தான் உயிரை விடுவார்கள்? உங்களுடன். வரச் சொல்கிறாயே? எங்கே கூப்பிடுகிறாய்? நீங்கள் எங்கே போகிறீர்கள்?"

''அப்படிக் கேள், சொல்கிறேன். பழுவூர் இளைய ராணியிடந்தான்!"

"ஓகோ! அப்படித்தான் நினைத்தேன். இளையராணி இன்று எங்கே இருக்கிறாள்?"

''இளையராணி இத்தனை நேரம் திருப்புறம்பயத்துக்கு வந்திருப்பாள். நீ வருவாயா, மாட்டாயா?"

"நானும் அந்தப் பக்கந்தான் போக வேண்டும். வழி காட்ட யாரும் இல்

லையே என்று பார்த்தேன். நல்ல வேளையாக நீ வந்து சேர்ந்தாய்! போகலாம், வா!" என்றான் வந்தியத் தேவன்.

இதற்குள் சிறுவன் பல்லக்கில் ஏறிக்கொண்டான். பல்லக்கு நகர்ந்தது. அதைச் சுற்றிலும் தீப்பந்தங்களைப் பிடித்துக்கொண்டும் பலவித கோஷங்களை எழுப்பிக்கொண்டும் ரவிதாஸனுடைய கோஷ்டியார் சென்றார்கள்.

வந்தியத்தேவனும் அவர்களைத் தொடர்ந்து சென்றான். அவன் உள்ளத்தில் பல்வேறு எண்ணங்கள் அலை பாய்ந்தன. வானதியின் கதி என்ன? தெரியவில்லை. மதுராந்தகர் என்ன ஆனார்? தெரியவில்லை. தன்னுடைய கதி இன்றிரவு என்ன ஆகப் போகிறது? அதுவும் தெரியவில்லை.

கடம்பூர் மாளிகையில் அன்று கண்டறிந்த சதிச் செயலை விடப் பன்மடங்கு பயங்கரமான சதிச்செயலைப் பற்றி இன்று நேர்முகமாக அறிந்து கொள்ளப் போகிறோம் என்பதில் சந்தேகமில்லை. அந்தவரையில் பிரயோஜனகரமானதுதான். ஆனால் அதற்குப் பிறகு என்ன நடக்கும்? தன்னை உயிரோடு தப்பிச் செல்ல இவர்கள் விடுவார்களா? இவர்களோடு சேர்ந்து விடும்படித் தன்னையும் கட்டாயப்படுத்துவார்கள். மாட்டேன் என்று சொன்னால், பலியிடத்தான் பார்ப்பார்கள். ஒருவேளை மறுபடியும் நந்தினியின் தயவினால்...

பழுவூர் இளையராணியின் பெயரை ரவிதாஸன் கூறியதும் அவர்களுடன் போகத் தான் இணங்கி விட்டதை வந்தியத்தேவன் நினைத்துப் பார்த்தான். அது அவனுக்கே வியப்பை அளித்தது. 'மாயை' என்றும், 'மோகம்' என்றும் பெரியோர்கள் சொல்வது இதைத்தான் போலும். அவன் எவ்வளவு பயங்கரமான சதிச்செயல்களில் ஈடுபட்டிருக்கிறாள் என்பது அவனுக்குத் தெரிந்து தானிருந்தது. ஆயினும் அவளைச் சந்திப்பதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது என்றால், அதைப் பயன்படுத்திக் கொள்ள அவன் மனத்தில் ஓர் ஆர்வம் எழுந்தது. அடக்க முடியாமல் தன்னை மீறி எழுந்தது. யோசித்துப் பார்ப்பதற்கு முன்னால் அவன் வாய் 'வருகிறேன்' என்று பதில் சொல்லிவிட்டது... ஆனால் வேறு வழிதான் என்ன? ரவிதாஸன் கூறியது போல இத்தனை பேருடன் தன்னந் தனியாகச் சண்டையிடுவது சாத்தியமில்லை. சிறிது அவகாசம் கிடைத்தால் தப்பிச் செல்வதற்கு ஏதேனும் ஓர் உபாயம் தென்பட்டாலும் தென்படலாம். அத்துடன், இந்தச் சதிகாரக் கூட்டத்தைப் பற்றியும் இன்னும் தெளிவாக அறிந்து கொள்ளலாம்.

"காஞ்சிக்கா போகிறாய்? அங்கேதான் என்னுடைய முக்கிய சத்துரு இருக்கிறான்!" என்று அந்தச் சின்னஞ்சிறு குழந்தை மழலை மொழியில் கூறியது அடிக்கடி வந்தியத்தேவனுக்கு நினைவு வந்து கொண்டிருந்தது. அந்தச் சிறுவன் யார்? அவனைச் "சக்கரவர்த்தி" என்று இவர்கள் அழைப்பதேன்? "முக்கிய சத்துரு" என்று அச் சிறுவன் யாரைக் குறிப்பிட்டான்? இந்தக் கேள்விகளுக்கெல்லாம் அவனுடைய மனத்தில் பதில்களும் தோன்றிக் கொண்டிருந்தன. நினைக்க, நினைக்க, பயங்கரம் அதிகமாகிக் கொண்டிருந்தது. கடவுளே! இவற்றுக்கெல்லாம் முடிவு எப்போது? "வெகு சீக்கிரத்தில்" என்று அவனுக்குள் ஒரு குரல் சொல்லியது.

அந்த அதிசய ஊர்வலம் போய்க் கொண்டேயிருந்தது. வயல்கள், வாய்க்கால்கள், வரப்புகள், காடுமேடுகளைத் தாண்டி ஒரு கணமும் நிற்காமல் போய்க் கொண்டிருந்தது. கடைசியாக, வெள்ளப் பெருக்கெடுத்து ஓடிய மண்ணி நதியையும் தாண்டி அப்பால் திருப்புறம்பயம் எல்லையை அடைந்தது. பள்ளிப் படையைச் சுற்றிலும் மண்டியிருந்த காட்டுக்குள்ளும் பிரவேசித்தது.

(தொடரும்)


• ஸ்டாலின்
• சர்ச்சில்

# திருப்பித் தாக்குங்கள்!

இன்றைய தினம் ராஜாஜி முதன் மந்திரியாக இருக்கலாம்; நாளைக்கு இன்னொருவர் முதன்மந்திரி பதவிக்கு வரலாம்.

இந்தத் தடவை காங்கிரஸ் மந்திரிகள் ஆட்சி நடத்தலாம்; அடுத்த தடவை இன்னொரு கட்சியார் ஆட்சிப் பொறுப்பை வகிக்கலாம்.

தற்போதைய மந்திரி சபையினர் புதிய ஆரம்பக் கல்வித் திட்டம் ஒன்றை அமுலுக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள்; அடுத்தாற்போல் வரும் மந்திரிசபை இந்தத் திட்டத்தை மாற்றி இன்னொரு திட்டத்தைக் கொண்டு வரக்கூடும்.

எது எப்படியானாலும், என்ன மாறுதல் அவ்வப்போது ஏற்பட்டாலும், மக்கள் பீதியின்றி வாழ்க்கை நடத்துவது முக்கியமானது.

காலிகளும், கயவர்களும், கொள்ளைக்காரர்களும், கொலை பாதகர்களும் எச்சமயம் திமிர் வெறிகொண்டு தாக்குவார்களோ என்ற பயமும், உயிருக்கும் உடைமைக்கும் எப்போது அபாயம் நேரிடுமோ என்ற பயமும் இன்றி எந்த நாட்டில் பிரஜைகள் வாழுகிறார்களோ, அந்த நாடு தான் நாடு; மற்றதெல்லாம் சுடுகாடு தான்.

சென்ற மகா யுத்தம் நடந்த காலத்தில் அக்கிராசனர் ரூஸ்வெல்ட், மார்ஷல் ஸ்டாலின், பிரதம மந்திரி சர்ச்சில் ஆகிய மூன்று மாபெரும் உலகத் தலைவர்கள் சேர்ந்து உலகப் பிரஜைகளுக்கு நாலு விதமான விடுதலை வேண்டும் என்று அறிக்கை வெளியிட்டார்கள். அந்த நாலு விடுதலைகளில் அவர்கள் முதன்மையாக வைத்த விடுதலை, **'பயத்தினின்று விடுதலை'**யாகும்.

உலகத்தில் எப்போது எக்காரணத்தினால் யுத்தம் மூண்டு மக்களுக்குச் சர்வநாசத்தை உண்டாக்குமோ என்ற பீதியினின்று உலக மக்கள் விடுதலை அடைய வேண்டும் என்று அவர்கள் சொன்னார்கள்.

அம் மாதிரியே ஒரு தேசத்திற்குள் எப்போது மூர்க்கர்களும் கயவர்களும் பலாத்காரக் கலகத் தீயை மூட்டி யோக்கியமான பிரஜைகளுக்குத் தீங்கு விளைவிப்பார்களோ என்ற பயத்தினின்று விடுதலை அடைவதும் ஜன சமூகத்துக்கு மிக முக்கியமானது.

இந்தப் பீதியிலிருந்து விடுதலை ஏற்படாத வரையில், அரசியல் விடுதலையினால் யாதொரு பயனும் இல்லை என்றே சொல்லலாம்.

சமீபத்தில் தமிழ்நாட்டின் தென் கோடியில், தூத்துக்குடி நகரில் நடந்த சில சம்பவங்கள், ஒரு நாட்டின் நல்வாழ்வுக்குப் 'பயத்தினின்று விடுதலை' எவ்வளவு முக்கியமானது என்பதை நன்கு எடுத்துக் காட்டுகின்றன.

• • •

தூத்துக்குடி நகரத்தின் ஒரு பகுதிக்குள் திடீரென்று கயவர்கள் பலர்

**கல்கி கலெக்ஷன்**

**அமரர் கல்கி**

கூட்டமாகப் புகுந்தார்கள். அடிதடி பலாத்காரத் திருவிளையாடல்களை நடத்தினார்கள். குற்றமற்ற குடிமக்களை ஹிம்சித்தார்கள். பெண்மணிகளையும் சின்னஞ் சிறு குழந்தைகளையும் துன்புறுத்தினார்கள். ஆடை ஆபரணங்களைப் பறித்தார்கள்; சொத்துக்களைச் சூறையாடினார்கள்; சூறையாட முடியாததைச் சேதப்படுத்தினார்கள். ஒரு பச்சிளங் குழந்தையைக் கொலை செய்ய முயன்று குற்றுயிராக விட்டுச் சென்றார்கள்.

இந்த விவரங்களைப் பத்திரிகைகளில் படித்தவர்களெல்லாரும், "நாம் இருபதாம் நூற்றாண்டில் சுதந்திரக் குடியரசின் கீழ் வாழ்கிறோமா, அரக்கர்கள் - ராட்சதர்களையொத்த காட்டுமிராண்டிகளுக்கு மத்தியில் வாழ்கிறோமா?" என்று ஆச்சரியமும் அருவருப்பும் அடைந்தார்கள். ஆச்சரிய அருவருப்பு உணர்ச்சிகள் நீங்கிய பிறகு எஞ்சி நின்றது "இந்த மாதிரி அகோர கிருத்யங்களுக்கு இனி இடங் கொடோம்" என்ற துணிச்சலா, "ஐயோ! என்ன செய்வோம்?" என்ற பீதியா என்பது கேள்வி.

இந்தக் கேள்விக்கு மக்கள் சொல்லும் பதிலைப் பொறுத்தே, இந்த நாட்டின் வருங்கால மகோந்நதமோ அல்லது அதல பாதாள வீழ்ச்சியோ ஏற்படும் என்பது திண்ணம்.

தூத்துக்குடிக்கருகில் நடந்த துப்பாக்கிப் பிரயோகம் சம்பந்தமாக நடைபெற்ற விசாரணையில், அவ்வூர் தி.மு.கழகத்தின் தலைவர் என்று சொல்லிக் கொண்டவர், மேற்படி இழி செயல்களுக்குத் தி.மு.கழகம் பொறுப்பில்லை என்று தெரிவித்துக் கொண்டார். தி.மு. கழகத்தின் திட்டம் அதுவல்லவென்றும், அம்மாதிரி வீடுகளில் புகுந்து வீட்டிலுள்ளவர்களைத் தாக்கும்படி சொல்லப்படவில்லையென்றும் கூறினார். ஊரிலுள்ள காலிகள் - கயவர்கள் அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு அத்தகைய இழி செயல்களைப் புரிந்திருக்க வேண்டும் என்றும் தெரிவித்தார்.

இதை நாம் நம்புகிறோம்.

சிறிதேனும் அறிவுடைய மனிதர்கள் யாரும் அத்தகைய ஓர் அசுரத் திட்டத்தை வகுத்திருக்க மாட்டார்கள்.

மக்களின் கவனத்தைக் கவர வேண்டுமென்ற நோக்கம் கொண்டு ஓர் இயக்கம் ஆரம்பித்த சமயத்தில், சில கயவர்கள் இம்மாதிரி காரியங்களைச் செய்து விட்டார்களே என்று தி.மு.கழகத்தார் வெட்கமும் துக்கமும் அடைந்திருப்பதுதான் இயல்பு.

சட்டசபையில் அவசரப் பிரேரணை கொண்டு வந்து பேசிய எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் மேற்படி செயல்களைக் குறித்துத் தங்கள் அருவருப்பை வெளியிடவில்லையென்றால், அதிலிருந்து, அத்தகையவர்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தின் நண்பர்கள் அல்ல என்றுதான் ஏற்படுகிறது.

பொறுப்பு யாருடையது என்பது பற்றி நாம் இப்போது ஆராய்ச்சி செய்ய விரும்பவில்லை.

வருங்காலத்தில் இத்தகைய சம்பவங்கள் ஏற்படாமல் தடுப்பதற்கு வழிகள் என்ன என்பது பற்றியேதான் முக்கியமாகக் கவனிக்க வேண்டும்.

• • •

ஜனநாயக ஆட்சி நடக்கும் நாடுகள் பலவற்றிலும் அரசியல் அதிகாரத்துக்காக அவ்வப்போது கட்சிகளும் கோஷ்டிகளும் போராட்டம் நடத்திக் கொண்டுதானிருக்கும்.

ஜனநாயக முறையில் பழுத்து முதிர்ந்த இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய சில தேசங்களிலேதான் அரசியல் கட்சிகளின் போராட்டங்கள் அமைதியாக நடைபெற்று வருகின்றன.

ஜனநாயகத்தைப் புதிதாக அடைந்திருக்கும் நாடுகளில் கட்சிப் போராட்டங்களும் கோஷ்டிப் பூசல்களும் பல சமயங்களில் கட்டு மீறிப் போவதுண்டு. அடிதடி பலாத்காரங்கள் நடப்பதும் உண்டு. அத்தகைய சந்தர்ப்பங்களில் எந்தக் கட்சி அரசாங்கம் நடத்தினாலும், போலீஸார் அமைதியை நிலை நாட்டவே வேண்டியிருக்கும்.

ஆனால் இத்தகைய பலாத்கார நிகழ்ச்சிகள் அரசியல் போராட்டங்களை நடத்துவோருக்கிடையில் நடக்குமே தவிர,

நாகரிகம் அடைந்த மக்கள் வாழும் எந்த நாட்டிலும் வீடுகளில் உள்ள குற்றமற்ற ஸ்திரீகளையும் குழந்தைகளையும் அப்போராட்டங்கள் பாதிப்பதில்லை.

அப்படிப் பாதிக்கும்படியாக ஒரு ஜன சமூகத்தில் சிலரோ, பலரோ நடந்து கொண்டார்களென்றால் அவர்களை மானிடப் பண்பு உள்ள மக்களாகக் கருத முடியாது.

ஆதலின், தமிழ் நாட்டுக்கும் தமிழர்களுக்கும் உலகத்தின் முன்னிலையில் இத்தகைய மானிடப் பண்பற்ற அந்தஸ்து ஏற்படாமல் தடுக்க விரும்புவோர் அனைவரும், எப்பேர்ப்பட்ட அரசியல் கொந்தளிப்பான நிலைமையிலும் தூத்துக்குடியில் நடந்தது போன்ற சம்பவங்கள் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.



யத்தில் போலீஸார் தங்கள் மனச்சாட்சிக்கு உகந்த முறையில் காரியம் செய்தால், அவர்களைத் தாங்கி நிற்பது மக்களின் கடமையாகும். போலீஸார் அமைதியை நிலை நாட்டும் பொருட்டுக் கையாளும் நடவடிக்கைகளைக் குறுகிய நோக்கம் உள்ள அரசியல்வாதிகள் கண்டித்துக் கிளர்ச்சி செய்ய இடங் கொடுத்தோமானால், பிறகு எந்தப் போலீஸ்காரர் மனத்திலும் உறுதியில்லாமற் போய்விடும். குழப்பத்தைத் தடுத்து அமைதியை நிலை நாட்டும் காரியத்தில் சந்தேகமும் மனக் குழப்பமும் ஏற்பட்டு விட்டால், போலீஸார் தங்கள் கடமையைச் சரிவரச் செய்ய முடியாது. அராஜகம் என்னும் படுகுழியை நோக்கி ஜனநாயகத்தின் பிரயாணம் தொடங்கிவிட்டது என்று வைத்துக் கொள்ளலாம்.



**கா**லாடிகளும் கயவர்களும், கொள்ளைக்காரர்களாகவும் கொலைகாரர்களாகவும் மாறித் தங்கள் திடீர்த் திருவிளையாடல்களை நடத்த முடியாமல் தடுப்பது முக்கியமாக அரசாங்கத்தின் கடமையாகும். எந்தக் கட்சி அரசாங்கம் நடத்தினாலும் அந்தக் கடமையை ஏற்று நடத்த வேண்டும். யார் மந்திரியாயிருந்தாலும் அந்தப் பொறுப்பை வகித்தே தீர வேண்டும்.

போலீஸ் இலாகாவின் மூலமாகவே எந்த அரசாங்கமும் மேற்படி பொறுப்பைத் திறமையாக நிறைவேற்ற முடியும்.

ஜனநாயக ஆட்சியின் கீழ் ஜனநாயகத்தை நிலை நிறுத்தும் கடமை போலீஸ் இலாகாவினுடையது. அந்தக் கடமையைப் போலீஸார் நன்கு நிறைவேற்றுவதற்கு யாரும் குறுக்கே நிற்கக் கூடாது.

தனிப்பட்ட போலீஸ்காரர் எவரும் லஞ்சம் வாங்குதல் முதலிய குற்றத்தைச் செய்தால், அதற்குரிய தண்டனையை அனுபவிக்க வேண்டும் என்று வற்புறுத்த வேண்டியது மக்களின் கடமை. திறமைக் குறைவினால் தங்கள் கடமையை நன்கு நிறைவேற்றாத போலீஸார்களைக் குறை கூறுவதற்கும் மக்களுக்கு உரிமை உண்டு.

ஆனால் தேசத்தில் குழப்பத்தைத் தடுத்து அமைதியை நிலை நாட்டும் விஷ

**ஒ**ரு தேசத்தின் பிரஜைகள் கயவர்களாலும் காலிகளாலும் தாக்கப்படாமல் பாதுகாப்பது முக்கியமாகப் போலீஸின் பொறுப்பேயாகும்.

ஆனால் போலீஸின் தலையிலே மட்டும் பொறுப்பைச் சுமத்திவிட்டு மற்றவர்கள் எல்லாரும் சும்மா இருப்பது மடைமையாக முடியும்.

ஆகையால் நாட்டின் நல் வாழ்வில் சிரத்தை கொண்ட அறிவுடைய மக்கள் அனைவரும் கயவர்கள் - காலிகளின் தாக்குதலை எதிர்த்துத் தாக்கித் தற்காப்புச் செய்து கொள்ள எப்போதும் சித்தமாயிருக்க வேண்டும். போலீஸார் வந்து சேரும் வரையில் எதிர்த்து நிற்பதற்காவது அனைவரும் தயாராயிருக்க வேண்டும்.

சென்ற இரண்டு வருஷ காலமாகத் தமிழ் நாட்டில் பல இடங்களிலும் ஏற்பட்டிருக்கும் தேசிய இளைஞர் ஸ்தாபனங்கள் ஊர்காப்பு ஸ்தாபனங்களாகவும் பணி ஆற்ற வேண்டும்.

ஏற்கெனவே அவ்வித தேசிய முன்னணி ஸ்தாபனம் இல்லாத இடங்களில் புதிதாக ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

முக்கியமாக, இளைஞர் ஒவ்வொருவரும் "வஸ்தாத்" ஆகப் பயில வேண்டும்.

மூளையை வறட்டிக் கொண்டு படித்

துப் பரீட்சையில் முதன்மையாகத் தேறுவதினால் மட்டும் என்ன பயன்? பெண்டாட்டி பிள்ளைகளைக் கயவரிடமிருந்து காப்பாற்றிக் கொள்ள முடியாதவர்கள் எத்தனை படித்து எத்தனை கெட்டிக்காரர்களாயிருந்துதான் என்ன பிரயோஜனம்?

''ஆறிலும் சாவு நூறிலும் சாவு'' "வீரன் ஒருமுறை சாவான்; கோழை பல முறை சாவான்'' என்று படித்ததெல்லாம் வெறும் ஏட்டுச் சுரைக்காயாக மட்டும் இருந்தால், இனி வாழ்க்கை நடத்த முடியாது.

• • •

கடைசியாக, தமிழ்நாட்டுச் சகோதரிகளுக்கு ஒரு விண்ணப்பம் செய்து கொள்கிறோம்.

''நாணமும் அச்சமும் நாய்கட்கு வேண்டுமாம்!'' என்றார் கவியரசர் பாரதியார்.

நாணம், அச்சம், மடம், பயிர்ப்பு என்னும் பழைய காலத்துப் பெண்மைக்குரிய குணங்களை இக் காலத்தில் அளவறிந்துதான் வைத்துக் கொள்ள வேண்டும்.

தூத்துக்குடியில் நடந்ததுபோன்ற சம்பவங்கள் நடக்கும் போலிருந்தால், நாணத்தையும் அச்சத்தையும் மேற்கொள்வது பெருங் குற்றமாகும்.

அத்தகைய சந்தர்ப்பங்களில் தமிழ்நாட்டுப் பெண்மணிகள் அனைவரும் கண்ணகித் தெய்வங்களாக மாறி விட வேண்டும்.

புருஷர்கள் எப்போதும் வீட்டிலேயே இருக்கமாட்டார்கள். அவரவர்களும் காரிய நிமித்தமாக வெளியே போவார்கள்.

அத்தகைய சமயங்களில் காலிகளும் கயவர்களும் தாக்க வந்தார்கள் என்றால், நம் சகோதரிகள் நாணத்தையும் அச்சத்தையும் மற்றப் பெண்மைக் குணங்களையும் ஒதுக்கி வைத்து விட்டுத் தாக்க வருகிறவர்களைத் திருப்பித் தாக்கத் தயாராக வேண்டும்.

கையிலே அகப்படும் அரிவாள்மனை, கடப்பாறை, உலக்கை, விளக்குமாறு முதலிய எல்லாவித ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டு கயவர்களைத் திருப்பித் தாக்கித் தற்காப்புச் செய்து கொள்ள வேண்டும்.

கயவர்களும் காலாடிகளும் பெரும்பாலும் பயங்கொள்ளிக் கோழைகளாகவே இருப்பார்கள். இல்லாவிடில் அவர்கள் ஸ்திரீகளையும் குழந்தைகளையும் தாக்க முன் வருவார்களா?

பாகிஸ்தான் பிரிவினைக் கலவரங்களின்போதே இதைப் பார்த்தோம். கொலை பாதகமான கொடூரச் செயல்களைச் செய்த ராட்சதர்கள்கூட எதிர்ச் சமூகத்தினர் பயந்து ஓடுகிற வரையில் தான் அவர்களைக் கொடுமைப் படுத்தினார்கள். தாக்கப்பட்ட சமூகத்தினர் திருப்பித் தாக்க ஆரம்பித்ததும் ஓட்டம் எடுத்தார்கள்.

இந்த உதாரணத்தை நினைத்துக் கொண்டு தமிழ்நாட்டுச் சகோதரிகள் தங்களைத் தாங்களே பாதுகாத்துக் கொள்வதற்குத் தயாராக வேண்டும்.

'வெளியில் சொன்னால் வெட்கம்' என்ற அசட்டுத்தனம் கூடவே கூடாது.

மிருகங்களும் செய்யத் துணியாத இழி செயல்களைச் செய்ய முன் வரும் நீசக் கீழ் மக்கள் அல்லவா வெட்கப்பட வேண்டும்.

கொடுமைக்கு ஆளான ஸ்திரீகள் உண்மையில் வெட்கப்படவே கூடாது. தங்களுக்கு நேர்ந்த அபாயங்களை எடுத்துச் சொல்லி உதவி கோருவதில் பின்வாங்கவே கூடாது.

அதைக் காட்டிலும், உதவி கோருவதற்கே இடமில்லாமல் முன்னாலேயே துணிச்சலைக் கடைபிடிப்பது நல்லது.

கண்ணகியையும், ஜான்ஸி ராணியையும் தமிழ்நாட்டுப் பெண்மணிகள் அடிக்கடி நினைத்துக் கொள்வது அவசியமாகும். வருங்காலத்தில் அவசியம் நேரும்போதெல்லாம் கண்ணகி போலவும் ஜான்ஸிராணி போலவும் நடந்து கொள்வதற்கும் தமிழ்நாட்டுச் சகோதரிகள் சித்தமாக வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம்.

**(கல்கி, ஆகஸ்ட் 2, 1953)**



# 5000 ரூபாய்க்குப் பறவை வேணுமா?

சென்னையில் துளிக்கூட அமைதியே இல்லாத பகுதி ஒன்று உண்டென்றால், அது பிராட்வே. இரும்பு சம்பந்தப்பட்ட பொருட்களின் விற்பனைத் தலைமையகமாகக் கருதப்படும் இப் பகுதியில் எந்நேரமும் பரபரப்பும் சலசலப்பும்தான். ஞாயிற்றுக்கிழமைகளில் மட்டும் கொஞ்சம் நெரிசல் குறைந்து காணப்படும் இங்கே, அன்றும் பறவைகளைப் பார்க்கவென்றே ஒரு தனிக் கூட்டம் கூட ஆரம்பித்திருக்கிறது!

"பிராட்வேயில் பறவையா? என்னய்யா கதை விடுகிறீர்கள்?" என்று அடிக்க வருமுன் இங்குள்ள மஸ்லான் சாவடி எனும் மார்க்கெட்டுக்கு ஒரு நடை சென்று பார்த்து வருவது உசிதம். ஞாயிறுகளில் இங்கு குவியும் பறவைகள் கண்கொள்ளாக் காட்சி!

'பிராட்வே தியேட்டருக்குப் பக்கத்தில் இருக்கும் மஸ்லான் சாவடி வெள்ளையர் காலத்திலிருந்தே கோழி மார்க்கெட்டாக இருந்து வந்திருக்கிறது. கோழி வாங்க வருபவர்கள் அப்படியே மற்ற பறவைகளையும் வாங்க மாட்டார்களா என்ற எண்ணத்துடன் சிலர் புறா, வாத்து, லவ்பேர்ட்ஸ் போன்றவற்றையும் இங்கே விற்பனைக்குக் கொண்டு வர, மஸ்லான் சாவடி களை கட்டியது!

தினமும் வந்தால் தங்கள் வியாபாரத்தில் பரபரப்பு இருக்காது என்பதால் பறவை வியாபாரிகள் தங்களுக்குள் ஓர் அமைப்பை ஏற்படுத்திக்கொண்டனர். ஒவ்வொரு



• பறவை வாங்கக் கூடும் கூட்டம்!

களும் நம் நாட்டு சண்டைக் கோழிகளும் இந்த மார்க்கெட்டில் தங்களுக்கென்று தனி டிமாண்ட் உண்டாக்கிக் கொண்டிருக்கின்றன.

ஞாயிற்றுக்கிழமைகளில் இத்தனை பறவைகளும் ஒரே நேரத்தில் எழுப்பும் ஒலிகளைக் கேட்டுக் கொண்டே மஸ்லான் சாவடியில் நடப்பதே வினோத அனுபவம் தான். கூண்டுகளில் அடைபட்டு பரிதாபமாகத் தோன்றுகின்றன!

ஞாயிற்றுக்கிழமையும் காலை ஆறு மணி முதல் பத்து மணி வரை மட்டும் இங்கே வந்து பறவைகளை விற்பது என்று தீர்மானித்தனர்.

"புறா மற்றும் பல்வேறு வகைப் பறவைகளை வளர்ப்பவர்கள் பெரும்பாலும் அதை ஒரு தொழிலாகச் செய்யவில்லை. பொழுது போக்காகத்தான் செய்கிறார்கள். எனவே தங்களின் மற்ற வேலைகளுக்கு பாதிப்பு இல்லாமல் இருக்க வேண்டும் என்பதற்காகத் தான் பறவை வியாபாரத்துக்கு ஞாயிற்றுக் கிழமையைத் தேர்ந்தெடுத்தார்கள்'' என்கிறார் நஜீப்.

விதவிதமான லவ் பேர்ட்ஸ்களை விற்பனை செய்து வருபவர் இவர்.

மஸ்லான் சாவடியில் விற்கப்படும் பறவைகளில் சூப்பர் ஸ்டார் என்று ஹோமர் புறாக்களைச் சொல்லலாம். நீண்ட தூரம் பறந்து செல்லக்கூடிய ஆற்றல் வாய்ந்த இந்தப் புறாக்கள் ஒவ்வொன்றும் 5000 ரூபாய் வரை விற்கப்படுகிறது! ஹோமர் புறாக்களைத் தவிர பீச் பேஸ், பிஸ்டர், ரோடினோ, பிளேக் மாஸ், பதிமூன்று வகை ஆப்ரிக்கக் கிளிகளும், லவ்பேர்ட்ஸ், பல்வேறு வகைப் புறாக்களும் இங்கு விற்கப்படுகின்றன.

இது போதாதென்று மணிலா வாத்துக்

''எனக்குத் தெரிந்து தமிழ்நாட்டில் உள்ள மிகப் பெரிய பறவை மார்க்கெட் இது தான். 30 ரூபாய் முதல் 5000 ரூபாய் வரை விலை மதிப்புடைய பறவைகள் இங்கு விற்கப்படுகின்றன. மஸ்லான் சாவடி பகுதியில் முன்பு காலி மைதானம் இருந்தது. அப்போதெல்லாம் பறவை வியாபாரிகள் இங்கு வர்த்தகம் செய்வதற்கு வாடகை செலுத்தி வந்தனர். இப்போது புதிதாகப் பல கட்டடங்கள் தோன்றிய காரணத்தால் மார்க்கெட்டின் இடம் குறுகி, சாலையில் வைத்துப் பறவைகளை விற்க வேண்டி உள்ளது. பறவை வியாபாரத்துக்கென்று அரசே தனி மார்க்கெட்டைக் கட்டிக் கொடுத்தால் எங்கள் வியாபாரம் பெருகுவதுடன் அரசுக்கும் வாடகை கிடைக்கும்!" என்கிறார் இங்கு புறா வியாபாரம் செய்து வரும் பொன்னுதுரை.

வெளிநாட்டுப் பறவைகள் பல விற்பனையாகி வரும் இந்த மார்க்கெட்டில் காடை, கவுதாரி, மணிப்புறா போன்ற இந்தியப் பறவைகளை விற்கத் தடை விதிக்கப்பட்டுள்ளது. கறிக்காக இந்த வகைப் பறவைகள் வேட்டையாடப் படுவதைத் தடுக்கவே இந்த ஏற்பாடாம்.

— பி.எம். கதிர்

படங்கள்: வெங்கடேஷ்

---



''ரெண்டு முழம் பூ பத்து ரூபாய்ன்னு அநியாய விலை சொல்றியே...?''

''நீ பொண்டாட்டிக்கு வாங்கிட்டு போற மாதிரி இருந்தா நியாயமா விலை சொல்லியிருப்பேன். ஆனா, நீ சின்ன வீட்டுக்குத் தானே வாங்கிட்டுப் போற?''

– எஸ். எஸ். பூங்கதிர்

# தேடல்

ம. ராஜேந்திரன்

அவனுக்கு என்ன ஆனதென்றே தெரியவில்லை. ராமேசுவரத்துக்குப் போனான். இருபத்தைந்து ஆண்டுகளாக சாமி கும்பிடாதவன் ராமேசுவரம் போவானேன்?

பக்தர்களின் பரபரப்பு அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. ஒரு ஓர்மாக நின்றான். தங்கப் பல்லக்கில் அம்பாள் வீதி உலா. ஏராளமான கூட்டம். ஒரு முடிவெடுத்தான். ஒரு நாள், ஒரே ஒரு நாள் பக்தனாக இருந்து பார்ப்பது! பக்தர்களோடு ஐக்கியமானான். ஏதோ வடநாட்டில் இருப்பது போன்ற உணர்வு. தமிழ் பேசும் பக்தர்கள் குறைவு. எல்லா நாளும் தங்கப் பல்லக்கு கிடையாதாம். தரிசனம் கிடைப்பது அபூர்வமாம். ஊர்வலம் முடிந்தது. அடுத்தது பள்ளியறைக் காட்சி என்றார்கள். கூடவே போனான்.

பள்ளியறைக்கு முன் இருவரிசையாக பக்தர்கள் அமர்ந்தனர். பக்தர்களில் பெண்கள் அதிகம். 'ஸ்ரீநிவாசா கைலாசா' என்று கோரசாய்ப் பாடினர். குடும்பம் குடும்பமாக வந்திருந்தனர்.

ராமனாதனுக்கு பூஜைகள் நடந்தன. சாப்பாடு முடித்து மேளதாளத்தோடு பள்ளியறைக்கு வந்தார். அதுவரை மூடியிருந்த பள்ளியறை திறந்தது. தீபாராதனை நடந்தது. பள்ளியறைக்கு எதிரே ஆளுயரக் கண்ணாடி. நேரடியாகத் தரிசனம் கிடைக்காத



வர்கள் கண்ணாடியில் பார்த்தனர். பஞ்சணை ஊஞ்சலாக இருந்தது. பூஜை முடிந்ததும் குருக்கள் கொஞ்சம் ஊஞ்சலை அசைத்து விட்டார். அது முன்னும், பின்னும் அசைந்தது. மயில் சாமரம் கொண்டு ராமனாதனுக்கும், அம்பாளுக்கும் விசிறினார். மேளச் சத்தம் குறைந்து நின்றது. கூட்டம் அமைதி காத்தது. பக்தர்கள் கண் நிறையக் கண்டு மூச்சு விட்டு நின்றனர். பள்ளியறை மூடப்பட்டது. ஓசையின்றி அனைவரும் நகர்ந்தனர்.



விடுதி வந்து சட்டையைக் கழட்டியபோது கண்ணாடியைப் பார்த்து சிரித்துக் கொண்டான். நெற்றியில் விபூதியும் குங்குமமும். இருக்கட்டும் என்று விட்டு விட்டான்.

உறங்கி எழுந்து, மறுபடி சட்டையை மாட்டிக் கொண்டு கோயில் பக்கம் போனான். அப்போதும் பக்தர்கள் பரவசத்தோடு உள்ளே போய்க் கொண்டிருந்தார்கள். அவனும் போனான். லிங்கத்திற்கு அபிஷேகம்.

ஸ்படிக லிங்கம் ஒரு பெரிய தாம்பாளத்தில் இருந்தது. அது ஆதிசங்கரர் கொடுத்ததாக ஐதீகமாம். அதற்கு நடக்கும் அபிஷேகத்தைக் காணத்தான் அந்த நேரத்திலும் பக்தர்கள். இதற்காக இரவே வந்து





**''சே... நம்ம தலைவி இந்த அளவுக்கு மக்களை மோசமா எடை போட்டிருக்க வேண்டாம்!''**

**''என்ன சார் சொல்றீங்க?''**

**''தமிழ் நாட்டில் சூரிய கிரகணம் தெரியவிடாமல் சதி செய்த வாஜ்பாய் கூட்டணிக்குப் பாடம் புகட்டுங்கன்னு பேசியிருக்காங்க.''**

**– புளியறை கணேசன்**

---

தங்கி விடுகிறார்களாம். அவனும் உட்கார்ந்தான். பால் அபிஷேகம் முடிந்து தாம்பாளத்தில் வடிந்த பாலை ஒரு கிண்ணத்தில் ஊற்றி எடுத்து வந்தனர். எல்லோரும் கை நீட்டினர். கிடைத்த பாலை வாயில் ஊற்றிக் கொண்டு கையைத் தலையில் துடைத்துக் கொண்டனர். நேராக வெளியில் வந்தான். பக்தர்கள் கடல் நோக்கிச் சென்றனர். அவனும் சென்றான். போட்டிருந்த உடையோடு கடலில் மூழ்கிக் குளித்தான். அங்கிருந்து நேராகக் கோயிலுக்குள் வந்தான்.

கையில் சிறுவாளியும் கயிறுமாகப் பல பேர் நின்றனர். கோயிலுக்குள் இருபத்திரண்டு தீர்த்தங்கள். ஒவ்வொன்றிலும் போய்த் தலையை நீட்ட வேண்டும். வாளியில் இறைத்து ஊற்றுகிறவர்களுக்குப் பணம் தர வேண்டும். ஒவ்வொருவர் பின்னாலும் கும்பல் கும்பலாக பக்தர்கள் சென்று கொண்டிருந்தனர். அவனும் போனான். ஏதேதோ பெயர்களில் கிணறுகள். அவனும் தலை காட்டினான். கடைசிக் கிணற்றில் மட்டும் கேணி தெரியவில்லை. ஐயர் ஒரு வாளியிலிருந்து சிறு சொம்பில் தண்ணீர் மொண்டு தெளித்தார். பிரச்னை தீராதவர்கள், மன நோயாளிகள், பக்தர்கள் என்று கும்பல் கும்பலாய் வந்து கொண்டே இருந்தனர். இவர்களில் அவன் யார்?

**நே**ற்றுவரை சாமி கும்பிடாதவன் திடீரென்று இப்படி முடிவெடுத்தால் அதற்குப் பெயர் என்ன? ஒரு வேளை மன நோயோ! ஒரு நாள் தானே, இருந்துவிட்டுப் போகலாம் என்று நினைத்துக் கொண்டே விடுதிக்கு வந்து உடை மாற்றிக் கொண்டு மறுபடி சாமி கும்பிடப் போனான்.

நெற்றி முழுக்க பக்தி கமழ்ந்தது. ஆஞ்சநேயர் கோயிலில் அவனே செந்தூரம் வைத்துக் கொண்டான். அவனுக்கு நன்றாகவே இருந்தது. தினசரி வைத்துக் கொண்டால் தான் என்ன! ஒரு நிமிடம் யோசனை வந்து போனது.

பக்தனாய் இருப்பதும் வசதிதான். பேசுவதை நிறுத்திக் கொண்டாலே மகான் ஆகிவிட முடியும். பேசிப் பேசி தன்னை ஸ்தாபித்துக் கொள்வதைவிட பேச்சை நிறுத்தி விட்டால் மௌனசாமி என்று மகுடம் கட்டி விட மாட்டார்களா, என்ன? நெற்றியில் எப்போதும் இட்டுக் கொள்ள வேண்டும். குங்குமம் நன்றாகத்தான் உள்ளது. மற்றவர்களிடமும் ஒரு மரியாதை கிடைக்கும். ஒரு வேளை கடவுள் இருந்துவிட்டால் செத்த பிறகு சிவலோகம், வைகுண்டப் பதவிகள் கிடைக்கும். நம்பிக்கை இல்லாமல் இருந்துவிட்டு செத்த பிறகு கடவுள் இருப்பது தெரிய வந்தால் என்ன செய்வது?

அவனுக்கே சிரிப்பு வந்தது. இருபத்தி நாலு மணி நேரத்திற்கு இன்னும் சில மணி நேரமே இருந்தது. ஒரு பக்தன் இப்படியெல்லாம் சிந்திக்கக் கூடாது. தடை போட்டுக் கொண்டான்.

**நே**ராக ராமர் பாதம் பார்க்கப் போனான். ஒரு குன்றுபோல் இருந்தது. ஏறிப் போய்ப் பார்த்தான். இங்கிருந்துதான் ராமர் இலங்கைமீது படையெடுக்கத் திட்டமிட்டார் என்றார்கள். வழியிலிருந்த ஆஞ்சநேயர் மினுமினுப்பாய் இருந்தார். 'கண்டேன் சீதையை' என்று ராமருக்கு ஆஞ்சநேயர் சொன்ன இடம் இது என்றார்கள்.

தனுஷ்கோடி போனான். வழியில் விபீடணனுக்குப் பட்டாபிஷேகம் நடந்த கோதண்டராம சுவாமி கோயில். அதற்கு அப்பால் செல்ல பஸ் வசதி இல்லை. காரிலும் செல்ல முடியாது. ஒரே மணல் வெளி. ஒரு வாடகை ஜீப்பில் சென்றான். ஜீப்பில் அவனுக்குத் துணையாக மூவர் வந்தனர். கையில் பெரிய கயிறு. எந்த இடத்திலும் புதை மணல் இருக்கலாமாம். ஜீப்பும் புதை குழியில் மாட்டி விடும் அபாயம் உண்டாம். அதற்குத் தான் கயிறாம். அவனுக்கு அச்சமாக இருந்தது. ஆனாலும் தனுஷ்கோடி போகாமல் ராமேசுவர க்ஷேத்ராடனம் பூர்த்தியாகாதாம்.

பழைய காலைக்கு மண் மூடி போட்டிருந்தது. முன்பு ராமேசுவரத்திலிருந்து கடல் மேல் தண்டவாளம் போட்டு ரயில் வந்து போய்க் கொண்டிருந்ததாம். பக்தர்கள் தனுஷ்கோடி வராமல் போக மாட்டார்களாம். அந்தத் தண்டவாளம் இருந்த இடமெல்லாம் மேடிட்டுக் கிடந்தது. சில பகுதிகள், கடலுக்குள். தனுஷ்கோடி புயலில் பயணிகளோடு ஒரு ரயில் கடலுக்குள் போனதாம். இன்னும் என்னவாயிற்று என்று தெரியவில்லையாம்.

தூரத்தில் மீனவர்கள் குடும்பம் குடும்பமாய் நடந்து கொண்டிருந்தார்கள். கடலுக்குள் ஈட்டி முனைபோல கரை போய்க்

கொண்டிருந்தது. இருபக்கமும் கடல். ஒரு பக்கம் ஆவேசமான அலை சாலையை அரித்துக் கொண்டிருந்தது. அடுத்தப் பக்கம் கடல் அலையின்றி அமைதி காத்தது. ஈட்டி முனைக்கு வந்து சேர்ந்தான். வங்காள விரிகுடாவும், இந்து மகா சமுத்திரமும் கலக்கிற இடம். கடல் நீர் கண்ணாடி போலிருந்தது. ஒரு கடல் ஆவேசமாய் வருகிறபோது அடுத்த கடல் அப்படியே அரவணைத்து அமைதிப் படுத்துகிறது. நிற்க விடாமல் காற்று தள்ளாடச் செய்தது. மணல் புகை போல் தரையிலிருந்து எழுந்தது. தண்ணீரைத் தொட்டுத் தலையில் தெளித்துக் கொண்டான். இறங்க முடியாத ஆழம். கரையை ஒட்டித் தண்ணீருக்குள் காலை வைத்தாலே தரை தட்டுப்படாத ஆழம். புதை மணல் பயம் வேறு. திவ்யமாய் நின்று



"தலைவரே இனிமேல் நம்ம ஆறு முகத்தை உங்களோட போர் வாள்னு மேடைல சொல்லாதீங்க!"

"ஏன்யா?"

"மாசா மாசம் சாணை புடிக்கற செலவுனு ஆயிரம் ரூபா கேட்கறார்!"

– அம்பை தேவா

தரிசித்து முடித்தான்.

வெளிநாட்டுக்காரர்கள்தான் தனுஷ்கோடியைப் பார்க்க வருகிறார்களாம். நம்மூர்க்காரர்கள் மீன் பிடிக்க வருவது தானாம். இவ்வளவு அழகான கடல் உலகில் எங்கிருந்தாலும் சொர்க்கமாக்கியிருப்பார்களாம்.

அங்கங்கே பல மாளிகைகள் கூரையில்லாமல் தூண்களாகவும், சுவர்களாகவும் நின்றன. இதுதான் ரயில்வே ஸ்டேஷன். இதுதான் போலீஸ் ஸ்டேஷன். கடலுக்குள் தெரிகிறதே ஒரு கல், அதுதான் விநாயகர் கோயில். தனுஷ்கோடி புயலுக்கு முன் இங்கு நிறையபேர் வாழ்ந்தார்கள். இலட்சக் கணக்கானவர்கள் புயலில் போய் விட்டார்களாம்.

ஜீப்பில் திரும்பிக் கொண்டிருந்தான். மணல் வெளியில் ஜீப் சிரமப்பட்டு நகர்ந்தது. பெருமூச்சு வாங்கியது. அவனைப் பக்திமான் என்று கூட வந்தவர்கள் உண்மையாகவே மதித்தனர். மீனவர்கள் பகுதியிலிருந்து மீன் வாசம் வருவதை உணர்ந்து ஊதுபத்தி கொளுத்தி ஜீப்பிற்குள் வைத்தனர். திரும்பும் போது காற்று இன்னும் அதிகமானது. காது, மூக்கெல்லாம் மணல் புகுந்தது. முகத்தை மூடிக் கொள்ள வேண்டியிருந்தது. இதையும் மீறி ஊதுபத்தி மணம் கமழ்ந்தது.

காற்று வீச்சில் ஜீப் தள்ளாடியது. கோதண்டராமர் சுவாமி கோயில் போய் விட்டால் பயமில்லை. ஆனால் அது இன்னும் தொலைவிலேயே இருந்தது.

"அய்யா சாமி! நீங்க நல்லா இருப்பீங்க சாமி! கொஞ்சம் ஒத்தாசை பண்ணுங்க சாமி."

வழியில் நின்று கொண்டு வயதான பெண்கள் இரண்டு பேர் கெஞ்சினர்.

"போம்மா அதெல்லாம் முடியாது!"

வண்டியிலிருந்தவர்கள் அதட்டிப் பேசிக் கொண்டே ஓட்டி வந்தனர்.

அவனுக்குக் கவலையாக இருந்தது. அவர்களுக்கு என்ன பிரச்னையோ!

"அவங்களுக்கு என்ன வேணுமாம்?"

"சார், மீனவப் பொம்பளைங்க சார். அவங்களை ஏத்திக்கிட்டுப் போகச் சொல்றாங்க."

"ஜீப்லதான் எடம் இருக்கே. ஏத்திக்கிட்டுப் போனா என்ன!"

"இல்ல சார் நீங்க இருக்கீங்க."

"நான்தான் முன்னாலே உட்கார்ந்திருக்கேனே? நீங்க பின்னாலே அவுங்களை ஏத்திக்கிங்களேன். பாவம்."

"சார் அவங்க மட்டும் வல்லசார்."

"பின்னே?"

"கூடையையும் ஏத்திக்கணும்சார்."

"என்ன கூடை?"

"சார்கிட்டே எப்படி சொல்றது?"

"சும்மா சொல்லுங்க."

"மீன் கூடை சார்."

"வண்டியை நிறுத்துங்க. ஏத்திக்கங்க."

"சார் நீங்க இருக்கிற வண்டியிலே மீனு..."

"பரவாயில்லே ஏத்திக்குங்க."

வண்டி நின்றதும் மீன் கூடையைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு அவர்கள் அந்த மணல் வெளியில் ஓட்டமும், நடையுமாய் ஓடி வந்து ஏறினர்.

"ஐயா நீங்க நல்லா இருப்பீங்க சாமி. இந்த மீனு இப்போ போகலைன்னா கெட்டுப் போய் விடும். ஒன்னுக்குப் பாதியாதான் கேப்பாங்க. ஒங்களுக்குப் புண்ணியம் சாமி."

"ஏம்மா நீங்களே எல்லாம் சேர்ந்து ஒரு ஜீப் வாங்கி வச்சிக்கலாமில்லே."

அவன் கேட்டான்.

"மச்சம் விக்கிற காசுல மிச்சம் புடிச்சா மீன் கிடைக்காது சாமி."

வண்டிக்குள் மீன் வாசம் நிறைந்தது. ஊதுவத்தி மணத்துடன் அது இணைந்து நாசியில் நுழைந்தபோது அதுதான் ஆன்மிகத்தின் நிஜமான மணமோ என்று அவனுக்குத் தோன்றியது. ●

- அதோடு கொஞ்சம் பிடிவாதம்..? *(திருமதி கல்கி)*
- விடுதலை வேள்வியில் வித்தகர் கல்கி
- எழுதினார், எழுத வைத்தார்!
- பரமகுருநாதர் பாரதியார்
- பரோபகாரி
- வரலாறும் கற்பனையும்
- கல்கியின் கவிதை உள்ளம்
- சினிமாவும் பேனாவும்
- அப்பாவும் நானும் *(ஆனந்தி)*
- தேவை கல்கித் தமிழ்
- மெய்ப்பொருள் கண்ட மேதை
- காதல்; மோதல்! *(வாஸனும் கல்கியும்)*
- குளிர்நிலவும் கதிர்மதியும் *(டி.கே.சி + ராஜாஜி)*
- உயிர்த்தோழர்கள் *(கல்கி + சதாசிவம்)*
- பொன்னியின் புதல்வர்
- நினைவுச் சின்னங்கள் நான்கு
- வெள்ளிக்கிழமை இரவுகள்



# அமரர் கல்கி நூற்றாண்டு மலர்

## இடம் பெறும் விஷயங்கள் இவை மட்டுமல்ல.

காணக்கிடைக்காத பல அரிய புகைப்படங்கள், பார்க்கத் தெவிட்டாத வண்ணமடல் பக்கங்கள், படிக்கச் சலிக்காத சிறுகதைகளும் கூடத்தான்.



**இலவச இணைப்பாக**
எம்.எஸ். பாடிய கல்கியின் கீதங்கள் கேஸட்.



**விலை ரூ. 60.**
தபாலில் அனுப்புவதற்கில்லை. உள்ளூர் ஏஜென்டை உடனே அணுகுங்கள்.



# சச்சின் எங்கே? சச்சின் எங்கே?

தாஜ் கோரமாண்டல் ஓட்டலின் சிறிய ஹால். தரைவிரிப்பில், சுமார் நாற்பது சிறுவர் சிறுமியர்கள் எதிர்பார்ப்பு நிறைந்த கண்களுடன் காத்துக்கொண்டு இருந்தார்கள். முதலில் வந்தவர் ராபின்சிங். கொஞ்ச நேரத்தில் ஸ்ரீநாத். அப்புறம் கங்குலி, வெங்கடேஷ் பிரசாத், ராகுல் திராவிட், அஜய்ஜடேஜா என்று ஒவ்வொருவராக டிராக் சூட், ஷார்ட்ஸ் என்று இஷ்டம் போல வந்தனர்.

வரிசையாய்ப் போடப்பட்டிருந்த நாற்காலிகளில் அவர்கள் அமர்ந்து கொள்ள, சிறுசுகள் தங்களுக்குள்ளேயும், கிரிக்கெட்டர்கள் தங்களுக்குள்ளேயும் முணு முணுத்துக் கொண்டே சில நிமிடங்கள் கழிந்தன.

"நீங்களெல்லாம் சாப்டாச்சா?" என்று பசங்களைப் பார்த்துத் தமிழிலேயே கேட்டு சகஜ நிலைமையை உருவாக்க முயன்றார் ஸ்ரீநாத்.

நாற்பது பேரும், காட்டாங்கொளத்தூரில் உள்ள சிவானந்தா ஆதரவற்றோர் இல்லத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள், இந்திய கிரிக்கெட் அணியினரைச் சந்திக்க ஸ்பெஷலாக ஏற்பாடு செய்திருந்தார் ஆசிரமச் செயலாளர் ராஜாராம்.

"உங்களுக்கெல்லாம் ஸ்கூலில் பரீட்சை எப்போ?" மீண்டும் பேசினவர் ஸ்ரீநாத்.

"டிசம்பரில் அரைப் பரீட்சை; மார்ச் மாதத்தில் முழுப் பரீட்சை" என்றார்கள் சில மாணவர்கள் கோரஸாக.

இந்த நிகழ்ச்சியை வீடியோ கேமராவில் சுட்டுக்கொண்டிருந்த ஒரு டி.வி. சானலின் கேமராமேன் பசங்களைப் பார்த்து, கிரிக்கெட்டர்களுடன் கை குலுக்குவது போலப் படம் பிடிக்க விரும்புவதாகச் சொல்ல, "அவர்களை சிரமப் படுத்த வேண்டாம், நாங்களே அவர்களிடம் சென்று கை குலுக்குகிறோம் என்று சொல்லியபடியே ஸ்ரீநாத் எழுந்திருக்க, அப்படியே செய்தனர் மற்ற கிரிக்கெட் வீரர்களும்.

மற்றவர்கள் எல்லாம் புன்னகைத்தபடி கை குலுக்கிக் கொண்டே வர, அஜய் ஜடேஜாவின் முகத்தில் மட்டும் ஏனோ இறுக்கம். சிறுவர்கள் மனத்திலோ, இன்னும் ஏன் சச்சின் வரவில்லை என்ற கேள்வி.

மாலை, மாணவிகள் மற்றும் ஆசிரமக் குழந்தைகள் சார்பில் ஒரு பையன், பொக்கே ஒன்றை



ஜடேஜாவிடம் தர, அவர் நன்றி சொல்லி அதைப் பெற்றுக் கொண்டார். வேறு எதுவும் பேசவில்லை.

இப்போது எல்லோர் மனதிலும் நிறைந்திருந்த கேள்வி. 'சச்சின் எங்கே?'

சட்டென்று ஒரே பரபரப்பு. லைட் நீல டீ ஷர்ட், டார்க் நீல ஷார்ட்ஸ், நீல நிற கேப் சகிதம் இளம் கிரிக்கெட் புயல் உள்ளே நுழைந்தது.

குழந்தைகள் சச்சினுடன் கை குலுக்கி மகிழ்ந்தார்கள். தன் கையோடு கொண்டு வந்திருந்த இரண்டு கேக் பெட்டிகளிலிருந்து ஒவ்வொரு கேக்காக எடுத்து, குழந்தைகளுக்குக் கொடுத்து சந்தோஷப்படுத்தினர் சச்சின். ஒரு சிறுமி, கையில் இருந்த கேக், எதிரே நின்ற சச்சின் முகம் இரண்டையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டே இனிய ஆச்சரியத்தில் மூழ்கிப் போனாள்.

"சச்சின் டெண்டுல்கரை இவ்வளவு நெருக்கத்தில் பார்ப்போம் என்று நான் கனவிலும் நினைத்துப் பார்த்தது இல்லை. ஆனால், இன்று அவர் கையால் எனக்குக் கேக் வழங்கியிருக்கிறார். இது எனக்கு அளவில்லாத சந்தோஷத்தையளிக்கிறது. இந்த கணம், என் ஆயுசுக்கும் மறக்காது" என்று நெஞ்சம் நெகிழ்ந்து சொன்னாள் அந்தச் சிறுமி.

ஸ்ரீநாத்திடம், இந்த மாதிரியான ஒரு நிகழ்ச்சியில் கலந்துகொண்டது பற்றிக் கேட்டதற்கு, "வாழ்க்கையில் சந்தோஷம் ரொம்ப முக்கியம். பெற்றோர் இல்லாத இந்த ஆதரவற்றக் குழந்தைகளுக்கு நாங்கள் சில நிமிடங்கள் செலவழிப்பதன் மூலம் மகிழ்ச்சி கிடைக்குமானால், அதற்கு எனக்குப் பரிபூரண சம்மதம். அவர்கள் மகிழ்ச்சியில் நானும் பங்கேற்று சந்தோஷப்படுகிறேன்" என்றார்.

ராபின்சிங் "இது போன்ற நிகழ்ச்சிகளில் நிறைய கலந்துகொண்டிருக்கிறேன். இன்னும் கலந்து கொள்ளுவேன்"

"இந்தக் குழந்தைகளின் முகங்களைப் பாருங்கள். மலர்ந்த பூக்கள் போன்ற சந்தோஷம். எனக்கு இது ஒரு மறக்க முடியாத அனுபவம்" என்றார் கங்குலி.







சச்சினைப் பேசச் சொன்னார்கள். மைக் முன்னால் வந்து நின்ற சச்சின் "உங்களுடைய வாழ்த்துக்கள் எல்லாம் எங்களுக்கு உற்சாகம் தரும் டானிக் போல்! உங்களைப் போன்ற கோடிக் கணக்கான இந்தியர்களுடைய வாழ்த்துக்களும், பிரார்த்தனையும் எங்கள் வெற்றிக்குப் பேருதவி புரியும். வரும் டூரில் வெற்றியுடன் திரும்புவோம்" என்று சுருக்கமாகப் பேசி முடித்தார்.

அடுத்து, இந்திய கிரிக்கெட் வீரர்களுக்காக, அவர்களது வெற்றிக்காக மாணவ மாணவிகள் அனைவரும் கூட்டுப் பிரார்த்தனை செய்தார்கள்.

"எங்கள் குழந்தைகளுக்கு இன்று ஒரு இனிய நாள். வாழ்வில் மறக்க முடியாத நாள்" என்றார் ராஜாராம்.

— பாரதி மௌலி
படங்கள்: யோகா

# நடக்குமென்பார் நடக்கும்!



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

கிரகங்களின் அனுகூலம் உங்கள் திறமையை பளிச்சிடச் செய்யும். கற்பனை பீறிட்டுக் கொண்டு எழும் வாரமாதலால் எழுத்தாளர்களுக்கு ஓகோ வாரம் தான். எதிர்ப்புகள் மறைந்து, கற்றிருப்பவர்கள் போட்டி போட்டுக் கொண்டு உதவிக்கு வருவார்கள். கலைஞர்களுக்கும் கெமிக்கல் தொடர்பான வேலை செய்பவர்களுக்கும் வெற்றி நடை உறுதி. சிலருக்கு ஓரிரு அதிர்ஷ்ட வாய்ப்புகளும் புதிய பதவிப் பொறுப்புகளும் கிடைக்கலாம். பண விஷயம் சாதாரணமாகத் தான் இருக்கும் என்பதால் சிக்கனம் தேவை.



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

கிரகங்கள் சாதாரணப் பார்வை தான் பார்க்கின்றன என்பதால் எதிர்ப்புகளும் குறுக்கீடுகளும் வரத்தான் செய்யும். ஆனாலும் சமாளிப்புத் திலகமாச்சே நீங்க. சமாளிச்சிடுவீங்க. சிலருக்குப் பயணத்தால் நன்மை எனில், சிலருக்குப் புதியவர்களால் அனுகூலம் கிடைக்கும். விளையாட்டு வீரர்களுக்கு வெற்றி உறுதி. பொதுவாகவே கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கையாக இருக்கணும். பெற்றோர் உடல் நலனில் அக்கறை அவசியம். எதிலும் பொறுப்புடன் செயல்படுவது அவசியம்.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

உங்கள் எண்ணங்கள், திட்டங்கள் எல்லாம் சுலபமாக நிறைவேறும் வாரம் இது. நண்பர்கள், உறவினர்கள் உதவிக்கரம் நீட்டுவாங்க. புதுப் புதுப் பொருள்கள் வாங்குவீங்க. பண விஷயம் திருப்தியாக இருக்கும். கொடுக்கல் – வாங்கல், ஸ்பெகுலேஷனிலும் ஆதாயம் இருக்கும். வியாபாரிகளுக்கு லாப வாரம். கூட்டுத் தொழில் புரிவோருக்கு முன்னேற்றம் தெரியும். திருமணம், கிரகப் பிரவேசம் போன்ற சுபகாரியங்களுக்கான வாய்ப்புகள் கூடி வரும். நிர்வாகப் பணிகளில் இருப்பவர்களுக்கு முன்னேற்றம் உறுதி.



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

விசேஷமான பலன்களை இந்த வாரம் எதிர்பார்க்காதீங்க. வழக்கமான பணிகள் மட்டும்தான் வழக்கம் போல் நடந்து வரும். பேச்சில் நிதானமும் இனிமையும் அவசியம். புதுப் பொருள்கள் வாங்குவீங்க. விருந்துகளில் கலந்துக்கற சான்ஸ் கிடைக்கும். இயந்திரப் பணியாளர்கள் – குறிப்பாக எஃகு தொடர்பான பணிகளில் இருப்பவர்களுக்கு லாபம் உறுதி. குடும்பத்தில் சிறு சிறு பிரச்னைகள் வரத்தான் செய்யும். பயணத்தில் எச்சரிக்கை அவசியம். பெரியவர் ஆலோசனைகளைக் கேட்டு நடந்தால் பல சங்கடங்களைத் தவிர்க்கலாம்.



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

தோற்றப் பொலிவிலேயே ஒரு மிடுக்கு தெரிகிற வாரம். துணிச்சலான காரியங்களில் ஈடுபட்டு சுலபமா வெற்றியடைவீங்க. உதவிகள் தாராளமா கிடைக்கும். பண விஷயத்தில் முன்னேற்றம் தெரியும். சிலருக்கு திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளும் வரும். சிலருக்குப் புதிய பட்டம், பதவிகள் கிடைக்கற சான்ஸும் இருக்கு. சுப காரியங்களுக்கான பிள்ளையார் சுழி போடுவீங்க. சிலர் வீடுகளில் குழந்தைப் பேறு நிகழும். கூட்டுத் தொழில் புரிவோருக்கு நல்ல லாபம்தான். பொதுவா அருமையான வாரம்தான் என்றாலும் செலவு விஷயங்களில் அடக்கி வாசிங்க.



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

கிரகங்களின் பார்வை சரியில்லாததால, எந்தக் காரியமானாலும் ஒரு முறைக்கு இரு முறையல்ல; பலமுறை யோசித்துச் செயல்பட வேண்டியது அவசியம். பண விஷயம் சாதாரணமாத்தான் இருக்கும். கேஷியர் வேலைகளில் இருக்கறவங்க எச்சரிக்கையோடு செயல்படணும். உத்தியோகஸ்தர்கள், தொழிலாளர்களுக்கு விரும்பத்தகாத இட மாற்றங்கள் போன்ற சங்கடங்கள் வரலாம். மேலதிகாரிகளின் அதிருப்திக்கும் ஆளாகலாம். ஒரு நாளைப் போல அடுத்த நாள் உங்க உடல் நலம் இருக்காது. கவனமா இருங்க. ஆனாலும் மாமூலான காரியங்கள் வழக்கமா நடப்பதில் சிக்கல் இருக்காது.

**ஆகஸ்ட் 25 முதல் 31 வரை**

# மகர ராசிக்காரரான நடிகர் சிவகுமாருக்கு வெளிநாட்டுத் தொடர்பால ஏதோ ஆதாயம் வரப் போகுது!





**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

வியாபாரத் துறையினர் செழித்துக் கொழிக்கற வாரம் இது. அரசு விவகாரங்களில் அனுகூலம் தெரியும். நிர்வாகத் துறையினர் முன்னணிக்கு வரும் வாய்ப்பு நிறைய உண்டு. வெளிநாட்டுத் தொடர்பால் அனுகூலம் மட்டுமல்ல, சிலருக்கு வெளிநாடு போகிற சான்ஸும் உண்டு. கல்யாணக் கனவு கண்டு கொண்டிருப்பவர்களுக்கு கனவு நனவாகும். வழக்கு விவகாரங்களில் நல்ல திருப்பம் உண்டாகும். பண விஷயம் தாராளமாவே இருக்கும். எதிர்பார்த்த பண வரவுகள் வந்து சேரும். சிலருக்கு அதிர்ஷ்ட வாய்ப்புகளும் உண்டு.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

இப்படியெல்லாம் நடந்தா நல்லாயிருக்குமேன்னு எதையாவது நினைச்சுக்கிட்டிருக்கீங்களா, கவலையை விடுங்க. அது அப்படியே நடக்கும். திறமையான கலைஞர்களுக்கு முன்னேற்றம் தெரியும். தாய் வழிச் சொத்துகள் ஏதும் வந்து சேரலாம். கொடுக்கல் – வாங்கல், ஸ்பெகுலேஷனெல்லாம் இந்த வாரம் வேண்டாம். உத்தியோகஸ்தர்களுக்கு மேலதிகாரிகளின் பாராட்டு கிடைக்கும். நிர்வாகத் துறையினருக்கும் வளர்ச்சி தெரியும். பொதுவாக, எந்தத் தொழில் செய்பவர்களானாலும் அந்தந்தத் தொழில்களில் நல்ல முன்னேற்றம் தெரியும் வாரம் இது.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

எதிர்ப்புகளெல்லாம் தலை தெறிக்க ஓடுகிற வாரம் இது. பண விஷயம் ஓகோன்னு இருக்கும். உத்தியோகஸ்தர்களுக்கு புரமோஷன் சான்ஸ் இருக்கு. வெளிநாட்டுத் தொடர்பால் உற்சாகம் பிறக்கும். கொடுக்கல்–வாங்கலில் ஆதாயம் கிடைக்கும். கலைத் துறையினருக்கு வெகு சுபிட்சமான வாரம். வீட்டில் கல்யாணப் பேச்சுகள் அடிபடும். அரசு விவகாரங்களில் நல்ல திருப்பம் ஏற்படும். பொதுவாகப் பார்த்தால் சிறு சிறு தொல்லைகள் வரத்தான் செய்யும். பேச்சில் நிதானம் காட்ட வேண்டியது அவசியம்.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

கிரக சஞ்சாரம் சாதாரணம்தான் என்பதால் மனதில் சலனம் வரும். அலைச்சல் அதிகரிக்கும். உடல் ஆரோக்கியம் பாதிக்கப்படுவதற்கான சான்ஸும் இருக்கு. கணவனுக்கு மனைவியாலும் மனைவிக்குக் கணவனாலுமே கூட பிரச்னைகள் ஏதும் வரலாம். மனதில் ஒரு வித அலுப்பு தோன்றத்தான் செய்யுமனாலும் அதன் போக்கில் போயிடாதீங்க. அலுப்பை ஒதுக்கித் தள்ளிட்டு கடுமையா உழைச்சுப் பாருங்க. பெரியவர்கள் ஆலோசனைகளை அலட்சியப்படுத்திடாதீங்க. வெளி நாட்டுத் தொடர்பால் ஓரளவுக்கு ஆதாயம் பெறலாம்.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உங்கள் காரியங்கள் அளவோடு நிறைவேறும். உடல் ஆரோக்கியம், அந்தஸ்து, கௌரவம் விஷயங்களில் பிரச்னை இருக்காது. குரு பார்வையால் அரசு விவகாரங்களில் அனுகூலமான திருப்பம் ஏற்படலாம். வியாபாரிகளுக்கு லாபம் உறுதி. உத்தியோகஸ்தர்களுக்கு மேல் அதிகாரிகளால் பாராட்டுக் கிடைக்கும். சிலருக்குப் பயணத்தால் அனுகூலம் ஏற்படும். வெளிநாட்டுத் தொடர்புடன் கூடிய வியாபாரம் அதிக ஆதாயம் தரும். பணத்தைக் கையாளும் பணிகளில் இருப்பவர்கள் மிகுந்த எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். புதியவர்களிடம் உஷாராய்ப் பழகுங்கள்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

உங்கள் திறமை பளிச்சிடும். உத்தியோகஸ்தர்களுக்கு இன்கிரிமெண்ட் இருக்கும். மருத்துவம், இரசாயனத் துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு முன்னேற்றம் உறுதி. கொடுக்கல் – வாங்கல், ஸ்பெகுலேஷனில் லாபம் உறுதி. அரசாங்க விஷயங்கள் எளிதாக நிறைவேறும். கணவன் – மனைவி உறவு சாதாரணமாகத்தான் இருக்கும். சமயத்தில் சலசலப்புகளும் வரலாம். விட்டுக் கொடுத்துச் சமாளிங்க. கூடப் பிறந்தவர்களாலும் பிரச்னைகள் வரலாம். பயணத்தில் எச்சரிக்கை அவசியம். பொறுப்புடன் செயல்பட்டால் சில சங்கடங்களைத் தவிர்க்கலாம்.

## அக்னிசர்மா பக்கம்

# கும்பகோணத்துத்

இப்படி அடிக்கடி லீவ் போட்டேனா உன் சூப்பர் மார்க்கெட்டையே குளோஸ் பண்ணிடுவேன்னு நேத்து எடிட்டர் ரொம்ப கோபப் பட்டுட்டாங்க... அவங்கள திரும்பவும் மூடுக்குக் கொண்டு வரதுக்கு ஹ்யூமர் கிளப்புல நான் கேட்ட சில ஜோக்ஸை எடுத்து விட்டேன்... வழிக்கு வந்துட்டாங்க! லீவ் போட்டதுக்கு ரீஸன் கேட்கக் கூட மறந்துட்டாங்கன்னா பாருங்களேன்.

டு வீக்ஸ் முன்னாடி ஹ்யூமர் கிளப்புல உறுப்பினர்கள்லாம் வந்து சொன்ன ஜோக்ஸ் பத்திரிகை ஜோக்ஸ் மாதிரிதான்... அவ்வளவா மனசுல நிக்கலை. ஆனா, ஸ்பெஷல் கெஸ்ட்டா அன்னிக்கு கர்னாடிக் மியூசிக் ஃபீல்ட்லேருந்து பல பேர் வந்து பேசுனாங்க. ஆஸ்திக சமாஜம் (திருவான்மியூர்) செகரடரி நரசிம்மன்னு பேரு – அவர் சொன்ன சில இன்சிடென்ட்ஸ் படு தமாஷ்.

அண்ணாசாமி பாகவதர்னு ஒரு ஹரிகதை வித்வான். அவர்கிட்டே ஒரு பையனை அழைச்சுட்டுப் போய், இவன் நல்லா பாடுவான்... கேளுங்க, கேளுங்கன்னு தொந்தரவு பண்ணியிருக்காங்க. அவரும் தொல்லை தாங்காம 'சரி பாடு'ன்னு சொல்லியிருக்கார்.

பையன் பாடிட்டுப் போன பிறகு அவர்கிட்டே ஒபினியன் கேட்டிருக்காங்க...

"குளோரஃபார்ம் கொடுக்காம ஆபரேஷன் பண்ணின மாதிரி இருக்கு"ன்னாராம் அண்ணாசாமி பாகவதர்!

இன்னொரு சமயம், சென்னையில அரியக்குடி கச்சேரிக்கு வயலின் வாசிக்க கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை வந்தாராம். அவர் பெட்டியை 'பேக்' பண்ணுகிறபோது ஒரு தேள் குட்டி அதுக்குள்ளே போய் உட்கார்ந்துகிட்டதாம். எப்படியோ 'முன்னேறி' பிள்ளைவாளின் ஜிப்பா பாக்கெட்டுக்குள் போய் செட்டில் ஆயிடுச்சு. மெட்ராஸ் வந்து ரா. மா. பிள்ளை கச்சேரிக்கு ரெடியாகறார். ஜிப்பாவைப் பிரித்துப் போட்டுக் கொண்டு மேடைக்குப் போய் உட்கார்ந்து வாசிக்கிறார்.

அப்போதான் தேள் குட்டிக்குச் சந்தேகம் வந்ததாம். 'ஏதடா! கும்பகோணத்துல இருக்கமா வேறெங்கயாவது வந்துட்டமா? ஒரே ஒரு வயலின் சப்தத்துக்கு பதிலா புது வாய்ஸெல்லாம் கேட்குதே?'ன்னு யோசிச்சுக்கிட்டே, ஜிப்பா பாக்கெட்லேருந்து வெளியே வந்து பிள்ளையோட தோள் பக்கமா ஏறி எட்டிப் பார்த்ததாம்.



முன் வரிசையிலே பிள்ளையோட அட்மைரர் ஒருத்தர் – தேள் குட்டியைப் பார்த்துட்டார். எங்கே அவரைக் கொட்டிடுமோன்னு எழுந்து போய் பிடரியில் ஓங்கி ஒரு போடு! தேள் காலி!

அப்பவும் பாருங்க ராஜமாணிக்கம் பிள்ளை வாசிக்கறதை நிறுத்தலையாம்! கச்சேரியெல்லாம் முடிஞ்ச பிறகு சாவகாசமா கேட்டிருக்கார்...

தேள் குட்டி பத்திச் சொன்னதும் ராஜமாணிக்கம் பிள்ளை சொன்னாராம் – "அப்படியா சமாசாரம்! இரண்டாங் காலம் ஸ்வரம் வாசிட்டிருந்தப்போ ஒரு போடு போடவே, ஸ்பீடு பத்தலைன்னு நினைச்சு நான் ரொம்ப வேகமா வாசிச்சேன்... என் ஆயுசுல இவ்வளவு வேகமா நான் வாசிச்சதில்லே..."

இதுல பீர்பால் – அக்பர் கதை மாதிரி இலேசா கற்பனை கலந்திருக்கலாம் – ஆனா சம்பவம் நிஜம்தான். கொஞ்சம் திங்க் பண்ணிப் பார்த்தா, ராஜமாணிக்கம் பிள்ளையோட சென்ஸ் ஆஃப் ஹ்யூமர் எப்படிப்பட்டதுன்னு புரியுதில்லே!

அதைவிட இம்பார்டன்ட் இந்தச் சம்பவத்தைச் சொன்ன நரசிம்மன் (இதை மாதிரி இன்னும் நிறைய சரக்கு வச்சுருக்கார்) எப்படி அலுங்காம காஷுவலா பேசி னார்ன்றதுதான். தான் சிரிக்காம மத்தவங் களை சிரிக்க வைக்கறதுன்றதுதான் பெரிய கலை. இந்த 'நேடிவ் ஹ்யூமர்' தஞ்சாவூர் பக்கத்துல ஜாஸ்தி. மத்த ஊர்க்காரங்க சண்டைக்கு வந்தா இட் இஸ் அப் டு டாஞ் சூரியன்ஸ் டு டிஃபென்ட் தெம்ஸெல்வ்ஸ். நான் வெறும் சென்னை கேர்ல்!

சென்னைனதும் இன்னொரு விஷயம் ஞாபகத்துக்கு வருது. மும்பைலேருந்து வர்ற வங்க சென்னை ஒரு தூங்குமூஞ்சி சிடின்னு புகார் பண்ணுவாங்க தெரியுமா! 'அதை ரொம்ப பிராக்டிகலா உணர்ந்தேன்'னு சொல் றவர் டால்பி சிஸ்டத்தை சென்னைக்குக் கொண்டு வந்த ராஜீவ். அவரை ரீசன்டா மீட் பண்ணேன். பத்து வருஷம் முன்னாடி மும்பைலேருந்து சென்னை வந்தவர். இங்கே உள்ள சினிமா இன்டஸ்ட்ரிகாரங் களையும் தியேட்டர் காரங்களையும் கன் வின்ஸ் பண்ண

# தேன்குட்டி!

அவர் பட்ட கஷ் டத்தைக் கதை கதையாச் சொன்னார். இப்போ என்ன டான்னா டால்பி சவுண்ட் சிஸ்டம் இல்லாத தியேட்டர்ல படம் பார்க்கறது யூஸ்லெஸ்ன்ற மாதிரி ஆயிடுச்சு. 'சென்னை கூட இப்போ பரவால்லைங்க... ராத்திரி எட்டரை மணிக்குத் தூங்கப் போகாம ஒன்பதரை வரைக்கும் முழிச்சுக்கிட் டிருக்கே!'ன்னு இண்டலடிக்கறார் ராஜீவ். மும்பைக்காரங்க மாற மாட்டாங்க!

சரி, போன வாரம் ஏன் மட்டம் அடிச் சேன்னு நீங்க கேக்கவேயில்லியே...?

சும்மாதான்! எப்பவாச்சும் ஒருமுறை ஏதாவது ரூல் பிரேக் பண்ணலைன்னா லைஃப் இஸ் நாட் வொர்த் லிவிங்! மேலும் சுமியை நீங்க மன்னிப்பீங்க; ஆனா மறக்க மாட்டீங்கன்ற திமிர் கலக்காத தூய்மையான தைரியம்தான் - வேறென்ன!

— சுமி

இந்தியப் பிரதமர் இந்திரா காந்தியிடம், ஜப்பானியப் பிரதமர் என்னைப் பற்றி விசாரித்தது பற்றியும், அதனைத் தொடர்ந்து, இந்திராஜியுடனான என் சந்திப்பு பற்றியும் குறிப்பிட்டிருந்தேன் அல்லவா? ஜப்பானியப் பிரதமர் தநாகா என் மேஜிக் ஷோவைப் பார்க்க வந்து விட்டு, யாருமே எதிர்பாராத ஒரு செயலைச் செய்தது பற்றி இப்போது சொல்லப் போகிறேன்.

டோக்கியோ நகரில் என்னுடைய ஷோ நடந்து கொண்டிருந்த சமயத்தில், என்னுடைய ஸ்பான்சர், ஜப்பானியப் பிரதமரை என் நிகழ்ச்சியைக் காண வர வேண்டும் என்று அழைக்க, அவரும் வர ஒப்புக் கொண்டார்.

பெரிய அளவில் பாதுகாப்பு ஏற்பாடுகள் கூடச் செய்யப்படவில்லை. முதல் சில இருக்கைகள் தவிர, மற்றவற்றில் வழக்கம் போலப் பொது மக்கள் அமர்ந்து நிகழ்ச்சியினைக் காண ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இதுவே எனக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது.

ஜப்பானியப் பிரதமர் குறித்த நேரத்துக்கு அரங்கிற்கு வந்தார். நிகழ்ச்சி தொடங்கியது. ஒவ்வொரு ஐட்டத்தையும் மிகவும் ரசித்துப் பார்த்து, என்னை மிகவும் பாராட்டி விட்டு, விடைபெற்றார்.

# வியந்தார் விஞ்ஞானி!

நான் டோக்கியோவில் நிகழ்ச்சியை முடித்துக் கொண்டு அடுத்தபடியாக ஜப்பானின் தொழில் துறையில் சிறந்த நகரங்களில் ஒன்றான ஒசாகா நகரத்துக்குப் போய் அங்கே நிகழ்ச்சியினை நடத்திக் கொண்டிருந்தேன். அப்போது, ஜப்பானிய நியூஸ் பேப்பர்களில் ஒரு செய்தி வெளியானது. பிரதம மந்திரி தநாகா, பாராளுமன்றத்தில் என்னுடைய மேஜிக் ஷோவைப் பற்றி ரொம்ப சிலாகித்துக் கூறிவிட்டு,

"மிகவும் அற்புதமான கே. லாலின் மேஜிக் காட்சியை, இங்கே இருக்கிற அனைத்து பாராளுமன்ற உறுப்பினர்களும் கண்டு ரசிக்க வேண்டும் என்று விரும்புகிறேன். உறுப்பினர்களுக்கு யாதொரு ஆட்சேபணையும் இல்லையென்றால், ஒசாகா நகரத்தில் தற்போது நடந்து கொண்டிருக்கும் கே. லாலின் மாயாஜால் என்கிற மேஜிக் ஷோவை நீங்கள் அனைவரும் பார்ப்பதற்கு ஏற்பாடு செய்யப்படும்" என்று கூறியதாக, பேப்பரில் செய்தி வெளியாகியிருந்தது!

என்னுடைய ஸ்பான்சர் என்னிடம் இந்தச் செய்தியைத் தெரிவித்தபோது, எனக்கு அளவில்லாத மகிழ்ச்சி. காரணம், வேறு எந்த நாட்டிலும் எனக்கு இதுபோன்ற ஒரு அனுபவம் ஏற்பட்டது கிடையாது. அன்றைய தினமே, ஜப்பானில் மிக அதிகமாக விற்பனையாகும் தினசரியினுடைய நிருபர் ஒருவர், இது பற்றிய முழு விவரத்தைத் தெரிந்து கொள்ள என்னை அணுகினார். "நானே பிரதமருடைய கருத்தை பேப்பர் மூலம்தான் தெரிந்து கொண்டேன். வேறு எந்தத் தகவலும் எனக்குத் தெரியாது" என்று தெரிவித்தேன்.

அந்த நிருபரே உடனடியாக, தமது பத்திரிகையினுடைய டோக்கியோ அலுவலகத்தின் மூலமாகப் பிரதமரின் அலுவலகத்தைத் தொடர்பு கொண்டு, மேலும் விவரங்களை அறிந்து கொண்டு எனக்கும் தெரிவித்தார்.

குறிப்பிட்ட தினத்தில், பிரதமரின் அலுவலகம் திட்டமிட்டபடி, ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அது மட்டுமில்லை. அமெரிக்காவில் உள்ள நாசா விண்வெளி ஆராய்ச்சி மையத்தில் பணிபுரிந்து கொண்டிருந்த ஜப்பானைச் சேர்ந்த விஞ்ஞானி ஒருவரை பிரதமர் தகவல் அனுப்பி, உடனடியாக வரவழைத்தார்.

நிகழ்ச்சியின் போது, பிரதமரின் ஒருபுறம்



அவரது மனைவி உட்கார்ந்திருந்தார். 'மறு புறம் அமெரிக்காவிலிருந்து, என் நிகழ்ச்சியைப் பார்ப்பதற்கு என்றே பிரதமருடைய பிரத்யேக அழைப்பின்பேரில் ஜப்பான் வந்திருந்த விண்வெளி விஞ்ஞானியான 'மிக்கியோ இனோ' உட்கார்ந்து கொண்டிருந்தார். அந்த நிகழ்ச்சி, பாராளுமன்ற உறுப்பினர்களை மட்டுமே பார்வையாளர்களாகக் கொண்ட காட்சி. பொது மக்கள் அன்று அனுமதிக்கப்படவில்லை.

விஞ்ஞானி மிக்கியோ, ஒவ்வொரு ஐட்டத்தையும் கைதட்டி ரசித்தார். எகிப்திய 'மம்மி' மேஜிக் என்று ஒரு மேஜிக் செய்து காட்டுவேன் நான். ஒரு பெட்டிக்குள் எகிப்திய இளவரசியின் சிலை, முதலில் ஒரு உயிருள்ள இளரவசி ஆகும். அவர் நடந்து போய், ஒரு கட்டிலில் படுத்துக் கொள்வார். அவர் மீது ஒரு வெள்ளை பட்டுத் துணியால் மூடுவேன். நான் கைகளை மேலே

## மேஜிக் நிபுணர் கே. லால்

தூக்க; தூக்க, அந்த வெள்ளைத் துணி மூடிய இளவரசியின் உடல் மேலே எழும். கைகளைத் தாழ்த்தினால் கீழே இறங்கும். அந்தரத்தில் இருக்கும் துணியை இழுத்தால், இளவரசி மாயமாக மறைந்து விடுவார். மறுபடி பெட்டியைத் திறக்கிறபோது, மறைந்த இளவரசி, மறுபடி உயிருடன் இருப்பாள். அவள் மீண்டும் சிலையாவாள். இதை இல்யூஷன் (illusion) மேஜிக் என்போம்.

இந்த நிகழ்ச்சி முடிந்தவுடன், தான் ஒரு விஞ்ஞானி என்பதையும் மறந்து விட்டு, கிடுகிடுவென்று மேடைக்கு வந்தார் மிக்கியோ. 'நான் அமெரிக்காவில் நாசா மையத்தில் பணியாற்றும் விஞ்ஞானி. இந்த சூரிய மண்டலத்தில் எத்தனையோ ஆயிரம் மைல்களுக்கு அப்பால் இருக்கிற கிரகங்கள் மற்றும் இதர விஷயங்களில் என்ன நடக்கிறது என்பதை என்னால் தெளிவாகக் கண்டுபிடித்துச் சொல்லி விட முடியும். ஆனால், இங்கே என் கண் எதிரில் பத்து அடி தூரத்தில் உள்ள மேடையில் இந்த

மேஜிக் நிபுணர், ஒரு பெண்ணை திடீரென்று மறையச் செய்தும், மறுபடியும் வரவழைத்துக் காட்டியும் செய்தாரே அது எப்படி என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. இத்தனை வேகமாகச் செயல்படும் கே. லால் மேஜிக் உலகின் சக்ரவர்த்தி என்பதில் துளியும் சந்தேகமில்லை' என்று மேடையிலேயே பாராட்டினார்.

மறுநாள் அனைத்து பேப்பர்களிலும், ஜப்பானிய விஞ்ஞானி எனக்கு அளித்த பாராட்டுதான் முதல் பக்கச் செய்தி!

டோக்கியோவில் நடந்த பதினைந்து நாள் ஷோ, அதனையடுத்து ஒசாகாவில் நடந்த எட்டு நாள் ஷோ ஆகியவற்றுக்குப் பின் ஜப்பானிய மக்களின் மனத்தில் எனக்கு நிரந்தரமான இடம் கிடைத்து விட்டது.

அடுத்த தடவை ஜப்பானுக்கு வரப் போகிறேன் என்று தகவல் தெரிந்தும், சின்ன நகரங்களில் வசிக்கிற மக்கள் கூட, என் நிகழ்ச்சியைக் காணப் பெரிதும் ஆர்வமாக இருந்தார்கள். எனவே, சிறு ஊர்களில் கூட நாலைந்து நாட்கள் நிகழ்ச்சிக்கு ஏற்பாடு ஆனது. மொத்தத்தில் நான் ஆறு மாத காலம் ஜப்பானில் தங்கி, மேஜிக் ஷோ நடத்திட வேண்டும் என்கிற சூழ்நிலை ஏற்பட்டது.

சிறு நகரங்களில் இரண்டு, மூன்று நாட்களுக்குத்தான் மேஜிக் ஷோ நடத்த ஏற்பாடாகியிருக்கும். அதற்குரிய டிக்கெட்களும் முன்பதிவு மூலமாகவே விற்றுத் தீர்ந்திருக்கும். டிக்கெட் கிடைக்காமல் ஏமாந்து போன ரசிகர்கள் அந்த நகரத்துக்கு நான் வருகிற போது, சாலையின் இரண்டு பக்கங்களிலும் கூடி நின்று, என்னைக் கண்டு, கையசைத்து, தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவிப்பார்கள்.

நான் அதிக தடவை சென்று நிகழ்ச்சி நடத்தியது ஜப்பானில்தான். முதலில் நான் சென்று நிகழ்ச்சிகள் நடத்தி விட்டு வந்து கொண்டிருந்தேன். அதன்பின், என் மகன் ஜூனியர் லால் மேடை ஏறத் தொடங்கிய பின் இரண்டு பேரும் சேர்ந்து மேஜிக் காட்சிகள் நடத்தியிருக்கிறோம். ஆறேழு தடவை, ஜூனியர் லால் மட்டும் தனியாக ஜப்பான் போய் நிகழ்ச்சிகளை நடத்தி விட்டு வந்திருக்கிறார்.

ஜப்பானில் எங்கள் நிகழ்ச்சி முடிந்தவுடன், கைகுலுக்கவும் கையெழுத்து வாங்கவும், போட்டோ எடுத்துக் கொள்ளவும் நூற்றுக்கணக்கான ஜப்பானிய ரசிகர்கள் காத்திருப்பார்கள். கையெழுத்துப் போட்டு மாளாது. சில சமயங்களில், ஒருவருக்கு ஆட்டோகிராப் போட்டுக் கொடுத்தால் அதுவே, இன்னும் பல ஆட்டோகிராப் புத்தகங்களிலும் தோன்றும் மேஜிக்கை கற்றுக் கொள்ள முடிந்தால், எத்தனை உபயோகமாக இருக்கும் என்று தமாஷாக என் மகன் சொல்லுவான். ஆட்டோகிராப் புத்தகங்களில்தான் என்று இல்லை. தங்களது உடைகள், ரூபாய் நோட்டுகளில் கூட எங்களிடம் ஆட்டோகிராப் வாங்கிக் கொள்வார்கள். இன்னும் சில ரசிகர்கள் தங்கள் முகம், கை, முதுகுகளில் கூட ஆட்டோகிராப் போட்டுத் தரச் சொல்லுவார்கள். விசித்திரமான மனிதர்கள்!

ஜப்பானில், மிகச் சிறந்த பொழுது போக்கு நிகழ்ச்சி வழங்கும் மனிதன் என்று மக்கள் மத்தியில் எனக்குப் பெயர் ஏற்பட்டது என்றாலும், மற்ற நாடுகளில் பலவிதமான விசித்திரமான அனுபவங்களும் ஏற்படவே செய்தன. விபரீதமான பிரச்னைகள் ஏற்பட்ட சமயங்களும் உண்டு. 1965-ம் வருடம் எனக்கு குவைத் செல்ல அழைப்பு வந்தது.

அங்கே என் நிகழ்ச்சியை ஏற்பாடு செய்தவர் மிகப் பெரிய ஸ்பான்சர். அங்கு மக்களுக்கும் பணம் பற்றிய கவலை இல்லை. எனவே மிக பிரும்மாண்டமான முறையில், அங்கே ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. விளம்பரத்துக்கான போஸ்டர்களை நான் போவதற்கு முன்னதாகவே அனுப்பி வைத்தேன். அதே போன்ற வண்ணப் போஸ்டர்கள், ஏராளமாக அச்சடிக்கப்பட்டு, விளம்பரப்படுத்தப்பட்டது!

நிகழ்ச்சியின் வெற்றிக்கு உறுதுணையாக இருக்கும் என்று நம்பி அனுப்பி வைக்கப்பட்ட போஸ்டர்கள், நேரெதிரான விளைவினை ஏற்படுத்தியது. ஆம்! நான் மனிதன் இல்லை! சைத்தான்! என்னை துபாய்க்குள் காலடி வைக்கவே அனுமதிக்கக் கூடாது என்று பெரும் எதிர்ப்பு கிளம்பியது. நான் அனுப்பி வைத்த போஸ்டர்களில் அப்படியென்ன இடம்பெற்றிருந்தது என்று கேட்கிறீர்களா?

ஒரு பெண்ணை நான் இரண்டு பாதியாக வெட்டுவது போன்ற படம்தான்!

(தொடரும்)

# வர்த்தமானன் பதிப்பகம்

**இது ஒரு தொழில் நிறுவனம் அல்ல. இது ஒரு தொண்டு நிறுவனம் என்பதனை எமது வாடிக்கையாளர்கள் நன்கு அறிவர்.**

"எவரும் வாங்கும் வண்ணம் எளிய விலைக்கு – அல்ல, அல்ல, மலிவு விலைக்கு, வணிக நோக்கம் கிஞ்சித்தும் இன்றிப் பதிப்பித்து வரும் **'கின்னஸ்'** சாதனைப் பதிப்பகம், வர்த்தமானன் பதிப்பகம்" என அண்மையில் **சென்னைக் கம்பன் கழகம்** தனது வெள்ளி விழாவின் போது எங்களைப் பாராட்டியதற்கு ஏற்ப, மீண்டும் சலுகை விலையில் பின்வரும் நூல்களைத் தருகிறோம், **ஸ்டாக் உள்ள வரை!**

## சங்க இலக்கியங்கள்

**மூலமும் உரையும்**

| தொகுதிகள் | விலை | சலுகை விலை |
|---|---|---|
| 15 | ரூ. 1400 | ரூ. 750 |

அடங்கிய நூல்கள் : **எட்டுத்தொகை :** நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு. **பத்துப்பாட்டு :** திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம்.

## பன்னிரு திருமுறைகள்

**மூலமும் உரையும்**

| தொகுதிகள் | விலை | சலுகை விலை |
|---|---|---|
| 24 | ரூ. 2500 | ரூ. 1200 |

அடங்கிய நூல்கள் : திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவர் பாடிய தேவாரம் (1முதல் 7 திருமுறைகள்-10 தொகுதிகள்), மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம், திருக்கோவையார் (8ஆம் திருமுறை-2 தொகுதிகள்), திருமாளிகைத்தேவர் உட்பட ஒன்பது பேர் பாடியவை (9ஆம் திருமுறை-1 தொகுதி), திருமூலரின் திருமந்திரம் (10ஆம் திருமுறை-3 தொகுதிகள்), காரைக்கால் அம்மையார் உட்பட்ட பன்னிருவர் பாடிய பாடல்கள் (11ஆம் திருமுறை-2 தொகுதிகள்), சேக்கிழார் அருளிய பெரிய புராணம் (12ஆம் திருமுறை-6 தொகுதிகள்) ஆக மொத்தம் பன்னிருதிருமுறைகள் - 24 தொகுதிகள்.

சலுகை விலையில் பாதியை M.O/D.D மூலம் அனுப்புக. மீதியை, நூல்கள் கிடைக்கும் போது தபால் காரரிடம் தபால் செலவுடன் சேர்த்துக் கொடுத்துப் பார்சலைப் பெற்றுக் கொள்க. (தபால் செலவு: சங்க இலக்கியங்கள் 2 பார்சல் - ரூ.80, பன்னிரு திருமுறைகள் 3 பார்சல் - ரூ.120) நேரில் வாங்கினால் தபால் செலவைத் தவிர்க்கலாம். காசோலை ஏற்கப்படமாட்டாது.

நேரில் பெற விரும்புவோர் எமது அலுவலகத்தில் சலுகை விலையினைச் செலுத்தி நூல்களை உடனே பெற்றுக் கொள்ளலாம். அலுவலக நேரம் : காலை 9.30 மணி முதல் மாலை 6.30 மணி வரை. (ஞாயிறு வார விடுமுறை).

**MO/D.D அனுப்ப வேண்டிய முகவரி**

**VARTHAMANAN PATHIPPAGAM**
A.R.R. Complex, 141, Usman Road, T.Nagar,
Chennai - 17. (Near Pangal Park)

**இது, முன்வெளியீட்டுத் திட்டம் அல்ல;
புத்தகங்கள் உடனே அனுப்பப்படும்.**

**முன்னாள் தலைமைத் தேர்தல் அதிகாரி டி.என். சேஷன், பா.ஜ.க. வேட்பாளர் அத்வானியை எதிர்த்து, குஜராத் காந்தி நகரில், காங்கிரஸ் கட்சி சார்பாக நிற்கிறாராம். ஆசை யாரை விட்டது?**

**நம் கற்பனை சும்மா இருக்கலாமோ...?**

**1**

*காந்தி நகர் தெருக்களில் எல்லாம் சுவரில் எழுதும்படி கட்டளை இட்டு விட்டு, பார்த்துக் கொண்டு நிற்கிறார் சேஷன். மாநில தேர்தல் ஆணையர் வருகிறார்.*

மா.தே.ஆ : யாரைக் கேட்டு இப்படி பிறத்தியார் சுவரில் எல்லாம் எழுதறீங்க?

சேஷன் : யாரைக் கேட்கணும்? நான் யார் தெரியுமா?

மா.தே.ஆ : தெரியும். நீங்க ஒரு வேட்பாளர்.

சேஷன் : (ஆத்திரத்துடன்) நல்லா கண்ணைத் திறந்து பாருங்க. நான்தான் சேஷன். டி.என். சேஷன்! முன்னாள் முதன்மைத் தேர்தல் ஆணையர்!

மா.தே.ஆ: அதெல்லாம் பழைய கதை. சுவர்ல எழுதணும்னா வீட்டுக்காரர் அனுமதி வேணும். அது இருக்கா? காண்பிங்க.

சேஷன் : இந்த வீட்டுக்காரரின் அனுமதியா? எவன் போட்டான் இந்த மாதிரி அடாவடி ஆர்டர் எல்லாம்? இப்படி அனுமதி கேட்டு வீடு வீடா அலைஞ்சுக்கிட்டிருந்தா எப்பத்தான் எழுதி முடிக்கிறது? அதுக்குள்ள அடுத்த வருஷ எலக்ஷன் வந்துடும். நகருங்க!

மா.தே.ஆ : வீட்டுக்காரர் புகார் பண்ணினா நீங்கதான் சுவர்ல எழுதினதை எல்லாம் அழிக்கணும்.

சேஷன் : ரொம்ப மிரட்டாதீங்க. வீட்டுக்காரர் புகார் பண்ணினா, அழிச்சிட்டாப் போச்சு. அதுக்கு இந்த ஆர்ப்பாட்டம் பண்றீங்களே, ஏதோ உங்க நெத்தியிலயே எழுதிட்ட மாதிரி? ஒரு காண்டிடேட் தேர்தல்ல நின்னா ஓட்டுப் போடற பொதுமக்களுக்குத் தெரிய வேணாம்? என்ன தேர்தல் நடத்தறீங்க நீங்க? போங்க உங்க வேலையப் பார்த்துக்கிட்டு! (மாநில தேர்தல் ஆணையர் முறைத்துப் பார்த்துக் கொண்டே நகர்கிறார்.)

**2**

*தேர்தல் கண்காணிப்பாளர் பின்தொடர, சேஷன் பிரசாரம் செய்கிறார்.*

தே.க : மணி 10 தாண்டிடுச்சு. இதுக்கு மேல நீங்க பிரசாரம் பண்ணக் கூடாது.

சேஷன் : உங்க கடிகாரத்துலதான் மணி பத்து. என்னோடதுல 9 தான் ஆச்சு. இன்னும் ஒரு மணி நேரம் நான் பிரசாரம் செய்யலாம். அண்டர்ஸ்டேண்ட்?

தே.க : அய்யோ, அக்கிரமம்! அந்த மணிக்கூண்டுல பாருங்க. மணி பத்தைத் தாண்டிட்டுது.

சேஷன் : அந்தக் கடிகாரத்துலதானே? அது வருஷக்கணக்கா ரிப்பேர். ஒருநாள் காலை 10 மணிக்கு நின்னதுதான். அப்புறம் ஓடவே இல்லே... (மக்களைப் பார்த்து) நான் இன்னும் பேசலாமா? இந்த மனுஷன் வந்து நான் பேசக்கூடாதுங்கறார்.. நியாயமா? நீங்களே சொல்லுங்க.

மக்கள் : நீங்க பாட்டுக்குப் பேசுங்க. நாங்க வேலை வெட்டி எல்லாத்தையும் உட்டுட்டு உங்க பேச்சைக் கேக்கத்தான் உக்காந்திருக்கோம்.

சேஷன் : பாத்தீங்களா? மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு. சேஷன் பேச்சே ஷேக்ஸ்பியர் பேச்சு. எல்லாரும் என் பேச்சைக் கேக்கத்தான் வந்திருக்காங்க. உங்க பேச்சை இல்லே. அதுனால கொஞ்சம் வாயை மூடிட்டு இருங்க... ஆகையால் பொது மக்களே, கார்கில் போரில் வென்றது நம் ஜவான்கள்தாம். அவர்கள் இந்தத் தேர்தல்ல போட்டியிடலே. அவர்கள் பெயரைச் சொல்லி பா.ஜ.க.தான் வோட்டுக் கேட்கிறாங்க. நீங்க என்ன செய்யணும் தெரியுமா?

மக்கள் : என்ன செய்யணும்?

சேஷன் : ஜவான்கள் தேர்தலுக்கு நிக்கும் போது பா.ஜ.கவுக்கு வோட்டுப் போடறோம்னு சொல்லிடுங்க. இப்போ எனக்கு – அதாவது கைச் சின்னத்துக்கு வோட்டுப் போடுங்க.

தே.க : மணி பத்து தாண்டியும் தேர்தல் பிரசாரம் செய்த உம்ம தேர்தலை, செல்லாதுன்னு அறிவிச்சுடறேன். ஹூம்!

சேஷன் : (பல்லை நறநறவென்று கடித்து) அட, உம்மால் ஆனதைப் பார்த்துக்குங்க!

தே.க: இதுவரை அனுமதிக்கப்பட்ட பதினைஞ்சு லட்சத்துக்கு மேல நீங்க செலவழிச்சிட்டீங்க. இனிமே ஒரு பைசா கூடச் செலவழிக்கக் கூடாது. அப்புறம் டிஸ்க்வாலிஃபை பண்ணிடுவேன்! ஜாக்கிரதை!

சேஷன் : சீ, பிசாத்து பதினஞ்சு லட்சத்துல எந்த பார்லிமெண்ட் எலக்ஷன் ஜெயிக்க முடியும்? எந்த முட்டாள் இப்படி ஒரு தொகையை வைச்சான்னு தெரியலே. போஸ்டர் அடிச்சு ஒட்டினாலே அஞ்சு லட்சம் அவுட்!

## தேர்தலில்

தே.க : அதெல்லாம் எனக்குத் தெரியாது.

சேஷன் : பின்னே உங்களுக்கு என்னதான் தெரியும்? கூட்டத்துக்கு ஆள் கூட்டிட்டு வரவனுக்கு யார் காசு கொடுப்பாங்க? கூட உழைக்கற கட்சிக்காரங்களுக்கு யார் சாப்பாடு




போடுவாங்க? டீ. கொடுப்பாங்க?

தே. க: எல்லாத்தையும் செய்யுங்க. ஆனா பதினஞ்சு லட்சத்துக்கு மேல போகக் கூடாது. கணக்கு வச்சிருக்கீங்களா?

சேஷன் : ஓ, வச்சிருக்கேனே! இதுவரை நூறு ரூபா இருபது காசுதான் செலவழிச்சிருக்கேன்.

# நிற்கிறார் சேஷன்

மீதி பதினாலு லட்சத்து, தொண்ணூத்து ஒம்பதாயிரத்து எண்ணூத்தித் தொண்ணூத்து ஒம்பது ரூபா, எண்பது காசு பாக்கி இருக்கு.

தே.க : ஐயோ, ஐயையோ! என்ன அக்கிரமமா இருக்கு இது. இப்பவே இவ்வளவு பொய் சொன்னா, அப்புறம் ஜெயிச்சு எம்.பி.ஆனா இன்னும் எத்தனை பொய் சொல்லுவீங்க!

சேஷன் : நீங்க வச்சிருக்கற பதினஞ்சு லட்சம்கிறதுதான் அக்கிரமம். அந்தத் தொகையில பத்து கார்களுக்கு, பதினஞ்சு நாளுக்கு பெட்ரோல் போடவே பத்தாது. தெரியுமா, டாம் இட்!

தே.க: நீங்க தேர்தல் கணக்கை சப்மிட் பண்ணும்போது பாத்துக்கறேன்!

சேஷன் : ரொம்ப மிரட்டாதீங்க. நான்தான் பெஸ்ட் வேட்பாளர். எங்க காங்கிரஸ் கட்சி தான் பெஸ்ட் கட்சி. நான் ஜெயிச்சு வந்து ஹோம் மினிஸ்டர் ஆனா, உம்ம கதி அதோ கதிதான்! ஏதோ ஒரு காலத்துல பதினஞ்சு லட்சம்னு ஃபிக்ஸ் பண்ணா, எப்படிப் போதும்னு யோசிக்க வேணாம்?

மக்கள் : அதானே? இதுல எல்லாம் ரூபாயப் பார்த்தா நடக்குமா?

நிருபர்கள் : மிஸ்டர் சேஷன், நீங்க முன்னால் தேர்தல் அதிகாரி. இப்போ வேட்பாளர். நீங்க தேர்தல் சட்டதிட்டத்தை எல்லாம் மதிக்கறீங்களா?

சேஷன் : யாரோ, எந்தத் திரேதா யுகத்துலயோ எழுதி வச்ச ரூல்ஸை எல்லாம் மதிச்சு நடந்துட்டிருந்தா தேர்தல்ல எப்படி ஜெயிக்கிறது? யுத்தத்துலயும் தேர்தல்லயும் சட்டதிட்டத்துக்கு இடம் கிடையாது. ஓகே?

(கம்பீரமாக நடக்கிறார்)

கற்பனை : **சாருகேசி**

## பழங்கணக்கு – க. அன்பழகன்

1962 - 67 – தமிழ்நாடு சட்டமன்ற மேலவையில் ஆசிரியர் தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்

67-71 – திருச்செங்கோடு தொகுதி எம்.பி

71 – புரசைவாக்கம் எம்.எல்.ஏ; தமிழக நல்வாழ்வுத்துறை அமைச்சர்

77 – புரசைவாக்கம் எம்.எல்.ஏ

80 – புரசைவாக்கம் எம்.எல்.ஏ

84 – பூங்காநகர் எம்.எல்.ஏ, அரசியல் சாசன சட்ட நகல் எரிப்பு காரணமாக பதவி பறிப்பு. உபயம் : 'வானளாவிய அதிகாரம்' படைத்த சபாநாயகர் பி.ஹெச். பாண்டியன்

89 – அண்ணாநகர் தொகுதி எம்.எல்.ஏ

91 – சேப்பாக்கம் தொகுதி; தோல்வி

96– துறைமுகம் தொகுதியில் வெற்றி. தற்போது தமிழகக் கல்வி அமைச்சர்



"உங்கள் வாக்குரிமையைப் பயன்படுத்த மிகவும் சரியான நேரம் இது" என்று சரத் பவார் தம் தேசியவாத காங்கிரஸ் கட்சி விளம்பரங்களை வெளியிடுகிறார்.

இதில் கவனிக்கத்தக்க விஷயம், பவாரின் சின்னம் – கடிகாரம்.





• ஜனா. கிருஷ்ணமூர்த்தி



• கிரிதர் கோமங்



• ரங்கராஜன் குமாரமங்கலம்

## கேள்வி நேரம்

"அமெரிக்க டெலிவிஷன்களில் தேர்தல் சமயங்களில் வேட்பாளர்கள், நேருக்கு நேர் விவாதம் செய்யும் நிகழ்ச்சிகள் இடம் பெறுவதுபோல, நம் ஊர் டெலிவிஷன்களில் நடத்துவதில்லையே?" என்று சன் டி.வி.யில் கேள்வி நேரம் நடத்தும் மாலனிடம் கேட்டோம்.

# தொண்ணூறாயிரம் கடிதங்கள்!

"இங்கே பெரிய தலைவர்கள், இது போல நேருக்கு நேர் தோன்றி விவாதிக்கும் நிகழ்ச்சிகளில் பங்கேற்பதற்கு சம்மதிப்பது கிடையாது. இரண்டாம், மூன்றாம் மட்டத்தில் இருப்பவர்கள் பங்கேற்கிறார்கள். அந்த விவாதங்கள் பெருமளவில் சூடு பறக்க அமைவ இல்லை. ஆனாலும், சென்ற நாடாளுமன்றத் தேர்தல் சமயத்தில், தென்சென்னையில் போட்டியிட்ட பிரதான வேட்பாளர்களான தி.மு.க.வைச் சேர்ந்த டி.ஆர். பாலு – பா.ஜ.க.வைச் சேர்ந்த ஜனா. கிருஷ்ணமூர்த்தி இருவரும் ஒரு நிகழ்ச்சியில் பங்கேற்றார்கள். ஆனால்,

தேர்தல் மேடை




"திரைப்புரளி பத்திரிகை மேல ரொம்பக் கோபமா இருக்கீங்களாமே...ஏன்?"

"நானும் என் கணவரும் ரொம்பவும் ஒற்றுமையா வாழறதா கிசுகிசு எழுதிருக்காங்க!"

— அம்பை தேவா

அவர்களிடையே சூடான விவாதம் நடக்கவில்லை. இரு தரப்புக் கருத்துக்களையும் சொன்னார்கள். அவ்வளவுதான்!"

## 13 விஷயம்

**13** அதிர்ஷ்டமான எண்ணா? இல்லையா? 'அதிர்ஷ்டமான எண்தான்' என்பது பா.ஜ.க. வாதம். இல்லை என்பது காங்கிரஸ் தரப்பு வாதம்.

ஒற்றை வோட்டில் வாஜ்பாய் அரசை வீழ்த்திய ஒரிசா முதல்வர் கிரிதர் கோமங், "முதலில் பா.ஜ.க. ஆட்சி, பதிமூன்றே நாள்தான் இருந்தது. அடுத்து, பதிமூன்று கட்சிகளின் கூட்டணியுடன் அமைந்த வாஜ்பாய் அரசு, பதிமூன்றே மாதத்தில் கவிழ்ந்தது. இப்போது நடப்பது பதிமூன்றாவது லோக்சபாவுக்கான தேர்தல். எனவே பி.ஜே.பி ஆட்சியைப் பிடிப்பது சாத்தியமில்லை" என்கிறார்.

"பதிமூன்று எங்களுக்கு ராசியான எண். முதலில் இருந்த பதிமூன்று நாள் ஆட்சி, அடுத்து, பதிமூன்று மாத கால ஆட்சிக்கு வித்திட்டது. அடுத்து வரும் பதிமூன்றாவது லோக்சபா தேர்தலில் நாங்கள்தான் ஆட்சியைப் பிடிப்போம். அது பதிமூன்று ஆண்டுகளுக்குத் தொடரும்" என்கிறார் பா.ஜ.க.வின் ரங்கராஜன் குமாரமங்கலம்!

## தெரியுமா?

● கணவரும், மனைவியும் ஒரே சமயம் பாராளுமன்ற மக்களவை உறுப்பினர்களாக இருந்தவர்கள் என்ற பெருமையை முதலில் அடைந்தவர்கள். ஜோசிம் – வயலெட் ஆல்வா தம்பதிதான். கர்நாடகாவைச் சேர்ந்த இவர்கள் முதல் லோக்சபாவில் (1952–57) உறுப்பினர்களாக இருந்தனர்.

● ஒன்பதாவது மக்களவைத் தேர்தலின் போது, பி.ஜே.பி. சார்பில் போட்டியிட்ட அசோக்பட் என்ற வேட்பாளர், ஒரு புதுமையான பிரசார உத்தியைக் கையாண்டார். தம் தொகுதியைச் சேர்ந்த தொண்ணூறாயிரம் வாக்காளர்களுக்கும் தனக்கு வாக்களிக்கக் கோரி, கடிதம் அனுப்பினார். இன்றளவும் இது ஒரு சாதனை!

● உலகத்தின் மிகப் பெரிய சட்டசபை, சீன மக்கள் குடியரசுடையதுதான். அதன் மொத்த உறுப்பினர் எண்ணிக்கை 3497. அமெரிக்க காங். உறுப்பினர்கள்தான் அதிக ஊதியம் பெறுபவர்கள். ஆண்டுக்கு எழுபதாயிரம் டாலர்! அங்கே ஓய்வு பெறும் அதிபர்களுக்குத் தரப்படும் பென்ஷன் ஆண்டுக்கு ஒரு லட்சம் டாலர்!

– மலர் சூர்யா

(ஆதாரம்: 'உங்களுக்குத் தெரியுமா?)

## மக்கள் குரல்

"**கா**ர்கில் ஊடுருவல் சதியை வெற்றிகரமாக முறியடித்த பெருமைக் குரியவர்கள் நம் ராணுவத்தினர்தான். இதில் பி.ஜே.பி. பெருமைப்பட்டுக் கொள்வது நியாயமில்லை. தேர்தலை மனத்தில் வைத்துக்கொண்டு, வெற்றிக்குச் சொந்தம் கொண்டாடுவது ஆட்சேபணைக்குரியது" என்கிற ரீதியில் காங்கிரஸ் கட்சியினர் பேசுகிறார்கள்.

இது அபத்தமான வாதம். காங்கிரஸ் கட்சியினருக்கு ஒரு கேள்வி. பி.ஜே.பி இந்தப் பிரச்னையை சரியானபடி கையாளாமல் இருந்து, நமக்கு பெரும்பாதிப்பு ஏற்பட்டிருந்தால், அப்போது பி.ஜே.பி.யைத்தானே முழுக்க முழுக்கக் குறை சொல்லுவார்கள்? காங்கிரஸ்காரர்களே! வாய் புளித்ததோ மாங்காய் புளித்ததோ என்று பேசாதீர்கள்.

– பாலா, சென்னை



நாட்டுமக்கள் நலனையே
நோக்கமாகக் கொண்டவர்...
தமிழகத்தை வாழ்விக்க
காவிரியை தந்தவர்...
தாய்நாட்டின் புகழ் காக்க
போர்க்களத்தில் வென்றவர்...
மறுமலர்ச்சி பாரதத்தை
உருவாக்க வந்தவர்...

இந்த நல்லவர் **வாஜ்பாய்**
தலைமையில் நிலையான நல்லாட்சி தொடர்ந்திட,
ஆதரிப்பீர் தேசிய ஜனநாயக கூட்டணியை.



பி. ஜே. பி.



தி. மு. க.



பா. ம. க.



ம. தி. மு. க.

**தாயகம் காத்திட தேசிய ஜனநாயக கூட்டணிக்கு வாக்களியுங்கள்.**

வெளியீடு : "கமலாலயம்", பாரதீய ஜனதா கட்சி, தி. நகர், சென்னை-17.



# அமர்க்களம்

தாதா அஜீத்குமாரும், போலீஸ் குடும்பத்தில் வளர்ந்த ஷாலினியும் காதலித்து ஒன்றுசேருகிற கதை. குறுக்கெழுத்துப் போட்டியில், 'இடமிருந்து வலம்', 'மேலிருந்து கீழ்' என்று போடுவது மாதிரி பின்னணியில் திரைக்கதை.

எந்த கேரக்டர் கொடுத்தாலும், வெளுத்து வாங்கத் தயாராகி விட்டார் அஜீத். ஆக்ரோஷமான சண்டைக் காட்சிக்கும், உணர்ச்சிமயமான காதலுக்கும் இடையே ஓடி ஓடி அபாரமான ரன்களைக் குவித்திருக்கும் அருமையான பேட்ஸ்மேன்.

துறுதுறுவெனப் பறந்து கொண்டேயிருக்கும் பட்டாம்பூச்சி மாதிரி துடியான கேரக்டரில் ஷாலினி.

பாரதியாரின் 'மனதிலுறுதி வேண்டும்' பாடலை நினைவூட்டினாலும், "சத்தம் இல்லாத தனிமை கேட்டேன், யுத்தம் இல்லாத உலகம் கேட்டேன்" என்ற நீண்ட பாடலில் வைரமுத்துவின் வரிகள் சந்தேகமில்லாமல் வைரம்.

நம்மை ஹம் பண்ண வைக்கிற, 'உன்னோடு வாழாத வாழ்வென்ன வாழ்வு' என்ற பாட்டை அமர்க்களமாய் இசைத்திருக்கிறார் பரத்வாஜ்.

'மேகங்கள் என்னைத் தொட்டுப் போனதுண்டு' என்ற பாட்டை மழையில் நனைந்து கொண்டு, காதலில் உருகி அஜீத் பாடி ஆடும் காட்சி கொஞ்சம் ஓவர்.

ஒரு சினிமா தியேட்டரை (சீனிவாசா), ஒரு பாத்திரமாகவே மாற்றியிருக்கும் ஒளிப்பதிவாளருக்கு மானசீகமாய் ஒரு மலர்ச் செண்டு.

கிராமப்புறங்களில், 'எங்நன கத்தியும், ரெங்கனைச் சேர்' என்று ஒரு பழமொழி உண்டு. அது மாதிரி தமிழ் சினிமாவில் காதல்! இடைவேளை வரை விதவிதமான கேரக்டர்களை உலவ விட்டு, ஏகப்பட்ட எதிர்பார்ப்புகளைக் கிளப்பி விட்ட டைரக்டர், ஊறுகாய் மாதிரி தொட்டுக் கொள்ள வேண்டிய காதலைப் பின்பாதியில் மெயின் ஐட்டம் ஆக்கி விட்டார். எனவே, அமர்க்களமான படமாகியிருக்க வேண்டியது சுமாரானதாக நின்று விட்டது.

— கே.பி.எஸ்.



கார்கில் போரில் வீரத்தைக் காட்டியவர்...
காவிரி நீரால் தமிழகத்தை வாழ்த்தியவர்...
விலைவாசி ஏற்றத்தை வீறுகொண்டு வீழ்த்தியவர்...
பொருளாதார வளர்ச்சியிலும் வெற்றிக்கொடி நாட்டியவர்...

இந்த நல்லவர் **வாஜ்பாய்** தலைமையில்

நிலையான நல்லாட்சி தொடர்ந்திட, பி.ஜே.பி. வேட்பாளர்கள்

பொன் ராதாகிருஷ்ணன் (நாகர்கோவில்)
S. ஆறுமுகம் (தென்காசி)
H. ராஜா B.Com., B.L., F.C.A. (சிவகங்கை)
அரங்கராஜன் குமாரமங்கலம் (திருச்சி)
C.P. ராதாகிருஷ்ணன் (கோயம்புத்தூர்)
மாஸ்டர் மாதன் (நீலகிரி)

அவர்களை ஆதரித்து

**தாமரை**

சின்னத்தில்
வாக்களிப்பீர்.



**தாயகம் காத்திட தாமரைக்கு வாக்களியுங்கள்.**

வெளியீடு : "கமலாலயம்", பாரதீய ஜனதா கட்சி, தி. நகர், சென்னை-17.



ஒரு விஷயம் இங்கே உங்களுக்கு நான் சொல்லியே ஆக வேண்டும். சில நேரங்களில் நிஜம் விநோதம்தான்.

மணப்பெண்ணைக் காணோம் என்றதும் இத்தனை கலபமாக அடுத்தவளைத் தேர்வு செய்து மணவிழா தொடர்வதும், ஓடிப் போனவளைத் தேடாமல் விடுவதும்— அதுவும் மண்டபத்துக்குப் பக்கத்திலேயே அடுத்த வீட்டில் அவள் ஒளிந்திருப்பதும் கற்பனைக்கும் எட்டாதவை.

நிகழ்ந்தது. எனக்கே பற்றிக் கொண்டு வந்தது. 'யோவ். பொண்ணு இங்கேதான் இருக்கா' என்று கத்தத் தோன்றியது.

காப்பி வந்தது. டிபன் வரும் என்று உறுதிசெய்து

# அவசரத் மணமகள் தேவை

**ரிஷபன்**



விட்டுப் போனான்.

கதவைத் தட்டினேன், கூடுதல் எச்சரிக்கையுடன். சிறிது நேரம் பொறுத்துத் திறந்தான்.

"காப்பி..."

''கொஞ்சம் தண்ணி வேணும்."

வேடிக்கையான நிகழ்வுகள். காலி பக்கட்டும், வேறொன்றில் நீரும் தந்தேன்.

''இதுலயே கொப்பளிச்சுரு."

''ச்சே. வேணாம்."

''பரவாயில்லே'' என்றேன் பெருந்தன்மையாய்.

பிறகுதான் கவனித்தோம். அடுத்த அறையில் ஜலத் துவாரம் இருந்தது. அதில் இன்னொரு சங்கடமும் இருந்தது. ஆளில்லாத அறைக்குள் இருந்து நீர் எப்படி வெளிப்படும் என்று யாராவது ஆராய்ந்தால்...

சிக்கலான நேரங்களில் மூளை தனது குயுக்தித் திறனைக் காட்டுகிறது.

வசந்தி அறைக்குள் கொப்பளிக்க, நான் எங்கள் இரு அறை வாசல்களுக்குமாய் சேர்த்து நீரைக் கழுவி விட்ட மாதிரி வீசினேன்.

காப்பிக்கு நன்றி சொன்னான்.

"உங்க வீட்டு காப்பிதான்" என்றேன் மறுபடி.

"ப்ச். என் தங்கை கல்யாணம். என்னால கலந்துக்க முடியலே..." என்றான் வருத்தமாய்.

"ஒரு ஆட்சேபணையும் இல்லே. இப்பவே போகலாம்" என்றேன் என் பங்கிற்கு.

"கெட்டிமேளம் கேட்டதும், மானசீகமா இங்கேர்ந்து வாழ்த்துச் சொல்லிடறேன்" என்றான் சளைக்காமல்.

"நாளைக்கு நான் ஆபீஸ் போகணும்."

"நோ ப்ராப்ளம்."

"நீ என்ன பண்ணப் போறே?"

"இதோ... இங்கேயே... ஹாப்பியா"

"இந்த ரூம்காரர் எப்ப வேணா வரலாம்."

"உட்னே உங்க ரூம் பக்கம் வந்துருவேன்."

"விளையாடாதே. எனக்கு பி.பி. ஏறிக்கிட்டே போகுது."

"இதுவரைக்கும் உதவின அதிர்ஷ்டம் வேற வழி காட்டாமலா போகும்" என்றான் முழு நம்பிக்கையாய்.

அதே சமயம் என் அறைக் கதவு தட்டப்பட்டது.

"சிவராமன்..."

போச்சு... என்னோட ஓனர்.

வசந்தி கதவை மூடிக் கொள்ள, நான் கதவைத் திறந்தேன்.

"என்ன... ஜன்னலை எல்லாம் அடைச்சுட்டு" என்றார் திகைப்புடன்.

"கொசு ஜாஸ்தி..."

"ஓ... பக்கத்து ரூம்ல அவர் இன்னும் வரலேல்ல..." அடுத்த வெடிகுண்டை வீசினார்.

பக்கத்து ரூமா...

"இ... இல்லே."

"ஃபேனை ஆஃப் பண்ணாம போயிட்டார்னு நினைக்கிறேன். நைட் சத்தம் கேட்டுது."

"அப்படியா... இருக்காதே..."

"என் வைஃப் சொன்னா. சரி செக்கப் பண்ணிரலாம்னு வந்தேன்."

"இல்லையே. ஃபேன் ஓடற மாதிரி தெரியலியே" என்றேன் சப்தமாய்.



''டாக்டர்! என் மனைவி தினம் அரை மணி நேரம், ஒரு மணி நேரம் தொடர்ந்து டி.வி. பார்க்கறா...''

''இதுல ஒன்றும் தப்பில்லையே. இதுக்கு ஏன் மனநல மருத்துவரான என்கிட்ட வந்தீங்க?''

''டி.வியை ஆன் பண்ணாமலேயே பார்க்கறா டாக்டர்!''

– பா. ஜெயக்குமார்

என்னை வினோதமாய்ப் பார்த்தார்.

இருவருமாய் அடுத்த அறை வாசலுக்குப் போனோம்.

காதை கதவில் வைத்துக் கேட்டார். எனக்குள் இதயத் துடிப்பு பலத்துக் கேட்டது.

"இல்லே" என்றார் நிம்மதியாய்.

"நாதான் அப்பவே சொன்னேனே. அவர் பக்காவா எல்லாம் பண்ணிட்டுப் போவார்" என்றேன் படபடப்பு அடங்காமல்.

"இன்னிக்கு லீவா..."

"ம்..."

''சாப்பாடு எங்கே... லோக்கலா... டவுனா?''

"இங்கேயேதான்."

"இந்த கவர்ன்மெண்ட் என்ன ஆகும்னு நினைக்கிறீங்க?"

நான் என்ன ஆவேன் என்றே தெரியாத நிலை. அரசைப் பற்றி எனக்கென்ன?

"எப்படியும் சர்வைவ் பண்ணுவாங்க."

"அப்படியா சொல்றீங்க?"

இதே ரீதியில் அரைமணி அறுத்து விட்டுப் போனார்.

**"எ**ன்ன ஃபேன் சத்தம் கேட்டுதா?" என்றாள் வசந்தி.

''புத்திசாலிதான். நான் கத்தினதைப் புரிஞ்சுக்கிட்டு நிறுத்திட்டியே?''

"ம்ஹூம். என்னோட மேரேஜுக்கு என் புத்திசாலித்தனம் உதவலியே. எவ்வளவோ சொல்லியும் எங்கப்பா சம்மதிக்கலே."

"உன்னோட மேரேஜ் கேன்சலாகும்னு உன் லவ்வருக்குத் தெரியுமா?" என்றேன்.

"நான் எப்படியும் அவருக்குத்தான்னு தெரியும்."

"அவரும் இங்கே வந்திருக்காரா?"

வசந்தி பதில் சொல்வதற்குள் கதவு மீண்டும் தட்டப்பட்டது. மறுபடியும் வசந்தி மறைந்து கொள்ள, நான் கதவு திறக்க இம்முறை சங்கரன்.

"சிவா. எனக்கு அர்ஜெண்டா ஒரு வேலை. வெளியே போகணும். நீ கவலைப் படாதே. டிபன் வரும். சாப்பாடு வரும். எல்லாம் ஏற்பாடு பண்ணிட்டேன்."

"சரி."

திரும்பியவன் நின்று என்னைப் பார்த்தான்.

"சிவா"

"என்ன சங்கர்?"

"உன் ரூம்ல வேற யார் குரலோ கேட்ட மாதிரி..."

''அ... அப்படியா. இல்லியே. நான் மட்டும்தானே இருக்கேன்."

எனக்கு வியர்த்து விட்டது.

சரி. நான் வரேன்."

பாம்புச் செவி. அடைக்கப்பட்ட ஜன்னல் கதவு மீறி சப்தம் கேட்கிறவன்.

**எ**ன் அறைக் கதவை உட்புறம் தாளிட்டதும் சத்தம். உணர்ந்து வசந்தி உடனே கதவைத் திறந்தாள்.

"ஒண்ணும் பிரச்னை இல்லியே?"

"அவனுக்கு சந்தேகம் வந்தாச்சு."

"சமாளிச்சீங்களா?"

தலையாட்டினேன்.

நேற்று இருந்த படபடப்பு இன்று அவனி

டம் இல்லை. சகஜமாய்ப் பேச ஆரம்பித்து விட்டான்.

''இங்கே பார். இன்னும் டேஞ்ஜர் சிக்னல் இருக்கு. நீ கொஞ்சங்கூட பயமே இல்லாம அடிக்கடி கதவைத் திறந்து பேச ஆரம்பிக்கிறே'' என்றேன் சற்று கோப மாகவே.

வசந்தி சிணுங்கினாள்.

"அங்கே தனியா இருக்க எனக்கு போர டிக்குது."

''சர்தான். எனக்கு விலங்கு மாட்ட ஆசையா?''

"சரி. இனிமேல் நீங்க கதவைத் தட்டி னாத்தான் திறப்பேன். அது என்ன... இந்த வார கல்கியா?"

ஜாலி டிரிப் வந்தவள் போல வார இதழுடன் அறைக்கு மறைந்தாள்.

டிபன், காப்பி வந்தது.

பக்கத்துக் கல்யாண மண்டபம் தனக்கு நிகழ்ந்த நேற்றைய சங்கடம் மறந்து குதூ கலம் அப்பிக் கொண்ட பிரமை.

இத்தனை கலபமாகவா விட்டு விட்டார்கள்.

எனக்குத்தான் தலைவெடித்து விடும் போலிருந்தது.

வாசலுக்குப் போய் நின்று சூழலை ஆரா யலாம் என்றால் உள்ளே ஒளிந்து இருப்ப வளை நினைத்துக் கலவரம்.

திடீரென கதவைத் திறந்து என்னைத் தேடினால்...

மதிய சாப்பாடும் வந்தது.

"வேற ஏதாவது வேணுமா?"

"இதுவே போதும். ரொம்ப தேங்க்ஸ்."

''உங்களை நன்னா கவனிச்சுக்க சொல்லிட்டுப் போனார்."

"எப்ப வருவார்?"

"வரணும். வந்திருவார்."

சங்கரன் வந்தபோது மணி ஒன்று.

உடனே என்னைப் பார்க்க வரவில்லை.

அவன் என்னைத் தேடி வந்தபோது மணி மூன்று.

இம்முறை ஒரு வித்தியாசம்.

காம்பவுண்ட் சுவர் தடுப்பில் நின்று பேச வில்லை. என் வீட்டு வாசல் வழியே உள்ளே வந்து விட்டான்.

கதவைத் தட்டியதும் திறந்தேன்.

"சாப்பாடு எல்லாம் கிடைச்சுதா?"

"ம்."

"உள்ளே வரட்டுமா?"

"வா. வா."

நகர்ந்து வழி விட்டேன்.

அறைக்குள் வந்து சுற்றிப் பார்த்தான்.

என்ன தேடுகிறான்?

"புறாக்கூண்டு மாதிரி இருக்கு."

''இதுக்கே வாடகை ஐநூறு ரூபா'' என்றேன்.

''அப்பவே வந்துட்டேன். நல்லா டிரெய்னிங் கொடுத்திருக்கேன். இருந்தாலும் காண்ட்ராக்ட் எடுத்தவங்கிற முறையில சின்னத் தப்பு கூட வந்திரக் கூடாது பாரு. எல்லாம் சரியா நடக்குதான்னு விசாரிச் சுட்டு... ஒரு வாய் மோர் சாதம் சாப்பிட் டுட்டு வரேன்."




**''அந்த மாஜி மந்திரியை ஏன் கைது பண்ணியிருக்காங்க?''**

**''அறிவொளி திட்டத்துக்கு 'லைட்' போட்ட செலவுன்னு ஐம்பது லட்சம் கணக்கு காட்டியிருக்காராம்...''**

**– இ. ராதாகிருஷ்ணன்**

நான் இயல்பாக இல்லை என்பதை அவன் உணர்ந்திருக்க வேண்டும்.

பேச்சை நிறுத்தி என்னை உற்றுப் பார்த் தான்.

"என்னவோ மாதிரி நெளியறே?" என் றான் சந்தேகமாய்.

"ஒண்ணும் இல்லியே?"

"பொய் சொல்லாதே. காலையிலேயே கவனிச்சேன். ஏதோ தப்பு பண்ண மாதிரி உன் மூகம் இருக்கு."

"நான் எந்தத் தப்பும் பண்ணலே."

அந்த வினாடி அடுத்த அறைக் கதவு திறந்து வசந்தி தெரிந்தாள்.

(தொடரும்)

## நாடக ராஜா

இந்திய நாடகக் கலையைக் காப்பாற்றவும், தரம் மிக்கதாய் உருவாக்கவும் மத்திய அரசு சார்பாக இயங்கும் நிறுவனம் 'நேஷனல் ஸ்கூல் ஆஃப் ட்ராமா'. நாற்பது ஆண்டுகளுக்கு முன் பல நாடக வல்லுநர்களின் மேற்பார்வையில் துவங்கப்பட்ட இந்த 'என்.எஸ்.டி.' புதுடெல்லியில் இயங்கி வருகிறது.

வருடா வருடம் ஆர்வமும், திறமையுமிக்க இருபது இளைஞர்களைப் பொறுக்கி எடுத்து, அவர்களுக்கு மூன்றாண்டுக் காலப் பயிற்சி அளிக்கிறது இந்த என்.எஸ்.டி. பயிற்சியின்போது மாதம் ரூ.2000/- ஊக்கத் தொகையும் உண்டு. இந்தி நடிகர்கள் நஸ்ருதீன் ஷா, அனுபம்கெர், ஷாருக்கான் போன்றவர்களையும், பன்சிகவுல், ஹாபீப் தன்வீர், ராமானுஜம் போன்ற நாடக வல்லுநர்களையும் செதுக்கி அனுப்பிய பெருமை என்.எஸ்.டி.க்கு உண்டு.

கடந்த 40 ஆண்டுகளில் தமிழகத்திலிருந்து பத்தே பத்து பேர் மட்டுமே என்.எஸ்.டி.யில் தேர்வாகி, பயிற்சி பெற்றுள்ளனர். அதுவும் 1989வரைதான். அதன் பிறகு பத்தாண்டுகளாகத் தமிழர் யாருமே தேர்வு பெறவில்லை.

தற்போது அந்தக் குறையைத் தீர்த்து வைத்திருக்கிறார் ராமநாதபுரத்தைச் சேர்ந்த சண்முக ராஜா. இந்த வருட என்.எஸ்.டி.. பயிற்சிக்குத் தேர்வு செய்யப்பட்டுள்ள ஒரே தமிழர்! 'கதேசிகள்' என்ற நாடகக் குழுவைச் சேர்ந்த இவர் திருச்சியிலுள்ள 'அலைகள்' பண்பாட்டுக் கல்வி மையத்தில் ஒருங்கிணைப்பாளராகப் பணி புரிந்தவர்.

"தமிழகத்தில் என்னைப் போன்ற நாடக ஆர்வமுள்ளவர்கள் நிறையப் பேர் இருந்தாலும், அந்த ஆர்வத்தை முறைப்படுத்தி வளர்க்கும் சரியான அமைப்புகள் ஏதுமில்லை. தமிழில் நவீன நாடகங்களைப் பரவலாக்க தமிழக அரசு நல்ல முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும்" என்று குறிப்பிடும் சண்முகராஜா, "கர்நாடகத்திலிருந்து 15 பேர் தேர்வாகியுள்ள நிலையில், தமிழகத்திலிருந்து நான் மட்டும்தானா?" என்று வருத்தப்படுகிறார்.



• சண்முகராஜா

## ஹிந்தி ஒட்டகங்கள்

கடந்த சில மாதங்களாக மதுரை திருப்பரங்குன்றத்திற்கு சாமி கும்பிட வரும் பக்த சிறார்களுக்குத் தனி உற்சாகம்தான்! காரணம் - அங்கு நிற்கும் மூன்று ஒட்டகங்கள்!

பன்னிரண்டு வருடங்களுக்கு முன்பு வரை திருவிழாவின்போது ஒட்டகங்களும் இடம் பெற்று வந்தன. இடைப்பட்ட காலத்தில், இங்கிருந்த ஒட்டகங்களின் மரணத்தினால் திருவிழாவில் ஒட்டகங்கள் ஆப்செண்ட்!

மறுபடி திருவிழாவில் ஒட்டகங்கள் இடம் பெற வேண்டுமென்று விரும்பிய திருப்பரங்குன்ற தேவஸ்தானம் 30 ஆயிரம் ரூபாய் விலை கொடுத்து புனேயிலிருந்து மூன்று ஒட்டகங்களை வரவழைத்துள்ளது. நான்கு வயதாகும் ஆண் ஒட்டகத்திற்கு ராகுல் ட்ராவிட் என்றும், மூன்று வயதாகும் இரு பெண் ஒட்டகங்களுக்கு மதுபாலா,

# தமிழ் படிக்கும் ஒட்டகங்கள்!

## டிக்கெட், டிக்கெட்

சில்லறைத் தட்டுப்பாட்டாலும், நெரிசல் மற்றும் புழுக்கத்தாலும் சிட்டி பஸ் நடத்துநர்கள் எல்லாருமே 'எரிந்து விழும் இயந்திரங்க

அஞ்சலி என்றும் பெயர் சூட்டியிருக்கிறார்கள்.

தினசரி புல், காலி ஃப்ளவர், பீட்ரூட், கேரட் என்று பச்சை 'மீல்ஸ்' எடுத்துக் கொள்ளும் இந்த பாலைவனக் கப்பல்கள், வந்த மறுநாளே மதுரை 'அட்மாஸ்ஃபியருக்கு'ப் பழகிக் கொண்டாலும், தமிழுக்கு மட்டும் தலை வணங்க மறுக்கின்றன. சிறு வயது முதல் 'சலோ', 'பைட்டோ' என்று இந்தி ஆணைகளுக்குப் பழகிப் போனதால் சங்கத் தமிழ் மதுரையில், 'நில், நட, உட்கார்' என்று இடம் பெறும் ஆணைகளை இவை செவிமடுப்பதில்லை.

இந்த இந்தி ஒட்டகங்களைத் தமிழ் ஒட்டகமாக்கும் முயற்சியில், தினசரி தமிழ் ஆணைகளைப் புரிந்துகொள்ளப் பயிற்சி தந்து வருகிறார்கள். அறநிலையத்துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் அடுத்தமுறை திருப்பரங்குன்றம் வருவதற்குள் ஒட்டகங்கள் தமிழ் கற்றுக் கொண்டு விடும்!



• ஹிந்தி ஒட்டகங்கள்

## த்தியாசப் புள்ளிகள்!



• கண்டக்டர் பை!



• இளங்கோவன்

ளாகத்தான் இருக்கிறார்கள்.

ஒரு மாறுதலுக்கு இளங்கோவனைக் குறிப்பிடலாம். மதுரை பெரியார் பேருந்து நிலையத்திலிருந்து சத்திரப்பட்டி செல்லும் நகரப் பேருந்தில் கண்டக்டராகப் பணி புரிகிறார்.

சிறு வயது முதலே ஏதேனும் புதுமை செய்து, பிறரின் கவனத்தைக் கவரும் ஆர்வமுடைய இவர், தற்போது தோளில் தொங்கும் தோல் பையில் புதுமை செய்திருக்கிறார்.

பையின் மேல்புறத்தில் கடிகாரம் ஒன்றைப் பொருத்தியுள்ள இவர், உட்பகுதியில் அவசரத்திற்குத் தேவைப்படும் டெஸ்டர், கட்டிங் ப்ளேயர், ஸ்க்ரூ ட்ரைவர், ஸ்பானர் வகையறாக்களை அடுக்க இடம் ஒதுக்கி, அடுக்கி வைத்திருக்கிறார். தற்காப்புக்காக எளிதாக எடுக்கும் வகையில் கத்தி ஒன்றும் உண்டு. இது போக பேட்டரியில் இயங்கும் குட்டி பல்புகளும் பையினுள் உண்டு. இரவு மற்றும் கூட்ட நேரங்களில் ஸ்விட்சை 'ஆன்' பண்ணி விடுகிறார். ஃப்ரிட்ஜ் போல, பையைத் திறந்தாலே பல்பு எரிகிறது.

பொதுமக்கள் தன்னையும், தன் பையையும் வியப்போடு பார்ப்பதில் பெருமிதம் கொள்ளும் இந்த எம்.காம் பட்டதாரி, விரைவில் தம் பையில் 'டிக்கெட், டிக்கெட்' என்று குரலெழுப்பும் கருவியைப் பொருத்தப் போகிறாராம்!

# அட, இப்படி ஒரு இஸ்கூலா!



• பிரம்மாண்டமாக எழும் பள்ளிக்கட்டடம்

எதற்கெடுத்தாலும் 'அரசாங்கம்தான் செய்ய வேண்டும்' என்கிற மக்கள் மனோபாவத்தை வேரோடு பிடுங்கி யெறிந்திருக்கின்றனர் ஒரு சின்னஞ்சிறு கிராம மக்கள்.

கோவையிலிருந்து இருபது கி.மீ தூரத்தில் உள்ளது சின்னத் தடாகம் கிராமம். இங்கு இயங்கி வந்த பெண்கள் உயர்நிலைப் பள்ளிக்கு இடமுண்டே தவிர வகுப்பறைகள் இல்லை. அன்றாடப் படிப்பு, பாடம் நடத்துதல் எல்லாமே மரத்தடியில் தான். நான்கு வருடங்களுக்கு மேலாக இதே நிலைதான். பார்த்தனர் மக்கள். உடனடி வசூலில் இறங்கி பள்ளிக்கூடத்தைத் தாமே கட்ட ஆரம்பித்தனர். ஒன்றல்ல இரண்டல்ல. சுமார் நாற்பது லட்சம் ரூபாய் முதலீட்டில் கட்டப்பட்ட பள்ளி கம்பீரமாய் எழுந்து நிற்கிறது! எப்படி சாத்தியமானது இது?

இப் பள்ளிக் கட்டடக் குழுப் பொது மக்களை அணுகினோம்.

''1952 ஆம் ஆண்டிலேயே எங்கள் ஊருக்கு ஒரு பள்ளி கட்ட ஊர்ப் பெரியவர் வீரபத்திரக் கவுண்டர் பல ஏக்கர் இடம் கொடுத்து, மக்களிடமும் இடம் பெற்று (20 ஏக்கர்) ஆரம்பித்து வைத்தார். அவர் முயற்சியில், ஊர்ப் பொதுமக்கள் ஒத்துழைப்போடு ஆண்-பெண் இருபாலரும் படிக்கும் பள்ளிக் கட்டடம்தான் உருவாக்க முடிந்தது. அப்போதிருந்தே பெண்களுக்கு இங்கே தனியாக ஒரு பள்ளி கட்ட வேண்டும் என்பது அவர் விருப்பம். வருடங்கள் ஏற, ஏற மாணவர்களின் எண்ணிக்கை கூட, 1993-ல் பெற்றோர் - ஆசிரியர் குழு கூட்டம் கூட்டி பெண்களுக்கான தனிப் பள்ளிக்கு இடம் பிரித்து, கட்டடம் கட்டவும் தீர்மானம் போட்டோம். அரசுக்கும் எழுதினோம். ஒரு பள்ளி ஆரம்பிக்க வேண்டுமென்றால் - அதற்கு அங்கீகாரம் பெற ஒரு தொகையை அரசுக்கு மக்கள் கட்ட வேண்டும் என்பது விதி. அதன்படி அறுபது ஆயிரம் ரூபாயை மூன்றே நாட்களில் வசூல் செய்து (எல்லாமே பொதுமக்களிடம்) கட்டியும் விட்டோம். ஆனால் அப்போதைய அரசு பல முறை 'அங்கீகாரத்துக்கு' நாங்கள் அலைந்தும் அதைக் கொடுக்கத் தாமதப்படுத்தியது. எனவே வேலை நின்று போனது. தி.மு.க. அரசு வந்தவுடனே நம்ம ஊர் எம்.எல்.ஏ முயற்சியில் உடனடி அங்கீகாரம் கிடைக்கப் பெற, துரிதமாக வேலையைத் துவக்கினோம். எண்ணி இரண்டே வருஷம். நாங்கள் எதிர்பார்த்ததை விடவும் பொதுமக்களிடம் நல்ல வரவேற்பு; நல்ல வசூல்! பக்கத்து ஊர்களெல்லாம் செங்கல் சூளைகளே நிறைந்திருப்பதால் ஒரு செங்கல்கூட நாங்கள் இங்கே விலை கொடுத்து வாங்கவில்லை. எல்லாமே மக்களே கொடுத்து, கட்டடம் 90 சதம் முடிந்து விட்டது. இன்னும் பத்திருபது நாட்களில் திறப்பு விழாவும் நடத்த உள்ளோம். அரசுப் பள்ளிகள் என்றால் ஏதோ அனாதைப் பள்ளிகள் என்கிற போக்கில் தான் பார்க்கிறார்கள். அதனை ஆங்கிலப் பள்ளிகளுக்கு மேலாக உயர்த்திக் காட்ட வேண்டும். அதுவே எங்கள் குறிக்கோள்!''



ராமச்சந்திரன்

தடாகம், வீரபாண்டி, நஞ்சுண்டாபுரம் ஆகிய மூன்று பஞ்சாயத்துக்குட்பட்ட மாணவ, மாணவிகளே இங்கே படிப்பதால் இப் பகுதி சார்ந்தவர்களே இக்குழுவில் அங்கம் வகிக்கின்றனர். (எல்லா கட்சிப் பிரதிநிதிகளும் உண்டு!) இதுதான் தங்களின் வெற்றிக்குக் காரணம் என்கின்றனர் ஊர் மக்கள். கட்டடக் குழு, வசூல் குழு, ஆலோசனைக் குழு என நிறைய குழுக்கள். எம்.எல்.ஏ உட்பட அனைவருமே நேரம்

கிடைக்கும்போதெல்லாம் வீடு வீடாக இதற்கான வசூலுக்கு அணி திரண்டு போய் விடுகின்றனர். "இது அரசாங்கம் செய்ய வேண்டியது. அதை நம்பித்தானே வோட்டுப் போட்டோம்? பிறகு எதற்கு எங்களிடம் வருகிறீர்கள்?" என்று ஒருத்தர்கூடக் கேள்வி கேட்பதில்லையாம்.

எல்லாம் சரி. இத்தனை காலமாக இந்தப் பள்ளி மரத்தடியிலேயே இயங்கக் காரணம்?

• தலைமை ஆசிரியர்

தொகுதி தி.மு.க. எம்.எல்.ஏ.வும் இக் குழுவினரின் கௌரவத் தலைவருமான ராமசந்திரனைக் கேட்டோம்.

"இத் தொகுதி எம்.எல்.ஏ ஆனவுடன் எடுத்த முதல் நடவடிக்கையே இந்தப் பள்ளிக்கு அங்கீகாரம் பெற்றுத் தந்ததுதான். எட்டு வருடம் முன் அங்கீகாரத்துக்குப் பணமும் கட்டி விட்ட நிலையில் அதனைத் தர ஏன் அப்போதைய அரசு கணக்கம் காட்டியது என்று புரியவில்லை. இத்தனைக்கும் இத்தொகுதி (தொண்டாமுத்தூர்) அப்போதைய கல்வி அமைச்சர் அரங்கநாயகத்தினுடையது. அவரே இரண்டு முறை நேரில் வந்து பார்த்தும் செய்யலை. இந்த விவரங்களைச் சொல்லி சட்டசபையில் பேசிய போதே இதற்கு உடனடி அனுமதி கிடைத்து விட்டது. இதற்குக் கட்டடம் கட்ட வசூல் என்பது எல்லோருமே சேர்ந்து செய்ததுதான். முன்னாள் எம்.எல்.ஏ சின்னராசு, கவுன்சிலர் செல்வராஜு உட்பட அனைவரும் வீடு வீடாகப் போன அனுபவமும் உண்டு! இது இந்த மண் மக்களின் சுபாவமாகவே ஆகிப் போன விஷயம். பள்ளி அனுமதி வாங்கியதும் வெறும் ஆறு வகுப்பறை கட்டுவதாகத்தான் திட்டம் வைத்திருந்தோம். வசூலில் எதிர்பார்த்ததற்கு மேல் வரவு இருக்கவே அடுக்கு மாடியே கட்டி விட்டோம். இன்னும் மேலே 'ஆடிட்டோரியமும்' கட்டத் திட்டமிட்டுள்ளோம். இதில் அரசு உதவி எனச் சொல்லப் போனால் 'நமக்கு நாமே' திட்டத்தின் மூலம் ஏழரை லட்சம் ரூபாய் பெற்றுத் தந்துள்ளேன். அவ்வளவுதான்!"

பொதுமக்கள் மூலமும், அரசியல்வாதிகள் தலையீட்டினாலும் பள்ளிக்கு - பள்ளி ஆசிரியர்களுக்குப் பெரும் தொந்தரவு இருக்க வேண்டுமே. தலைமை ஆசிரியர் உள்ளிட்ட ஆசிரியர்கள் அனைவரையும் சந்தித்தோம்:

• கட்டடக் குழுவினர்

"நாங்க பட்ட கஷ்டங்களுக்கெல்லாம் விடிவை ஏற்படுத்திக் கொடுத்தவர்கள் எப்படி சார் எங்களுக்குத் தொந்தரவா இருக்க முடியும்? இங்கே, இந்தக் கட்டடம் என்றில்லை. பீரோ, டேபிள், அலமாரி, ஃபேன் முதற்கொண்டு அவர்கள் வாங்கிக் கொடுத்ததுதான். தினம் தினம் 'டீச்சர் உங்களுக்கு என்ன தேவை' என நச்சரித்து ஏதாவதொன்றை வாங்கி வந்து கொடுப்பதே அவர்கள் வழக்கமாக உள்ளது! பொருட்களை எங்கே வைப்பது என்றுதான் திணறிக் கொண்டிருந்தோம். அதற்கும் கட்டடம் கட்டிக் கொடுத்து விட்டனர். (ஏற்கனவே இருந்த பள்ளியில்தான் சில வகுப்பறைகள் இவர்களுக்காக ஒதுக்கப்பட்டிருந்தது) வேறென்ன வேண்டும்? பள்ளி ஆண்டு விழா, கலை விழா, இலக்கிய விழா எல்லாவற்றுக்கும் முன்னின்று நடத்துவதும் பரிசுப் பொருட்கள் வாங்கிக் கொடுப்பதும் அவர்கள்தான் என்றால் பாருங்களேன். அவர்கள் வேண்டுவதெல்லாம் பள்ளித் தேர்ச்சியை நூறு சதம் ஆக்கிக் கொடுங்கள் என்பதுதான். அதல பாதாளத்தில் இருந்த தேர்ச்சி விகிதத்தை தற்போது 95% வரை கொண்டு வந்து விட்டோம். அடுத்த வருடம் முழுத் தேர்ச்சிக்கும் வழி வகுத்துக் கொண்டிருக்கிறோம்!" என்கின்றனர் படு உற்சாகமாக.

கட்டுரை, படங்கள்: **கா.சு. வேலாயுதன்**

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

ஏகாதசி அன்று அச்வமேத மந்திரம் பாராயணம் பண்ணினால், அதைப் பண்ணக் கேட்டால், மகா புண்ணியம். ஆதி சங்கர பகவத் பாதாள், மாத்வாசார்யர், சுவாமி தேசிகன், எல்லோரும் வலியுறுத்திச் சொல்லக்கூடிய விஷயம் இது.

அதே மாதிரி துவாதசி அன்று, காடகம் என்று சொல்லக் கூடிய மூன்று பிரச்னம் – அதைப் பாராயணம் பண்ண வேண்டும்.

கலியுகத்தில் அச்வமேத யக்ஞம் பண்ணக்கூடாது என்றே சாஸ்திரம் சொல்லியிருக்கிறது. ஏனென்றால் அதைப் பண்ணக்கூடிய அதிகாரிகள் நம்மிடத்தில் இல்லை. ஆனால் அந்த மந்திரம் நம்மிடத்தில் இருக்கிறது.

அதனால், அந்த மந்திரங்களை விசேஷமாகப் பாராயணம் பண்ணினால், அதன் பலனை நாம் அனுபவிக்க முடியும்.

அதனால்தான் அஹோபில மடத்துப் பீடாதிபதியாக எழுந்தருளியிருக்கும்படியான ஸ்ரீமத் அழகிய சிங்கர் ஏகாதசியன்று அர்ச்சித, அச்வமேத பாராயணம், துவாதசி அன்றைக்கு காடக பாராயணம் கட்டாயம் பண்ணியாக வேண்டும் என்று நியமம் கொண்டிருக்கிறார். எங்கிருந்தாலும் – ஒரு காட்டிலே இருந்தாலும் பண்ண வேண்டும் என்று தொடர்ந்து நடந்து கொண்டேயிருக்கிறது.

அப்படிப்பட்ட அச்வமேத மஹாமந்திரம் நமக்கு க்ஷேமத்தைக் கொடுக்கும்படியான மந்திரம்.

'எதைப் பண்ணுகிறோமோ அதுவாக நாம் மாறுவோம்;

எதைப் பண்ணுகிறோமோ, அது பன்மடங்கு நமக்குக் கிடைக்கும்' என்கிறது சாஸ்திரம்.

கிருஷ்ணாவதாரத்திலே இதை விளக்கிச் சொல்கிற அழகான கதை இருப்பது தெரியுமல்லவா...?

கோபஸ்த்ரீகள் மத்தியிலிருந்து பகவான் அந்தர்தானமாகி விட்டான்! திடீரென்று மறைந்து விட்டான்! அனைவருக்கும் பைத்தியம் பிடித்த மாதிரி ஆகிவிட்டது. அப்போது ஒரு கோபஸ்த்ரீ இன்னொருத்தியின் பின்னலைப் பிடித்து இழுத்து நிறுத்துகிறாள். 'ஏ காளிய சர்ப்பமே! நில்லு இங்கே' என்று ஒரு கோபஸ்த்ரீ தலை மேல் இன்னொருத்தி நாட்டியம் ஆடுகிறாள்! பகவான் செய்த லீலைகளையெல்லாம் இவர்களே இங்கே பண்ணுகிறார்கள்!

அதிலே - ஒரு கோபஸ்த்ரீ தனியே போனாள். போனால், அங்கே ஒரு பெரிய பாறாங்கல். அதன் மேலே புஷ்பங்களாகச் சிதறிக் கிடக்கிறது.

'இது ஏன் இங்கே சிதறிக் கிடக்கிறது?' என்று ஒரு கோபஸ்த்ரீ கேட்கிறாள். அதற்கு இன்னொருத்தி பதில் சொல்கிறாள் :

"இது தெரியாதா? பகவான் கிருஷ்ணன் - குழந்தை - ஒரு கோபஸ்த்ரீயை இங்கே உட்கார வைத்து, அவளுக்குத் தலைவாரி பின்னி, பூ வைத்து அழகு பார்த்திருக்கிறான். அவள் பண்ணிய புண்ணியம்தானோ என்னவோ? கிருஷ்ணனை அலங்காரம் பண்ணியல்லவா அவள் பார்க்க வேண்டும்? அவனோ, அவளுக்கு அலங்காரம் பண்ணிப் பார்த்திருக்கிறான்..."

ஏன் இது நடந்தது என்று கேட்டால், ஜன்மாந்திரத்திலே அவள் – அந்த கோபஸ்த்ரீ பல புஷ்பங்களால் பகவானை அர்ச்சனை பண்ணியிருக்கிறாள். அதனால், பகவான் நிறைய புஷ்பங்களை அவளுக்குச் சூட்டி அலங்காரம் பண்ணிப் பார்த்திருக்கிறான்.

ஆகையினாலே, பகவானுக்கு நாம் நிறைய அர்ச்சனை பண்ணினால், அவன் பல மடங்காகத் திருப்பிக் கொடுத்து, விசேஷமாக அனுக்கிரஹிப்பான்.

நாம் அவனுக்குப் பண்ணுவதெல்லாம் அவனுடைய வாமனாவதாரம் போலே ரொம்பக் குறைவு. அவன் நமக்குக் கொடுப்பதெல்லாம் அவனுடைய் திரிவிக்கிரமாவதாரம் போல!



வாமனன் மாதிரி நாம் அவனுக்குச் சமர்ப்பிக்கிறோம். அவன் நமக்குத் திருப்பிக் கொடுக்கும்போது உலகளந்த சேவடி போல் நிறையக் கொடுக்கிறான்.

வாரி வாரி நமக்குக் கொடுக்கக்கூடியவன் பரமாத்மா.

விபு : எங்கும் பரவியிருக்கக்கூடியவன்.

ஏஷ : பரமாத்மா இங்கேயே இருக்கக் கூடியவன்.

வித்யாரண்யர் சொல்கிறார் : ஏஷ : என்றால் அருகில் இருப்பவன்.

சமஸ்கிருதத்தில் ஏஷ : என்றால் 'இதோ

# 31

இருக்கிறானே, இவன்' என்று பொருள்.

மதுராந்தகத்துப் பாடசாலையிலே படிக்கிறபோது, வகுப்பிலே பெயர் கூப்பிட்டால், 'யெஸ் சர், பிரசென்ட் சர், உள்ளேன் ஐயா' என்றெல்லாம் சொல்கிற மாதிரி 'ஏஷோஸ்மி' என்று சொல்ல வேண்டும்.

ஏஷ : அஸ்மி – 'நீங்கள் கூப்பிடுகிற நபராணவன் இதோ, அருகில் இருக்கிறேன்' என்று பொருள். 'ரொம்ப அருகில் இருக்கிறேன்.'

அது போல், பரமாத்மா – யக்ஞத்திலே

பிரகாசிக்கிறானே, அந்த மஹாவிஷ்ணு, இங்கேயே உட்கார்ந்திருக்கிறானே!

எங்கும் பரவியிருக்கிறவன் விபு – அவனை நாம் பார்க்கிறோம். அவன் பெருமையை அளவிட முடியாது. அதை யார் நினைக்கிறார்களோ அவர்கள் எல்லோருமே 'விபு'வாகிறார்கள்.

நாம் எல்லோருமே அணுவாகவிருக்கிறோம். பகவானுடைய விபுத்வம் என்னவென்றால் ஞானத்தில் விபுத்துவம் – அந்த விபுத்வத்தை நினைக்க நினைக்க அது நமக்கும் வந்து சேர்கிறது.

ஞானத்தில் விபுத்வம் – எல்லாவற்றையும் பூரணமாக அவனைப் போலே நாமும் அறிகிறோம். எங்கும் நமது ஞானம் பரவுகிறது.

இருந்த இடத்திலிருந்தே விஷ்ணு பூரணமாய் எல்லாவற்றையும் கிரஹிக்கிறான். விஷ்ணு தன்னைப் போன்றே நம்மை ஆக்குகிறான்.

அடுத்து பாருங்கள்... ஏஷவை பிரபு : – இவனே அனைத்துக்கும் எஜமானன். இவனை நினைக்கக்கூடியவர்களையெல்லாம் யஜமானர்கள் ஆக்குகிறான்.

அனைத்துக்கும் பலமாக – சக்தியாக – இருக்கிறான் பகவான் விஷ்ணு. அவனை நினைக்கக்கூடியவர்கள் எல்லோரும் நல்ல புஷ்டியோடு இருப்பார்கள். அதற்கும் மேலே பாருங்கள். தீர்த்தம், பால் – இவையெல்லாம் குறைவில்லாமல் கொடுப்பவன் அவன்.

தீர்த்தத்தைக் கொடுத்தான், பாலைக் கொடுத்தான், வஸ்திரத்தைக் கொடுத்தான் அவதார காலத்திலே.

'அம்பரமே தண்ணீரே சோறே
அறம்செய்யும் எம்பெருமான்...'

என்று வேத வாக்கியத்தைத்தான் ஆண்டாள் திருப்பாவையிலே சொல்கிறாள்.

தீர்த்தத்தைக் கொடுத்தவன், வஸ்திரத்தைக் கொடுத்தவன், பாலைக் கொடுத்தவன் – கிருஷ்ணாவதாரத்திலே. இவனை நினைத்தால் நமக்கு நிறைய பால் கிடைக்கும். நல்ல தண்ணீர் கிடைக்கும். இவையிரண்டும் நிறைய இருக்கிற இடத்திலே நாம் குறைவில்லாமல் இருப்போம்.

**எ**ல்லாவற்றையும் தரிக்கக்கூடிய சக்தி பகவானுக்கு இருக்கிறது. நமக்குக் கொஞ்சம் வந்துவிட்டாலே கஷ்டப்படுகிறோம். சரீரத்துக்கு ரோகம் வந்தால் கஷ்டப்படுகிறோம். நம்மைச் சேர்ந்தவர்களுக்குக் கஷ்டம் வந்தால் துடிதுடித்துப் போய்விடுகிறோம். கிருஹத்திலே கஷ்டம் வந்தால் அடியோடு தாளமுடியலையே தாளமுடியலையே என்கிறோம். சின்ன கஷ்டம் வந்தால் கூடக் கஷ்டப்படுகிறோம்.

## அருள்வாக்கு

**ஸ்**வாமி ஒருவர்தான். அவரே மூன்று ரூபங்களை எடுத்துக்கொண்டு பிரம்மாவாகச் சிருஷ்டிக்கிறார், விஷ்ணுவாகப் பரிபாலிக்கிறார், ருத்திரனாக சம்ஹாரம் செய்கிறார்.

உண்மையில் இவர்களும் வேறு வேறு இல்லை. கோர்ட்டுக்குப் போகும் போது தாசில்தார் ஸூட் போட்டுக் கொண்டிருக்கிறார், பூஜை செய்யும்போது அவரே பஞ்சகச்சம் கட்டிக் கொள்கிறார். பத்தினி அகத்தில் இல்லாமல் அவரே சமைக்க நேர்ந்தால் அப்போது துண்டை மட்டும் இடுப்பில் சுற்றிக் கொள்கிறார். நாம் சாமானிய ஜீவர்கள் – வேலைக்குத் தக்கபடி உடுப்பை மட்டும் மாற்றிக் கொள்கிறோம். சர்வ சக்தனான ஸ்வாமி வேலைக்கு ஏற்ப ரூபத்தையும்

பகவான் விஷ்ணுவோ எல்லாவற்றையும் தாங்கிக் கொண்டிருக்கிறான். 'அவன் எல்லாவற்றையும் தரிப்பவனாயிற்றே' என்று விஷ்ணுவை யார் நினைக்கிறார்களோ, அந்த விஷ்ணு சப்தத்துக்கு அதுவே பொருள் என்று யார் நினைக்கிறார்களோ அவர்கள் எந்த கஷ்டத்துக்கும் உள்ளாக மாட்டார்கள் என்கிறது வேதம்.

எங்கும் பரவியிருக்கும் விஷ்ணு எங்கும் வியாபகனாகவும் இருக்கிறான். அப்படியென்றால் என்ன அர்த்தம்...?

எந்த ஊருக்கு வேண்டுமானாலும் நாம் போகிறோம். போகிற இடத்திலே 'இவர் வந்துவிட்டாரே! எப்போதடாப்பா இங்கேயிருந்து போகப் போகிறார்!' என்று அபகீர்த்தியாலே உலகம் முழுவதும் பரவியிருப்பதில் என்ன லாபம்!

அப்படியன்றி, கீர்த்தி பிரதிஷ்டையோடு, 'இதோ வந்துவிட்டானே! இதோ வந்துவிட்டானே' என்று கீர்த்தியானது – புகழானது முன்னே ஓட வேண்டும். பகவான் விஷ்ணுவுக்கு அது நடக்கிறது. விஷ்ணு வருகிறான் என்று சொல்கிறபோதே அவன் கீர்த்தி முன்னே செல்கிறது.

இப்படி, கீர்த்தியினாலேயும் உயர்ந்த ஞானத்தினாலேயும், உயர்ந்த செல்வத்தினாலேயும் உயர்ந்த செல்வாக்குடனும் பரமாத்மா எங்கும் பரவியிருக்கிறான்.

அது மட்டுமல்ல; எங்கும் பிரதிஷ்டாபகமாகவிருக்கிறான் – அதை முக்கியமாக இந்த இடத்திலே வியாக்யானம் பண்ணுகிறபோது, ஆங்காங்கு திவ்ய தேசங்களிலே கோயில் கொண்டு பிரதிஷ்டாபகனாக விளங்குகிறான் என்று சொல்லலாம்.

அவனை நினைக்கக்கூடியவர்களையெல்லாம் பிரதிஷ்டையுடையவர்களாக ஆக்கு

மாற்றிக் கொள்வார். பார்க்கப் போனால் சரீரம் என்பதே ஆத்மாவுக்கு ஒரு உடுப்பு மாதிரிதான். கீதையில் பகவான் இப்படித்தான் சொல்லியிருக்கிறார்.

அல்ப சக்தர்களான நமக்கு வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு வேஷங்கள் ஏற்படுகின்றன. சர்வ சக்தரான ஸ்வாமி ஒரே சமயத்தில் பல காரியங்களில் ஈடுபட்டுப் பல வேஷங்களையும் போடுவார். நாம் ஒரு சமயத்தில் ஒரு வேலைதான் செய்கிறோம்; ஸ்வாமி ஒரே சமயத்தில் சகல வேலையும் செய்வதால் எல்லா வேஷமும் போட்டுக் கொண்டிருக்கிறார். இவற்றை வெவ்வேறு தெய்வ வடிவங்களாகச் சொல்கிறோம். இந்தத் தெய்வ ரூபங்களில் மகா விஷ்ணு, ஈசுவரன், அம்பாள், விக்நேசுவரர், ஸுப்ரம்மணியர் போன்றவர்கள் ஒரு சமயத்தில் ஏதோ ஒரு மாதிரி காரியம் மட்டும் செய்தாலும் கூட, அவர்களுக்கு உள்ளுக்குள் தாங்கள் முழு முதல் ஸ்வாமிதான் என்று தெரியும். அதனால் அவர்கள் பக்தர்களுக்கு மோக்ஷ பரியந்தம் எல்லா அநுக்கிரஹங்களும் செய்வார்கள்.



**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

கிறான். மற்றவர்களெல்லாம் அவர்களை எப்போதும் நினைவுகூறும்படியாகப் பண்ணுகிறான்.

பகவான் தேஜஸ்வி. அவனை நினைப்பவர்களையெல்லாம் தேஜஸ்வியாக மாற்றி வைக்கிறான்.

அதற்கும் மேலே, பகவானுக்கு 'பிரும்ம வர்சஸ்' என்று பெயர். 'பிரும்மவர்சஸ்' என்பது இரண்டு புருவங்களுக்கு மத்தியிலே இருக்கக்கூடியது. அப்படிப்பட்ட பிரும்மவர்சஸ் உடைய முகத்தை மற்றவர்களால் ஏறிட்டுப் பார்க்க முடியாது. பார்க்க முயன்றால் தலை தானாகக் குனிந்து விடும்! அதுதான் பிரும்ம வர்சஸ்.

இந்த பிரும்ம வர்சஸ் என்பது எங்கேயிருந்து வரும்? காயத்ரியை ஜபிக்க ஜபிக்க பிரும்மவர்சஸ் தானாக முகத்திலே தெரியும். 'நித்யம் ஆயிரம் காயத்ரி ஜபிக்கிறேன்' என்று ஒருத்தர் சொல்ல வேண்டியதில்லை. ஜபிக்கிறாரா? இல்லையா? என்பதை அகத்தின் அழகை – முகம் காட்டிக் கொடுத்துவிடும். அடுத்ததைக் காட்டும் பளிங்கைப் போல காயத்ரி ஜபிப்பவர்களை அவர்கள் முகமே காட்டிக் கொடுக்கும்.

காயத்ரி பிரதிவாக்ய தேவதை விஷ்ணு. அதை ஜபிப்பவர்களெல்லாம் பிரும்மவர்சஸ்வியாகிறார்கள்.

ஒரு ராஜ்யத்தைப் பரிபாலனம் பண்ணக் கூடிய சக்கரவர்த்தி, நோயில்லாமல் இருக்க வேண்டும். எங்கும் அவன் செங்கோல் செலுத்த வேண்டும்.

விஷ்ணுவுடைய சம்பந்தமில்லாமல் ராஜ்யத்தைப் பரிபாலனம் பண்ணும்படியான சக்தி ஒருத்தனுக்கு ஏற்படாது.

ஆகையினால்தான், 'திருவுடை மன்னரைக் கண்டால் திருமாலைக் கண்டேன்' என்றார் நம்மாழ்வார்.

– இதற்கும் மூலம் வேதத்தில்தான் இருக்கிறது.

தீர்க்கமானவன் பகவான். அவன் எதைக் கொடுக்கிறான் என்றால், தீர்க்கமான ஆயுளைக் கொடுக்கிறான். அவன் தீர்க்கமானவன் என்று எண்ணுபவர்களுக்கெல்லாம் தீர்காயுள் கொடுப்பானாம்.

'தீர்கம்' என்று சொல்கிறபோதே ஒலியே நீளத்தைக் குறிக்கிறது பாருங்கள்!

இதற்கும் மேலே அந்த பகவான் விஷ்ணுவினிடத்திலேதான் எல்லாம் இருக்கிறது என்று நினைப்பவர்களுக்கு என்ன கிடைக்கும்?

நினைப்பவர் எல்லோருக்கும் யோகமும் ஏற்படும்; க்ஷேமமும் ஏற்படும்.

அதனால்தான் யோக க்ஷேமம் வகாம் யகம் என்று கீதையிலே பரமாத்மா க்ஷேமம் வேறு யோகம் வேறாகச் சொல்கிறார்.

ஒருத்தரைப் பார்த்து 'க்ஷேமமா?' என்று கேட்கிறோம். 'யோகமா?' என்று கேட்பதில்லையே!

'க்ஷேமமா?' என்றால் இருப்பது போதாமல் இருத்தல்.

'யோகம் அடிக்கிறது அவருக்கு' என்றால், இத்தனை நாள் கிடைக்காததெல்லாம் புதிது புதிதாகக் கிடைக்கிறது!

யோகம் – இப்படி எல்லாம் கிடைத்துக் கொண்டிருக்கும் நிலை.

க்ஷேமம் – கிடைப்பது சற்று போதாமல் இருக்கிற நிலை!

இவை இரண்டையுமே கொடுக்கிறவன் விஷ்ணு என்று வேதமே அச்வமேத பிரகரணத்திலே சொல்கிறது.

(தொடரும்)





Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 /99* Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka